## அத்தியாயம் 2.

### அண்ணல் மான்மியம்

*மேற்சொன்ன மஹா கயிலையின் தாழ்வரையில் (கீழ்க்கயிலை) ஆடகப் பூமி உளது. அது ஒரு கோடி சதுரமுள்ளது. அதில் உருத்திரர், இருடியா முதலானோர் உளர். அதன் எட்டுத்திசையிலும் எட்டு வாயில்களும் எட்டுக் கோபுரங்களும் உள. கீழ்க்கோபுரவாயிலில் விநாயகரும், தென்கீழ்த்திசையில் வீரபத்திரரும, தென் திசையில் நந்திதேவரும், தென்மேற்குத்திசையில் வடுகரும், மேற்றிசையில் கந்தவேளும், வடமேற்குத்திசையில் துர்க்கையும், வடதிசையில் மாகாளரும், வடகீழ்த்திசையில் மாசாத்தரும் தத்தங் கணங்களுடன் இறைவனை வழிபாடு செய்து உறைகின்றனர். அங்குப் பாதகர்களும், அசுரர்களும் நெருங்க இயலாது. ஊழிக்காலத்தில் அண்ணல் வீற்றிருக்கும் இக்கிரி (கீழ்க்கயிலை) பிரளயத்தில் அமிழாது உயர்ந்தோங்கி நிற்கும். இக் கயிலை வெற்பை நினைப்பவர் பிறவிக்கடலிற் படியார். சிவன் ஏவலால் அங்குத் தங்க முடியுமே அன்றி உலக பந்தம் உள்ளோர் அங்கு அணுகமுடியாது. உருத்திரர், தேவர், கணத்தோர், பக்தர் முதலானோர் பூசிக்க இங்கு இறைவர் வீற்றிருக்கின்றார்.*

*இம்மான்மியத்தை எவன் கருதி உரைக்கின்றானோ, கேட்கின்றானோ, எழுதுகின்றானோ அவனது சொற்படி, (இவ்விரண்டு கயிலையிலும் வீற்றிருக்கும்) இறைவன் ஏவலால், ஐம்பூதங்களும் நிலைநிற்கும், பருதி எழும், இந்திரன் தன் பதியைப் பெறுவன். இம்மான்மியத்தைப் பத்திசெய் மனத்தோருக்கன்றி மற்றவர்க்குச் சொல்லுதல் அடாது. இம்மான்மியத்தை வியாக்ரபாதர் உபமந்யு முனிவருக்கு உரைக்க, அவர் கண்ணனுக்கு உரைக்க, கண்ணன் அருச்சுனனுக்கு உரைத்தான். இவர்கள் யாவரும் போகந் துய்த்து வீடு அடைந்தார்கள்.*

## அத்தியாயம் 2.

## அண்ணல் மான்மியம்

### கயிலை வரைக்கீழ் ஆடகப்பூமி

அறுசீர் விருத்தம்

46. முனிவிர்! அப்பெருந் தாழ்வரைக் கீழயல்
 முற்றுமா டகப்பூமி
புனித மாங்குணக் காதியோர் கோடியெப்
 புறமுமவ் வளவைத்தாம்
பனிம திச்சடை யுருத்திரர் இருடியர்
 பத்தர்பண் ணவர்பூதர்
இனிய சிற்பரா னந்தமெய் துற்றுவீட்
 டின்பமுற் றிருக்கின்றார். (1)

47. அன்ன ஆடகப் பூமிசூழ் பொன்மதில்
 அகலமும் ஒரு கோடி
மன்னி யோசனை யுன்னதம் இரட்டி அம்
 மாமதிற் கிருநான்கு
துன்னு கோபுரம் வானினின் றோங்குவ
 தொன்றுதிப் பியமாகி
மின்னு பூமிவான் மேவுநா னுமணி
 மேவுவ வொருகோடி. (2)

---

46. குணக்கு-கிழக்கு.

47. திப்பியம்-திவ்யம்; ஒன்று...ஒருகோடி நானுமணிமேவுவ, வான்மேவும்.

எண்பெரு வாயில்கள்

48. **கீட்டி சைப்**பெருங் கோபுர வாயில்வாய்க்
 கீற்றுடல் வயிறெக்குங்
கோட்டு வெண்பிறைச் சடிலமுக் கட்கடாங்
 கொழித்தெறி கவுட்கைம்மா
ஈட்டு மாமுகக் குடவயிற் றெழில்கொள்சிற்
 றிணையடி யேரம்பன்
வாட்ட மில்லெறுழ் வலிப்பெரும் பூதர்கள்
 மருங்குசூழ் தரவாழும். (3)

49. **அங்கி யின்றிசைக்** கோபுர வாயில்வாய்
 அளியிதழ் குடைந்தூதும்
பங்க யந்திகழ் தக்கன்மா மணிமுடி
 பறித்தழழ் றலையிட்டுப்
புங்க வர்குழாங் கெட்டிரிந் தோடவே
 பொருதுகே டகங்கட்கஞ்
செங்கை பற்றிய வீரபத் திரன்வரூ
 தினியுட னுறைகிற்பான். (4)

50. **தென்றி சைப்**பெருங் கோர்புர வாயில்வாய்ச்
 செங்கையிற் பிரம்போடு
வென்றி சேர்மழு மான்தரித் தணியுடை
 வீக்குகச் சுடைகொற்ற
மின்றி யங்குபொற் சுரிகைவாள் ஒளிவிட
 விண்ணவர் குழுநீக்கிக்
குன்றம் அன்னதோள் நந்தியங் கடவுள்தன்
 குழுக்கனத் துடன்வைகும். (5)

51. **நிருதி யந்திசைக்** கோபுர வாயில்வாய்
 நிமலனை வலிற்சிந்தை
கருதி மாமிடல் கெழுதடந் தோள்மிசை
 கமழ்நறுந் துழாய்மார்பன்
சுருதி நான்முகன் வெண்டலை மாலைகள்
 துயல்வர மிலைந்தூன்கால்
குருதி முத்தலை வேற்படை வடுகன்வா
 குறக்கணத் துடன்வாழும். (6)

---

48. கீற்று உடல்-தலை உருவத்தின் வேறுபட்ட உருவத்து உடல். எக்கும கோடு-மிசைச் செல்லுங்கோடு. ஏரம்பன்-விநாயகர். எறுழ்வலி-மிக்கவலி. 'எறுழ்வலி முழவுத்தோளார்'. **சிந்தா. 785.**
49. அளி-வண்டு; புங்கவர்-தேவர்; வரூதினி-படை.
50. சுரிகை-உடைவாள்.
51. மிடல்-வலி; துயல்வர-அசைய; கால்-சிந்தும்; வாகு-அழகு.

52. குடதிசைப் பெருங் கோபுர வாயிலிற்
கூன்முகப் பிறைவேணிக்
கடவுள் தன்பெருங் காதலாற் பயந்தருள்
**கந்தவேள்** கடைநாளில்
வடவை யம்பொறி காலயிற் படைகொடு
மல்குவான் அனிகத்தோ(டு)
இடர கற்றிநற் றுயுமை தனையுளத்
தென்றுமேத் திசைத்தோங்கும். (7)

53. **மாருதத்திசைக்** கோபுர வாயிலில்
வரிநெடும் பிணர்க்கோட்டுக்
கூர முற்பொறி விழிநெடு நாக்கடை
குதட்டுமா மயிடன்வெம்
போர ளிப்படை தலைதுணித் தேறிய
பொம்மல்வெம் **முலைக் கன்னி**
சேரும் அண்ணல்தஞ் சிலைதனை யுளத்திடை
சிந்தைசெய் துறைகிற்பாள். (8)

54. **உத்தரத்திசைக்** கோபுர வாயிலில்
உறைகுவன் கரமீது
முத்த லைப்படை வெண்டலை யோடுபெய்
முகிலுறழ் வடிவாகிச்
சித்த மீதினிற் பரனையும் உமையையுந்
தினம்வழுத் துபுகூர
வைத்து வந்துதன் கணத்தொகை யொடுமிடல்
வலிகெழு **மாகாளன்.** (9)

55. கொற்ற மேவும் **ஈசானமா திரப்**பெருங்
கோபுர மணிவாயிற்
கற்றை யஞ்சடைச் சுருள்முடி குண்டலக்
காதிணை கல்லோலம்
எற்று பைங்கடல் மேனி **மாசாத்தன்** மூ
இலைப்படை யிறைபாலன்
மற்ற ரன்தனக் கேவல்சென் னியிற்பெரு
மகிழகம் பரித்தாரும். (10)

---

52. அனிகம்-சேனை.
53. மாருதத்திசை - வடமேற்குத்திசை. மாருதம் - வாயு. பிணர் - சொரசொரப்பு. மயிடன்-மயிடாசுரன்; பொம்மல்-பருமன்; கன்னி-துர்க்கை; அண்ணல்தம் சிலை-அண்ணலுக்கு உரிய சிலை.
54. உறழ்-உவமை உருபு; வழுத்துபு-வழுத்தி; மிடல்-வலிமை.
55. ஈசானமாதிரம்-வடகிழக்குத் திசை. மாதிரம்-திசை; கல்லோலம்-அலை; மூவிலைப் படையிறை - சிவன்; ஏவல் சென்னியிற்பரித்து, மகிழ் அகம் பரித்து, ஆரும்—(உள்ளம்) நிறைந்திருப்பார்.

ஆடகப் பூமிக் கயிலையில் இறைவன் வீற்றிருத்தல்

56\. இத்த கைப்பெருஞ் செல்வர்கள் யாவரும்
எவ்வுல கமுங்காத்துச்
சித்த மேமகிழ்ந் துறைந்தனர் இப்பெருஞ்
சிலம்புதிப் பியமாகிப்
பத்தி வாழ்பல விதமணிச் சிகரமும்
பாங்கர்சூழ் எயில்தானும்
நித்தம்ஆனது; பாதர்கள்அசுரர்கள்
நேருதற்(கு) அரிதாமால். (11)

57\. அண்ண லங்கிரி, முநிவிர்! மாப் பிரளயம்
அளவற வருங்காலை
விண்ணின் மேற்றிகழ் அண்டமா முகட்டினும்
மீதெழுந் துயர்ந்தோங்கும்
எண்ணி லாதபல் லுயிர்பிர மாதிகட்
கினியநல் லருள்வீசும்
வண்ணம் நீடுமிக் கிரிமிசை வேண்டுநல்
வரமருள் அரன்வைகும். (12)

58\. தாங்கு நாவலந் தீவுறை கயிலையிற்
சம்புவாம் பரமேசன்
ஆங்கு மேவியெக் காலுமிச் சையினுயிர்த்
தண்டஞ்செய் தருள்கிற்பான்
ஓங்கு நற்றவ முநிவிர்! அக்கயிலைவெற்
புடையபே ரொளிநாமம்
பாங்கி னுலவை நினைப்பவர் இந்திய
பவக்கடல் படியாரால். (13)

59\. அந்த ணீர்!சிவன் ஏவலால் தரிப்பதே
யன்றிமற் றிவைபூமி
பந்தம் ஆனவை யல,இருங் கலைவலோர்
பரவொளி மயமாகச்
சிந்தை செய்குவர் கடல்வயி றுளைந்துவாய்
திறந்துயிர்த் திடச்சீறி
வந்த கார்விடம் நுகர்பெருஞ் **சதாசிவன்**
வடகயி லையில்வைகும். (14)

56\. சிலம்பு-மலை, பாதர்கள்-பாதகர்கள்-இடைக்குறை;
57\. முநிவீர்! அண்ணல்அங் கிரி...ஓங்கும்.
58\. இந்தியம்-இந்திரியம்.

60. அளப்ப ருந்தொகை யுருத்திரர் அமரர்கள்
அரிமுதற் கணத்தோர்கள்
துளக்க றுத்தவப் பத்தர்கள் நறைமலர்
தூய்த்தொழு தடிபோற்றி
யுளத்தொ டுந்தொழி லொடுமுறை யொடுஞ்செயும்
ஒப்பில்பூ சனைகொண்டு
விளக்கம் ஆகியே மல்குசெல் வத்துடன்
விமலனக் கிரிமேவும். (15)

அண்ணல் மான்மியச் சிறப்பு

61. இருகு வட்டினும் வதிந்தருள் இறையவன்
ஏவலால் மருத்தங்கி
பெருக லன்றியைம் பூதமுந் தந்நிலை
பிறழ்ந்திடா நிலைநிற்கும்,
பருதி வந்தெழும், இந்திரன் வானவர்
பதிபெறும், இக்காதை
கருதி யாவன்மற் றுரைப்பவன் கேட்பவன்
கட்டுரை படுப்போனல். (16)

62. இத்த கைத்தவம் புரிபவர் அவர்முனம்
இறையவன் வெளிப்பட்டுச்
சித்த மீதினில் வேண்டுநல் வரந்தனைச்
சிதைப்பற அளிப்போனற்
பத்தி யுற்றிடு மாணவர்க் கன்பினைப்
பார்த்தளித் திடவேண்டுங்
கொத்த விர்ஞ்சடை யண்ணல்மான் மியம்எவர்க்
குங்கொடுத் திடலாகா. (17)

63. முனிவிர்! இப்பெரு மான்மியங் குய்யவை
மொழிந்திடும் உரைத்தென், மால்
துனிய கற்றிடும் அந்தணர் புங்கவன்
தொல்வியாக் கிரபாதன்
இனிய னுமுப மன்னியுக் கிக்கதை
யிசைத்தனன் அதுகேளா
நனிம கிழ்ச்சியாற் போகமே துய்த்திவண்
நற்பதம் அவனுற்றான். (18)

---

61. மருத்து (வாயு), அங்கி (அக்கினி) இக்காதை உரைப்பவன், கேட்பவன், கட்டுரை படுப்போன்—ஆகிய இம்மூவரால் (இறைவன் ஏவலால்) ஐம்பூதம் நிலைநிற்கும், பருதி எழும், இந்திரன் பதிபெறும்.
62. ஆல்-அசை, மாணவர்க்கன்பினை-மாணவர்க்குள்ள அன்பினை.
63. குய்-குய்யம்-கடைக்குறை-மறைபொருள்; மால்-மயக்கம்; துனி-குற்றம்-கேளா - கேட்டு.

64. அப்பெ ருந்தவ முநியினால் இக்கதை
யனைத்துமா தவன்கேட்டே
யொப்ப ரும்பரன் கயிலையிற் சேர்ந்தனன்
உளமகிழ்ந் தவன்தன்னால்
இப்பி றப்பகல் காதையை யருச்சுனன்
இயல்புடன் அதுகேளாச்
செப்பு தற்கரி தாம்பகை பூண்டமர்
செயித்துவீ டடைந்தானால். (19)

---

## அத்தியாயம் 3.

### சூராதிகளின் தோற்றமும் ஒடுக்கமும்

‘சூரன் மயிலுஞ் சேவலும் ஆனான். சிங்கமுகன், தாரகன் என்ன ஆயினர்?’ என முனிவர்கள் வினவச் சூத முனிவர் கூறுகின்றார். முன்னொரு கற்பத்திற் சிவபிரானைத் தரிசிக்க மயில்மீதேறி முருகவேள் கயிலையை அடைந்தார். தமது மயிலையும் சேவலையும் வெளியே நிறுத்திவிட்டு இறைவன் திருமுன் சென்றார். அவருக்குப்பின், அயனும் திருமாலும் மற்றைய தேவர்களும் கயிலைக்கு வந்து தத்தம் ஊர்திகளை நிறுத்திவிட்டு உள்ளே சிவபிரானைத் தரிசிக்கச் சென்றனர். அப்பொழுது சூரன், பதுமன், சிங்கமுகன், தாரகன் என்னும் நான்கு பூதர்களும் மயிலையும் சேவலையும் பார்த்து ‘கருடன், அன்னம் முதலான ஊர்திகள் உங்களை மதியாத செருக்கை என்னென்பது?’ என்று தோள் மூட்டி அவற்றுடன் சேர்ந்து கருடனாதிய ஊர்திகளை வதைத்துத் தேவர் உலகங்களைச் சிதைத்தனர். இந் நிகழ்ச்சிகளைத் தேவர்கள் முறையீட்டால் அறிந்த முருகவேள் பூதர்கள் நால்வரையும் நிருதர்களாகுக எனச் சபித்தார். பின்னர், அவர்கள் வேண்டுகோளுக்கிரங்கி ‘நீங்கள் அப்பிறவியில் எம்மால் வதைக்கப்பட்டபின் பழைய நிலையை அடைவீர்கள்’ என அருளினர். சூரனும் பதுமனும் ‘அண்ணலே! நாங்கள் மயிலும் சேவலுமாகித் தங்களுக்குப் பணி செய நெடுங்காலமாகத் தவம்புரிகின்றோமே’—என விண்ணப்பிக்க, நீங்கள் இருவீரும் ஒரு வடிவாகிச் ‘சூர பத்மா’ என்னும் பெயர்தரித்து எம்முடன் போர்புரியும்போது எமது ஆணையால் மயிலும் சேவலும் ஆவீர்கள்’ என அருள்புரிந்தார். பூதர்களால் அழிபட்ட ஊர்திகளும் ஊர்களும், முருகவேளின் அருள்மொழியால், முன்போல விளக்கமுற்றுச் செழிப்புற்றன. இந் நான்கு பூதர்களும் இறைவனிட்ட சாபத்தின்படி காசிபற்கு மைந்தராகத் தோன்றினர். தாரகனும் சிங்கமுகனும் இறந்து வீடு அடைந்தனர். சூரனும் பதுமனும் மயிலும் சேவலும் ஆனார்கள்.

## அத்தியாயம் 3.

### சூரபத்மன், சிங்கமுகன், தாரகன் இவர்கள் தோற்றமும் ஒடுக்கமும்

அறுசீர் விருத்தம்

65. தொல்லைமுநி வரர்மகிழ்ந்து சூரபத்மன் பின்னவர்தந்
தோற்றந் தன்னுட்
செல்லையுறழ் விற்றடக்கைச் சிங்கமுகன் தாரகனெனத்
திசைசென் றாரென்(று)
ஒல்லையறிந் திலஞ்சூரன் மஞ்ஞையுடன் சேவலுமா
யுற்றான் என்றாய்
எல்லையிலத் தன்மைவிரித் தியம்புகெனச் சூதமுநி
யிசைக்க லுற்றான். (1)

---

64. மாதவன்-கண்ணன்.

65. செல்-மேகம், இடி; ஒல்லை-விரைவு;

66. முன்னரொரு கற்பநறு முளரியண்ண லாதியர்தம்
முதல்வ னை
பன்னிருகை யறுமுகவேள் பருமணிப்பூண் மயிலின்மிசை
பாரிற் போந்தே
யுன்னரிய திருவிளையாட் டோவறச்செய் தண்டமண
வோங்கல் வேந்தாம்
பன்னருஞ்சீர்க் கயிலைசென் றப் பரிக்குந்தே வற்குமஞ்ஞை
பரித ணந்தே, (2)

67. திருமலையின் கீழ்ப்பசிய சிறகர்மயூ ரமு,மேருச்
சிலைது ளக்க
பொருகடுங்கால் மொண்டிரைக்கும் இருசிறகர் துகள்பரப்பிப்
புணரி சுண்ட
திரிதருசெஞ் சூட்டுமணிச் சேவலங்கே தனமும்,நிறீஇச்
செவ்வாய் செம்பொன்
குருகுசெறி மலர்க்கையுமை கொண்கனினி திருக்குமிடங்
குறுகி னைல். (3)

68. கண்ணுதலம் பிகைகுமரற் கண்டவன்தன் வரவறிந்து
களிக்குங் காலை
நண்ணுமலர் அயன்திருமால் ஆதியர்தம் ஊர்திமஞ்ஞை
நணுக வுய்த்துப்
பெண்ணொருபா கன்திருமுன் யாவரும்போந்தனர்; முநிவிர்!
பின்னர் அன்னோ!
திண்ணியவூர் திகள்வணங்கா திருந்தனசே வலைமயிலைச்
செருக்கில் அம்மா. (4)

---

66. முளரி அண்ணல்-பிரமன்; முளரி-தாமரை; அண்டம் அணவு ஓங்கல் வேந்து-வான் அளாவும் மலையரசு; சென்று-அ.பரிக்கும் (சுமக்கும்) - தே மயில் . தெய்வ மயில், வற்கும் மயில் (அசுவ) கதிகொள்மயில்.

67. கடுங்கால் - கொடுங்காற்று ; புணரி - கடல் ; கேதனம் - கொடி ; நிறீஇ - நிறுத்து ; குருகு-வளையல் ; உமை கொண்கன் (கணவன்)-சிவன்.

இச்செய்யுள் ' படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகை யென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாகம் ; உதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே.

என்னும் **கந்தரலங்காரச்** செய்யுளை (12) நினைவூட்டுகின்றது.

68. கண்ணுதலும் அம்பிகையும் குமரனைக்கண்டு. அன்னோ-அந்தோ ! இரக்கக் குறிப்பு அம்மா-வியப்புக்குறிப்பு.

சூரன் முதலோர் கருடன் ஆதியோர்க்கு இடர்செய்தல்

69. அறத்துறைபோ கியகளிக்கும் அருமுனிவீர்! பொறிவிழிவெற்
பகட்டுப் பேழ்வாய்க்
குறட்படிவப் பெரும்பூதம் ஒருநான்கவ் வூர்திகள்மீக்
கொளுமா னத்தை
விறற்கொடிச்செஞ் சேவலுக்கும் வீரமயிற் குங்காட்ட
வெகுண்டெல் லாமெப்
புறத்தும்வளைத் தவ்வூர்தி களைத்துரத்தித் தொடர்ந்துமனம்
புழுங்கிப் பின்னும், (5)

70. குடிலையின்மெய்ப் பொருள்வினவிக் கோகனகன் நான்குமுடி
குலுங்கக் குட்டி
விடலரிய சிறைபுகுத்தி மீளவும்விட் டருள்முருகன்
விறற்ப தாகை
கடவுபரி யெனவணங்கிற் றில்லையெனச் சென்றயனூர்
கடைநாட் போல
வெடிபடப்பாய்ந் திடித்தயன்தன் ஊர்தியையும் வதைத்தும்பர்
விரைந்து சென்றே, (6)

71. மன்றல்கமழ் தண்டுளவ மாலுததி வையமுன்போல்
வைத்த செய்ய
குன்றிவிழிக் கருங்கேழல் கோடுபறித் திறையவர்க்குக்
கொடுக்குஞ் செவ்வேள்
வென்றிமயில் சேவலென மதித்திறைஞ்சா திதுஎனமால்
வியனன் நாட்டைக்
கன்றியுருத் தெழுந்திடித்துக் கருடனையும் உட்குருதி
கக்க வீட்டி, (7)

---

69. போகிய-செல்ல ; வெற்பு அகடு-மலையன்ன வயிறு. பூதம் ஒரு நான்கு - நால்வர் பூதர்கள் ; அவ்வூர்திகள் - கருடனும் அன்னமும் ; மீக்கொளு மானம்-அளவுக்கு மேற்பட்ட கர்வம்.

70. குடிலை - பிரணவம் ; கோகனகன்-பிரமன். "குட்டினன் அயன் நான்குமாமுடி களுங் குலுங்க" [கந். புரா. அயனைச்சிறை. 14] 'அயனைக் குட்டிய பெருமாளே'- திருப். 1297. பதாகை-(சேவல்)கொடி : கடவு பரி-மயில்.

71. குன்றி - குன்றிமணி (குண்டுமணி). 'குன்றியேய்க்கும் உடுக்கை' - குறுந்.கேழல் - பன்றி ; கன்றி-கோபித்து ; மால் வியன் நன்னாடு-முதலிரண்டடியில் வராகத்தின் கோட்டினைச் செவ்வேள் பறித்த வீரம் குறிக்கப்பட்டுளது. "ஏனபதிதனை கோலக்காலமாக அமர்செய்த வடிவேலா" திருப் - 503. 'செங்கண்மால் ஏனயாக்கை எயிற்றையோர் சிறுகை பற்றி...மருப்பொன்று...வாங்கி...சண்முகன் அளிக்கும்'. கந். புரா. இரணி-யுத்த-26. 'ஏனத்தின் எயிற்றினைப் பறித்திடுங் குமரன்' கந். புரா. 3-ஆம்நாள்பானு-யுத்த-63.

72. முரிதிரைபாய் புனல்சுருட்டி முத்தமணி கொழித்தெறியும்
முந்நீர் வேலை
திரிதரவாய் மடுத்தருந்தித் தேக்கெறிந்து கமஞ்சூற்கொள்
செல்லென் றெள்ளிச்
சொரிமதநான் மருப்பிபமென் றடல்புரிந்து வதைத்தெழுப்புஞ்
சுடர்வேல் அண்ணல்
பரிகொடியென் றிதுவிறைஞ்சாக் கொற்றமென்கொல் எனஅயிரா
பதத்தை மாய்த்து, (8)

73. செய்யகதழ் எரிக்கடவுள் திருகுபுரி மருப்புதருஞ்
சேணளாவு
மையகல வுருமறலி கவைக்குளப்புத் தாள்மோட்டு
மயிட ஏறும்
வெய்யவுரை நிருதிபைங்கட் குணபமும் ஆழிக்கரசன்
மிளிர்கட் செவ்வாய்த்
துய்யபிறை யெயிற்றுமகர முமூதை கருங்கலையுந்
தொடர்ந்து பற்றி, (9)

74. ஒன்றேடொன் றுடற்றியடித் துடற்குதைதட் டலகிழுத்தென்(பு)
உதறித் தாவிக்
குன்றுத நிதிக்கிறைபுட் பகந்தகர்த்தீ சானன்விடை
குறுகி யுள்ளங்
கன்றுத பசுவெனவிட் டனைத்துலகும் இடித்தமரர்க்
காதி யாவா
என்றோர்சொற் பயந்தவனுற் றெழுமீண்டும் எரித்தவைமுன்
இடத்திற் சேர்ந்த. (10)

---

72. கருக்கொண்ட மேகமும் தன்முன் நிற்க இயலாது செல்லவேண்டியது தான் என இழித்துச்சொரியும் மதம். செல்-மேகம், போ-இருபொருட்சிலேடை; கமம்-நிறைவு. இபம்..வதைத்து எழுப்பும் சுடர்வேலண்ணல்-இது ஐராவதத்தை முருகவேள் அட்டுப்பின்னர் எழுப்பின செய்தியைக் குறிக்கும். ‘அக்காலேயில் வேள் செலுத்துங் கணை-அயிராவதம்-ஆவிகொண்டு புறம்போத...அது மாண்டது.” ‘மால்களிற்றேடும் எழும்வகை அருள் செய்தான்’. **கந். புரா. திருவிளை-50, 78.**

73. 74. கதழ்-உக்கிரம்; மோடு-வயிறு; பருமை. எரிக்கடவுள்-அக்கினி; அவன்வாகனம் **மை**-ஆடு. மறலி-எமன் வாகனம் மயிடஏறு-எருமைக்கடா. நிருதி வாகனம் குணபம்-பிசாசு (பூதம், நரன், பிணம்). ஆழிக்கு அரசன்-வருணன்-வாகனம் மகரமீன். ஊதை-வாயு-வாகனம் கலைமான். நிதிக்கிறை-குபேரன் வாகனம்-புட்பக விமானம். ஈசானன்-ருத்ரன்-வாகனம்-விடை (கார் எருது).
“இரு நாற்புரவர் பகடாடு போத்தழன்மீனம், பரவுகலை புட்பகம் ஆன்... உகைத்தே” **திருக்கழுக் - உலா-93, திருக்காளத்தி நாதருலா-173-176.** கண்ணிகளையும் பார்க்க. அமரர்க்காதி - அமரரைக் காதி; காதுதல்-கொல்லுதல். ‘ஆவா’ - ஓலக் குறிப்பு, இரக்கக் குறிப்பு. “ஆவா அவர் தேடித் திரிந்தல மந்தார். **(தேவா. சுந்-13-10.)**

75. தோகைபயில் வள்ளுகிர்ச்செஞ் சூட்டுநெடு வாரணம்பின்
 தொடர்ந்து பூதம்
ஓகையுடன் முன்னிருக்குஞ் சூழல்வதிந் தன, பின்னர்
 உவந்து பெம்மான்
ஆகமகிழ் ஏவலினுற் புறப்பட்டு வருங்கந்தன்
 அனந்த கோடி
மோகமிகும் பூதமயில் சேவலிருக் குந்தலத்தை
 முன்னி னைல். (11)

76. பின்னர்நெடுங் கிரியெடுத்துப் பெற்றநிரை புரந்தமால்
 பிரம னாதி
பொன்னுலகோர் வெண்டிங்கட் கண்ணிவனைந் தருள்பரமற்
 போற்றி வந்தித்
தன்னவன்பால் விடைகொண்டு போந்தவர்தம் ஊர்தியிலா
 ததிச யப்பட்(டு)
இன்னலுறும் ஏல்வையவ ரவருலகத் தினும்வந்தோர்
 இயம்ப லுற்ருர். (12)

77. பிறையெயிற்றுப் பொறிவிழிப்பா ரிடம்புரியுங் கலகமும்வான்
 பெயரும் ஊர்தி
நிறைகுருதி கலுழிகக்க இறந்ததுவும் உலகனைத்தும்
 நெரித்து வீட்டி
முறைமுறைபுக் கிடித்ததுவுங் கேட்டழுங்கித் துயரினெடு
 முருகற் போற்றிக்
குறையிரந்து தமதிடுக்கண் மலர்க்கரங்கூப் புபுதிருமுன்
 கூறி னூரால். (13)

எழுசீர் விருத்தம்

78. அக்கண முருகு வாய்மடுத் தருந்தி
 யளியொரு கோடிபாண் மிழற்றி
நெக்கிதழ் முறுக்கு விரிந்தசெந் தோட்டு
 நீபமா லிகைத்தடம் புயத்தோன்
தொக்கவா னவரை விரித்துடன் நீவிர்
 சொல்லுதிர்! அஞ்சல்,இ தெவராற்
புக்கதுன் மார்க்கம் என்னமால் முதலோர்
 போற்றிசெய் துரைத்தல்மே யினரால். (14)

---

75. தோகை - மயில்; பூதம் - நான்கு பூதங்கள்; ஓகை - உவகை; மோகம் - மயக்க உணர்ச்சி; திகைப்பு.
76. பெற்ற(ம்) நிரை-ஆநிரை-பசுக்கூட்டம்; இன்னல்-துன்பம்; ஏல்வை-பொழுது.
77. பாரிடம்-பூதம்; வான்பெயரும் ஊர்தி-கருடன், அன்னம் முதலிய. கலுழி-வெள்ளம்; கூப்புபு-கூப்பி.
78. முருகு-தேன்; அளி-வண்டு; பாண்-இசைப்பாட்டு; நீப மாலிகை-கடப்ப மாலை. அஞ்சல், இது எவரால் புக்க துன்மார்க்கம்.

79. **வா**னவர் குரிசில்! உனதுடைந் தோகை
வள்ளுகிர்ச் சேவலோ டூக்கந்
தானுறு சூரன் மிடல்கெழு பன்மன்
தாரகன் சிங்கவத் திரனுங்
கூனுறு பிறைவாள் எயிற்றுநாற் பூதர்
கொடுசினத் தால்வெகுண் டெமது
மானவூர் திகளை வதைத்துமுன் இடஞ்சேர்
மயில்கொடி யோடுமே யினரால். (15)

**சூரன் முதலாம் நால்வர்களும் சாபம் பெற்றது.**

80. **க**ருணைமா நிதியே! விண்ணுளோர் பதியே!
காத்தருள்! காத்தருள்! என்னுஞ்
சுரர்மொழி கேட்டு முருகவேள் அந்தச்
சுழல்விழிப் பூதரை யழைத்து
வெருவிடா நீவிர் இமையவர்க் கந்தோ
வேதனை யிழைத்தனிர் அதனால்
நிருதரா யின்னே தோற்றுமின் என்று
நீப்பருஞ் சூளுரைத் தனனால்.

81. **பி**ன்னவர் வெருவி நின்றடி யோஞ்செய்
பிழைபொறுத் தினியதற் கேற்ற
நின்னது தண்டம் புரிதிவிண் ணரசே!
நித்தனே! மிகுதயா நிதியே!
என்னுநல் லுரையாற் கந்தனை வணங்கி
யேத்துபு நிருதராய்த் தோற்றின்
மன்ன!நீ எம்மால் தொழப்படா யென்று
வள்ளலை வணங்கிய பின்னர், (16) (17)

82. **வ**ள்ளுகிர் மணிச்செஞ் சூட்டுவா ரணத்தை
வள்ளல்தன் கருணையால் ஏற்றல்
கொள்ளுபூ தங்கள் தமையழைத் தென்பாற்
குறுகுநுங் களுக்கென துரையால்

---

79. ஊக்கம்-வலிமை; பன்மன்-பத்மன்; வத்திரம்-முகம்.

80. வெருவிடா - அஞ்சுதலிலாத; நீப்பருஞ்சூள் - தள்ளுதற்கரிய சாபம். சூள் - சாபம் "கருப்பமோ டிருத்திர் பல்காலம்...என்று சூள் இசைத்தாள்" **கந்-புரா-**துணைவரு-10.

81. ஏத்துபு-ஏத்தி. 'தொழப்படாய்' என வருந்தினர்.

82. வாரணத்தை வள்ளல் ஏற்று-அல் கொள்ளு பூதங்கள் தமை **அழைத்து. அல்-அக** இருள்; வாரணத்தை ஏற்று என்றதனால் மயிலும் ஏற்றுக்கொள்ளப் பட்டது உய்த்துணரலாகும்.

எள்ளல்சேர் அசுரர் மரபினில் தோன்றில்
இகழ்ந்திடா தப்பவந் தனில்யான்
விள்ளருங் கருணை யாலுடன் வதைத்து
மீளமுன் உருவுநல் குவனால். (18)

83 என்னலுஞ் சூர பத்மனுள் நடுங்கி
யிதழ்மதுச் செச்சையந் தொடைசூழ்
பன்னிரு தடந்தோள் குரிசிலைப் பணிந்து
பரம!வா ரணமயி லாக
உன்னருங் கோடி நவமிழைக் கின்றோம்
உதித்திடும் அசுரர் தோற்றத்தின்
பின்னரெக் காலம் விடுதலை யெமக்குப்
பெறுமெனக் குமரவேள் உரைக்கும். (19)

84. நீவிர்தாம் இருவிர் ஒருவடி வாகி
நிருதரிற் சூரபத் மாவென்(று)
ஓவிலா விறல்கூர் பெயர்தரித் திமையோர்க்
குறுபகை யாயுடற் றிடுநாள்
தாவில்சீர் எமதா ணையிலுமக் கொழுகு
தாழ்பசுஞ் சிறகர்மா யூரஞ்
சேவலாம் வடிவுண் டாமென முறுவல்
சிறிதுகூர்ந் துரைத்தனுப் பினனால். (20)

85. தற்புடை வெருவிச் சூழ்ந்தபுத் தேளிர்
தமைவிளித் திவர்களால் இறந்த
பற்பல விதமாம் உங்களூர் திகளெம்
பரிவினால் தமதுமெய் புணர்ந்து
முற்பகல் போல இருக்குக என்றே
மொழிந்துவா னவர்தமை யனுப்பிப்
பொற்புறு மயில்மேற் பொலிந்துசென் றிருக்கை
பொருக்கெனக் குமரவேள் அடைந்தான். (21)

86. அந்தணீர்! இந்தப் பூதரோர் நால்வர்
அருமுனி யானகா சிபற்கு
மைந்தர்மூ வருமாய்த் தாரகன் சிங்க
வத்திரன் இறந்துவீ டடைந்தார்
கந்தவேள் அடலாற் சூரபத் மாஓங்
காரவா ரணவடி வெடுத்து
வந்துபோற் றினசூ ரன்பிறப் பிதுவாம்
மற்றும்வேண் டுவனநீர் கேண்மின். (22)

---

83. வாரணம்-மயிலாக-ஆக-ஆகும்பொருட்டு.
84. ஓவிலா-நீங்குதல் இல்லாத.
86. அடலால்-அடுதலால்; அடல்-கொல்லுகை. ஓங்காரவடிவு-(ஆடுகின்ற) மயிலின் வடிவு, ஓகாரம்-மயில்-"ஓகார பரியின்மிசை வருவாயே" திருப்-145. "ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்டது ஆடுமயில்"-திருப்-444.

## அத்தியாயம் 4.

### சூரபதுமாதியரின் வரலாறு

*அசமுகியும் அவள் அன்னை மாயையும் என்ன ஆனார்கள் என முனிவர்கள் வினவச் சூதமுனிவர் சொல்லுகின்றார்:— 'சூரன் போரில் இறந்துபட்டால் நீ சீபருப்பதத்துக்கு வா' என்று அசமுகிக்குக் கூறி மாயை மந்தர மலையை அடைந்தாள். சூரன் மாய்ந்தவுடன் அசமுகி மாயையை அடைந்து புலம்பினாள். அசமுகியை மாயை தேற்றி சூரனாதியோர் நற்கதியை அடைந்தார்களாதலின் நீ துயரப்படவேண்டாம் என, அசமுகி எவ்வாறு அவர்கள் நற்கதிக்கு உரியவர்களானார்கள் என வினவினள். மாயை கூறுகின்றாள்:-முன்னொரு கற்பத்தில்* **பிரபாகரன்** *என்னும் அரசனுக்கும்* **சுகுமாரி** *என்னும் அவன் மனைவிக்கும்* **சூரன், பதுமன்** *என்னும் இரட்டைப் பிள்ளைகளும், அவர்கள் பின்* **சிங்கன், தாரகன்** *என்னும் இரண்டு பிள்ளைகளும் தோன்றினர். இந்நால்வரும் அரசுபுரியும்போது,* **அகத்திய** *முனிவரிடம்* **கந்தர்** *மான்மியங்கேட்ட* **சூரன்** *கந்தருக்கு* **மயில்வாகனம்** *ஆவதற்கு விரும்பியும்,* **பதுமன் சேவலாவதற்கு** *விரும்பியும்,* **திரணபிந்து** *முனிவரிடம்* **துர்க்கையின்** *மான்மியங்கேட்ட* **சிங்கன்** *அந்த தேவிக்குச்* **சிங்க** *வாகனமாக விரும்பியும்,* **இடபயோகியிடம் சாத்தனார்** *மான்மியங் கேட்ட* **தாரகன்** *சாத்தனுக்கு* **யானை** *வாகனமாக விரும்பியும் தவஞ்செய்தனர். இந்நிகழ்ச்சியைக் கருடனாதியர்களால் அறிந்த மயில் முதலான ஊர்திகள் தங்கள் பதத்தை இவர்கள் நாடுகின்றார்களே எனச் சினந்து அவர்களிடம் சென்று நீங்கள் நால்வரும் நீங்கள் சிந்தித்த எங்கள் முகங் கொண்ட பூதர்களாகக் கடவீர்கள் எனச் சபித்தன. பின்னர் அவ்வூர்திகள் அந்நால்வரின் வேண்டுகோளுக்கு இரங்கி 'உங்கள் கருத்து இறைவன் திருவருளால் இறுதியிற் கைகூடும்' என வரந்தந்து சென்றன.*

## அத்தியாயம் 4.

### சூரபதுமாதியரின் வரலாறு

**கலி விருத்தம்**

87. என்னலும்அ ருந்தவர்இ றைஞ்சிமிகு சூரன்
தன்னொடச **மாமுகி**ச னித்திசைத ரித்தாள்
அன்னவளும் அன்னவள்தன் அன்னைமக **மாயை**
யென்னுமவ ளும்மெவிடம் எய்தினர்கொல் என்றார். (1)

88. சூதன்மொழி வான்அமர்செய் சூர்தனிட மாயை
யாதரவில் வந்தச முகிக்கரிய சூரன்
சாதலுறிற் **சீபருப தத்தில்**வரு வாயென்
றோதியுயர் மந்தரம தொல்லையணை குற்றாள். (2)

89. பின்னர்மிகு சூரன்முத லோர்பெரி திறந்தார்
இன்னலசு ரேந்திரனொ டிரணிய னகன்றான்
பன்னச முகிக்கொடி பருப்பதம் அடைந்தே
தன்னையருள் **மாயை**மெய் தழீஇத்தனி கலுழ்ந்தாள். (3)

---

87. சனித்து-செனித்து (ஜெனித்து); இசை தரித்தாள்-பேர் பெற்றாள்.

88. மந்தரம்-மந்தர மலை.

89. அசுரேந்திரன்-மாயையின் தந்தை. இரணியன்-சூரன் மக்களுள் எஞ்சிய ஒருவன் பன்னு-அசமுகி.

அசமுகி வினவ மாயை கூறுவது

90. மாயைமக ளானஅச மாமுகியை நோக்கி
நீயழல்உன் முன்னவ னிலாவுபுகழ் வெஞ்சூர்
சேயருள்கொ டூர்திமயில் சேவல்கொடி யாகி
மாயனயன் ஆதியர் வணங்குபதம் உற்றான். (4)

91. சாற்றரிய சிங்கமுகன் தாரகன்முன் போல
ஆற்றல்கெழு பூதர்வடி வாய்க்கயிலை மேவி
யேற்றபர போகமிக எய்தியிருக் கின்றார்
ஆற்றுதி யரந்தையென அன்னையுரை செய்தாள். (5)

92. மீளஅச மாமுகி விரும்பியருள் அன்னாய்!
நாளுமிகு பாதகம் நடத்தினர் இவர்க்கே
கோளில்கதி யெப்படிமெய் கூறுகென மாயை
கேளென மகட்கொருசொல் கேண்மையின் உரைப்பாள். (6)

93. தன்னிகரில் கற்பமிசை சாகமெனுந் தீவின்
மன்னபிர பாகரன் மனைவிசுகு மாரி
தன்னிடம் இரட்டையர் சனித்தனர் அவட்கே
பின்னரிரு மைந்தர்கள் பிறந்தடைவில் வந்தார். (7)

94. கொற்றவனிந் நால்வர்விறல் கூறுதன யர்க்கும்
பெற்றவள்நற் றாயருள் பிதாவுடன் உதித்தோர்
பற்றுபெயர் சூரனொடு பன்மன்மகிழ் சிங்கன்
எற்றுபுகழ் தாரகன் எனப்பெயர் தரித்தான். (8)

95. அத்தனயர் பாற்றிரை யளக்கருல கெல்லாம்
வைத்துமனை யாளொடு வருந்துதவம் ஆற்ற
உத்தம வனத்தினிடை யொல்லையணு குற்றான்
புத்திரர்நன் னீதியொடு பூவுல களித்தார். (9)

96. அந்தவமை யந்தனில் அகத்தியன் அடைந்தே
தொந்தவினை நீங்கும்வகை சூரபன்ம ருக்கெங்
கந்தன்மகிழ் மான்மியமெய்க் காதைகள் அனைத்துஞ்
சிந்தைமகி ழும்படி தெருட்டியுரை செய்தான். (10)

---

90. அழல்-அமேல்.

91. அரந்தை ஆற்றுதி-துக்கத்தைத் தவிர்க.

93. இரட்டையர்-சூரன், பதுமன்; பின் இரு மைந்தர்கள் சிங்கன், தாரகன்.

94. தரித்தான்-சூட்டினன்.

96.97. சூரபத்மனுக்கு அகத்தியர் கந்தர் மான்மியம் உரைத்தார். பின்னவரில் சிங்கனுக்குத் திரணவிந்து முனிவர் நீலி (துர்க்கை) மான்மியம் உரைத்தார். தாரகனுக்கு இடபயோகி ஐயன் (சாத்தனார்) மான்மியம் உரைத்தார்.

97. செம்மைமனு நீதிபுரி செல்வர்பி னவர்க்கு
மெய்ம்மையருள் சேர்திரண விந்திடப யோகி
கொம்மைமுலை நீலிகதை கோலவயன் காதை
மும்மையுணர் வோரிருவர் முற்றும்உரை செய்தார். (11)

98. கொற்ற இமை யோர்மகுட கோடிகள் உரிஞ்சுஞ்
சிற்றடி விசாகனருள் சிந்தைசெய்த சூரன்
கற்றையொளி நீலுமிழ் கலாபமயி லாகி
மற்றிவனை யேந்திட மனந்தனில் நினைந்தான். (12)

99. சூத்திவட வைக்கனல் குமட்டிமுன் எடுக்குஞ்
சத்திவலம் வைத்துமகிழ் சண்முகன் இணைத்தாள்
பத்திசெய்து பன்மனுகிர் பாலொளிர்செஞ் சேவல்
மெத்திய வுருக்கொள விரும்பிநயம் வைத்தான். (13)

100. சீர்தரும நீதிபுரி சிங்கன்மயி டாரிக்
கூர்தியரி மாவடி வுகந்துபெற நாடத்
தார்திகழ் புயங்கெழுமு தாரகனுஞ் சாத்தன்
ஏர்திகழ் கடாசலமெய் இம்பர்விழை வுற்றான். (14)

101. அன்னவிறல் ஊர்திகள்மெய் அன்பொடு விழைந்தே
மன்னரொரு நால்வர்கள்தம் மைந்தர்கள் இடத்திற்
பொன்னுலக மேயனைய பூவுல கிருத்தி
நன்னர்தவம் ஆண்டயுதம் நான்குபுரி கின்றார். (15)

102. அப்பொழுது விண்ணவர்கள் அண்ணல்கயி லாயத்
தொப்பரிய சாரல்மிசை யூர்திகள் இருத்தி
மைப்படி கிரீவமணி வள்ளல்பத நாடிக்
கைப்பதும மேருவிய காதலின் அடைந்தார். (16)

---

97. கோலவயன்-கோல அயன்-(அயன்-ஐயன்.சாத்தன்.)

98. நீல்-நீலம்.

99. குமட்டி-கக்கி; சத்தி-வேல்; மெத்திய-நிறைந்த,

100. மயிடாரிக்கு-மகிடாசுரனைச் செற்ற துர்க்கைக்கு; அரிமா-சிங்கம்; கெழுமு-கெழுவிய-பொருந்திய; கடாசலம்-யானை. கடம்+அசலம்-கடம்(மதம்),அசலம்(மலை) மெய்-வடிவம்.

101. அயுதம் நான்கு-நான்கு பதினாயிரம் (40,000).

102. அண்ணலது கயிலாயத்தில் விண்ணவர்கள் அடைந்தார்கள்.

103. பாய்திரை சுருட்டுததி பாழியள றுக
வாய்தனி மடுத்துநுகர் மாமுகில் விளர்ப்ப
வேய்கதிர் இருட்படலை மேவுமணி வண்ணன்
சேய்தனி நடத்துக்கரு டாதிகள் தெரிந்தே. (17)

104. கந்தன்மயில் சேவல்பொரு கன்னியரி சாத்தன்
தந்தியிவை கண்டுமது தம்பதம் விழைந்தே
வந்துபிர பாகரன்றன் மைந்தரொரு நால்வர்
ஐந்தழலில் நின்றுமெ யருந்தவம் இழைத்தார். (18)

105. சென்றறிமின் என்னமயில் சேவலரி கைம்மா
கன்றியவண் ணுற்றெழு கனற்சிகை யணைத்த
வென்றிநிரு பீர்!தவம் விளைப்பதெவன் ? என்ன
வன்றிறல்கொள் மன்னர்கள்தம் வாஞ்சையுரை செய்தார்.

106. ஆதலின் மகிழ்ந்தெம தரும்பதம் விழைந்தீர்
போதுதிர்எம் மாமுகங்கொள் பூதவடி வாயென்
றோதரிய சாபமும் உரைத்துமுன் இருந்த
மேதகும் இடங்கள்தமின் மேவின விரைந்தே. (20)

107. ஆசைகள் அனைத்துமவிர் ஆழியை யுருட்டி
மாசுண முடிச்சுமைகள் மாற்றியருள் மன்னர்
ஓசைபெறு சாபமொடவ் வூர்திமுக மாகித்
தேசுறுமவ் வூர்தியுழி சென்றுதுதி செய்தார். (21)

108. அத்துதிகள் கேட்டுமயி லாதிமகிழ் வாகி
யித்தலம் இருந்திடுமின் எம்மிறைபின் நீவிர்
சித்தமலி வுற்றபடி செய்குமெநெடு நாளிற்
சத்தியம் எனக்கடிது சாற்றினஅவ் வேலை, (22)

109. கண்ணன்முத லாமமரர் கண்ணுதலை நோக்கி
யண்ணல்விடை கொண்டுதம் அரும்பரிக ளேறி
யுண்ணிறை கலுழ்ச்சியொ டுவந்துநனி மாதே
துண்ணென நடத்திமகிழ் தொல்பதம் அடைந்தார். (23)

---

103. உததி-கடல்; பாழி-இடம்; அளறு-சேறு; விளர்ப்ப-வெளுக்க; படலை-கூட்டம்; மணிவண்ணன்-மால்; அவன்சேய்-பிரமன்.

104. கன்னியரி-துர்க்கையின் சிங்கம்; சாத்தன் தந்தி-ஐயனரது யானை.

107. ஆசை-திக்கு; மாசுணம்-ஆதிசேடன்.

109. கலுழ்ச்சி-மகிழ்ச்சி; இந்நூலாசிரியர் இந்தப் பொருளில் இச்சொல்லை ஆளுகிறார்.

## அத்தியாயம் 5

### சூரபதுமாதியரின் வரலாறு (தொடர்ச்சி)

*பூதர்கள் உருக்கொண்ட சூரனாதிய நால்வரும் கணத் தலைவராம் அண்டா பரணருக்கு உரிய பூதர்களுடன் கூடியிருந்தனர். அப்போது, இவர்கள் அசுரர்களால் துரத்தப்பட்ட தேவர்களுக்குத் துணையாகி நின்று அசுர சேனைகளை மாய்த்தனர். இந் நிகழ்ச்சியை அசுரர் தலைவன் மூலமாக அறிந்த அண்டா பரணர் இந் நால்வரையும் அசுரர் குலத்திற் பிறந்து தேவர்களுக்குப் பகைவர்களாகக் கடவீர் எனச் சபித்தனர். இந் நான்கு பூதர்களும் அன்றுமுதலே தேவர்களுக்குப் பகைவர்களாய் முருகவேளின் மயில், சேவலுடன் கூடித் தேவர்களின் ஊர்திகளுக்கு இடையூறு விளைத்தனர். அதனால் முருகவேளும் கோபித்து நீங்கள் அசுரர்களாகக் கடவீர்கள் எனச் சபித்தார். மயிலும் சேவலும் தாம் செய்த பலவித அபராதங்களும் நீங்க வேண்டிக் காஞ்சியிற் சென்று தவம் புரிந்து வீடு உற்றன.*

*சிங்க முகனும் தாரகனும், இறந்தபின், பூதர்களாய்க் கயிலையில் நந்தி தேவரது அருள்பெற்றிருந்தனர். இங்ஙனம் இருக்க, பரமேசுரருக்கும் கௌரிக்கும் தோன்றிய துர்க்கையும், பரமேசுரருக்கும் மாயோனுக்கும் தோன்றிய ஐயனாரும் வேண்ட, இறைவன் ஆணைப்படி, இடபதேவர் (நந்தி) கயிலைமலையில் இருந்த சிங்கம் ஒன்றை துர்க்கைக்கும், யானை ஒன்றை ஐயனாருக்கும் ஊர்தியாக அளித்தார். அவ்வூர்திகள் 'நாங்கள் இடபத்தின் சாரூபம் பெற விழைகின்றோம்' என முறையிட, 'உங்கள் எண்ணம், எம்மைத் தியானிக்கப், பின்னர் நிறைவேறும்' என இடபதேவர் அருளினர். அங்ஙனமே அவைகள் இடபதேவரைத் தியானித்துச் சாரூபம் பெற்றன. அப்போது துர்க்கையும் ஐயனாரும் தங்களுக்கு ஊர்திகள் வேண்டுமென இடபதேவருக்குத் தெரிவிக்க அவர் தம்மிடம் பூதர்களாயிருந்த சிங்கமுகனையும் தாரகனையும் அவர்கள் விரும்பியவாறே ஊர்திகளாக்கித் துர்க்கைக்குச் சிங்கத்தையும் ஐயனாருக்கு ஆனையையும் அளித்தனர்.*

## அத்தியாயம் 5.

### சூர பதுமாதியரின் பழைய வரலாறு (தொடர்ச்சி)

#### கலி நிலைத்துறை

110. திண்டோள் வலிசேர் பூதர்கள் நால்வர் திரள்கோடி
யண்டா பரணச் சாரத ரோடே யணைவுற்றுக்
கொண்டா டும்போ தசுரர் துரத்தக் குழுவானோர்
தண்டா தமனோ டீசன் கயிலை தனைமேவி, (1)

111. சாரதர் மேய சூழலின் எய்திச் சரணென்னப்
போரிமை யோருக் காக விளைக்கப் பூதங்கள்
ஓரொரு நான்கும் பூதம் அநேகம் உடன்கொண்டு
காரதிர் ஏறாய் ஆர்த்தனர் ஆர்த்தக் கணமெய்தி, (2)

112. சூரிகையும் வாளும் முத்தலை வேலுஞ் சுழல்வட்டப்
பரிசையும் வில்லும் வாளியும் வேலும் பரசும்பாய்
எரிசொரி நேமிப் படைகளும் வீசி யெறிபோது
விரிகதிர் தாரைக் குலிசமும் ஏந்தி விளையாடி, (3)

---

110. *சாரதர்-பூதர்; தண்டாத மனோடு-தண்டாத ம(ன்)னோடு-(தம்மைவிட்டு) நீங்காத மன்னனோடு (இந்திரனோடு).*

111. *ஆர்த்து அக்கணம்-அந்த க்ஷணம்.*

112. *பாய் எரிசொரி நேமி; தாரை-கூர்மை.*

113. வானைய ளாவிய தேரொடு தேர்மா வலிகூடும்
ஆனையொ டானை வீசி அயத்தோ டயமெற்றிச்
சேனையொ டேபொரு சேனையை மோதிச் சிரமெல்லாஞ்
சோனைவன் மாரி யெனக்களம் வீழத் துணிசெய்தார். (4)

114. கூருகி ரால்வயி றேருடல் கீறிக் குடர்சோரச்
சோரிகள் பாயவை வாளிக ளோடும் தொளைதோறும்
வாரியை நேர்கழு கூடு புகுந்தூன் வலிதுண்ணச்
சாரதர் போரசு ரேசுரர் சேனை தனைமாய்த்தார். (5)

115. மின்னே! தானவர் மாய்ந்தபின் நான்கு விறற்பூதந்
தன்னேர் இல்லாப் பாருறு பூதந் தனைக்கூவி
முன்னே யண்டா பரணப் பூத முகநோக்கும்
நன்னே யத்தை நாடி யவண்போய் நணுகுற்றார். (6)

116. அப்போ தந்தத் தேவர்கள் இன்புற் றருளெய்தி
யெப்போ தும்போல் தம்மூல கத்தின் எய்துற்றார்
மெய்ப்பா யொளிசேர் அசுரேந் திரனும் வெளிப்பட்டுக்,
கைப்போ தண்டா பரண கணேசன் கழல்சேர்த்தி, (7)

117. சாரத நான்கும் அசுரரை மாய்த்த சரிதங்கள்
நாரதர் போல விளம்பக் கேட்டு நனிசீறிப்
பாரிட நாதன் பூதரை நோக்கிப் பயமற்றே
நீரிமை யோர்க்கா யசுரரை மாய்த்த நெறியென்னும்? (8)

118. என்று முனிந்தவ் வசுர ரிடந்தோன் றிடுமென்றே
கன்றி யுருத்தோர் சாபம் உரைத்துக் கணநாதன்
நன்றி யுரைத்தவ் வசுரேந் திரனை நகர்சேர்த்தான்
அன்று முதற்றே வர்க்கொன் னரா யடுபூதர், (9)

119. சற்றும் இரக்கம் இலாதெத் திசையுந் தளர்வாக
முற்றிய கோரஞ் செய்தனர் மின்னே! முருகேசன்
வெற்றி மயூர வாகனத் தோடு விறற்பூதர்
செற்ற முடன்முற் பகையாற் சுரரூர் திகள்செற்றார். (10)

---

113. அயம்-குதிரை; சோனைவன் மாரி-விடாப் பெருமழை.
114. வை-கூரிய; வாளிகள் ஓடும் தொளைதோறும் சோரிகள் பாய. வாரி-வெள்ளம்; மிகுதியைக் குறிக்கும்.
115. மின்னே-மாயை அசமுகியை விளிப்பது. அண்டா பரணன்-பூதத் தலைவன்.
116. அசுரேந்திரன்-அசுரர் தலைவன்; கணேசன்-கணங்களுக்குத் தலைவன். கைப்போது கணேசனது கழல் சேர்த்தி.
117. சாரதம்-பூதம் பாரிடம்-பூதம். பாரிடநாதன்-அண்டாபரணன்.
118. கன்றி உருத்து-மிகக்கோபித்து; நன்றி-நல்லமொழி; ஒன்னார்-பகைவர்; அடு பூதர்-அசுரர்களை அட்டபூதர்கள் நால்வர்.
119. முற்றியகோரம்-பெருங் கொடுமைகள்.

120. பாயிருள் வாரித் துய்த்தொளி கக்கும் பருதித்தே
வாயிர கோடி விட்டுமிழ் வைவே லணிசெவ்வேள்
காயிரு கட்பூ தச்செயல் கேட்டுக் கதமாய்ச்சூள்
நீயிர் உதிப்பீர் அசுரரில் என்றான் நிகரில்லான். (11)

121. தேவர்கள் தேவ னை குகேசன் திருமுன்னர்த்
தாவிய மஞ்ஞைக் குக்குட மும்மைச் சனனத்தின்
மேவிய பூதர் செய்தவம் ஈட்டு விதத்தாலும்
ஓவரு பூதர் சொற்கேட் டுள்ளம் உருத்திட்டே, (12)

122. வானோர் கருட னுதியை மாய்க்கு மதத்தாலும்
நானு வவரா தந்தனை யுன்னி நகர்க்காஞ்சி
தானோர் மஞ்ஞை கிள்ளையின் எய்தித் தவமாற்றி
யானு இன்ப வீடுற் றன;பா கடுஞ்சொல்லாய்! (13)

123. சிங்க முகன்தா ரகனயி லோனுற் சிரமற்று
மங்கல பூத மாய்நந் தியினுல் மகிழ்வுற்றுச்
சங்க விலங்கற் கிறையாங் கயிலைச் சயிலத்தே
இங்கித மாக இருக்கின் றனர்;சிற் றிடைமாதே! (14)

124. என்னலும் அன்னாய்! துர்க்கையொ டையற் கியல்பாக
மன்னிய வூர்தி யாகிய சிங்க மதவேழம்
பின்னர் உகந்தே மழவிடை ரூபம் பெறுமென்றாய்
அன்னது தானெப் படியென மாயை யருள்கிற்பாள். (15)

---

120. பருதித்தேவு ஆயிரகோடி விட்டுமிழ் வைவேல் - "திவாகரர் வடிவை உருக்கி வடித்த திருக்கைவேல்".-திருவகுப்பு-பூத.
காய் இரு கண் பூதம்-காய்.வருத்திய; கதம்.கோபம்.

121. உம்மைச் சனனம்.முற்பிறப்பு. "உம்மை வினைவந் துருத்தல் ஒழியாது".-மணிமே. 26.32. தவம் ஈட்டுவிதம்—தவம் கைகூடிய தன்மை.
உள்ளம் உருத்திட்டு-உள்ளம் உருத்த (உள்ளம் அழுங்க).

122. நானு அவராதம்-நானு அபராதம்.பலவகைக் குற்றம்.
ஆனு-கெடுதலில்லாத. பாகு அடும் சொல்லாய்-பாகை வெல்லும் மொழியாய்! அசமுகியைக் குறிக்கும்.

121—122. மஞ்ஞை-குக்குடம்-உள்ளம் உருத்திட்டு-காஞ்சியில் தவம் ஆற்றி வீடுஉற்றன.

123. நந்தி-நந்திதேவர். சங்கம்.கூட்டம்; விலங்கல், சயிலம்-மலை.

124. ஐயன்-சாத்தனார். இயல்பாக.பழைமையதாக.

125. பாவாய்! தேவர்கள் தேவிறை யாகும் பரமேசன்
ஏவார் கட்கோ கவுரிநன் மாயோன் இடமீதின்
மூவா ஐயை ஐயனை யன்பான் முறை நல்கி
மேலூர் திகளிரு வர்க்கருள் என்றான் விடையோடும். (16)

126. அவ்வே றெங்கோன் கயிலையின் மாவுள் அரியேறுங்
கைவா ரணமுங் கொடுவந் தையை கவுரிக்குத்
தெவ்வூா சுரரைப் பொருசாத் தற்குந் திகழூர்தி
யிவ்வா றிருமின் எனஅடி யோர்கட் கிதுவென்னும், (17)

127. நின்னது சாரூ பம்பெறல் எந்தாய்! நினைக்கின்றோம்
என்னலும் நீவிர் வாகன மாக இருந்தென்னைப்
பின்னர் நினைத்தென் மழவிடை ரூபம் பெறுமென்னச்
சொன்னது கேட்டப் படியூர் திகளாய்த் துகள்தீர்ந்தே, (18)

128. சேவுரு வுன்னிச் சிறிது நினைந்தே சிலநாளில்
தூவிடை யாகிக் கொற்றவை சாத்தன் சுமைநீங்கி
ஓவரு பேரின் பக்கடல் மூழ்கி யுயர்வீடும்
மேவின ; மின்னே! கொற்றவை சாத்தன் விழைவாகி, (19)

129. தாவில் கணேச ளுகிய நந்தி தனைநோக்கி
ஓவிலை ஊர்தி நல்கென அப்போ துடனோர்ந்து
காவல்செய் சிங்கன் தாரகன் வெய்ய கணரூப
மேவிரு வோரை வாகன மாக்கி விடுத்திட்டான். (20)

130. கட்டழ காகு மைமுக மாதே! கவுரீசன்
தட்டறும் ஆணை யாற்கும ரிக்குஞ் சாத்தற்கும்
இட்டம தாம்அரி மாவொடு வேழமும் ஏறுகப்
பட்டது சொன்னனேன் என்றனள் மாயை பரிவுற்றே (21)

---

125. தேவர்கள் தே-இறை : ஏ-அம்பு; கோ-தலைமை, ஐயை-துர்க்கை; ஐயன்-சாத்தன். பரமேசனுக்கும் கவுரிக்கும் தோன்றியவள் ஐயை; பரமேசனுக்கும் மாயோனுக்கும் தோன்றியவன் ஐயன்.

126. அவ் ஏறு-இடபதேவர். மா-விலங்கு. அரியேறு-சிங்கம். கை வாரணம்-யானை. தெவ்-பகை.

127. எந்தாய்-இடபதேவரைக் குறிக்கும். துகள்-குற்றம்.

128. சே-இடபம். தூ-பரிசுத்தம்; ஓவரு - நீங்குதல் இல்லாத. கொற்றவை-துர்க்கை. விழைவு-விருப்பம்.

129. தா-குற்றம். ஓவிலை ஊர்தி-ஓவுதல் (நீங்குதல்) இல்லாத ஊர்தி.

130. மை-ஆடு; குமரி-துர்க்கை ; அரிமா-சிங்கம் ; ஏறு-வாகனம்.

## அத்தியாயம் 6.

### அஜமுகியின் பழைய வரலாறு

*அஜமுகி மாயையை நோக்கித் தன் பிறப்பின் வரலாற்றினை வினவ மாயை கூறுகின்றாள்:—***கோமேதம்** *என்னும் தீவில்* **வசிட்டன்** *என்னும் அந்தணனுக்கும்* **சுபோதை** *என்பாளுக்கும்* **சித்ரரேகை** *என்னும் பெயருடன் நீ பிறந்து,* **பூச்சக்ர** *நகரில்* **அரிசேனன்** *என்னும் அந்தணன் பெற்ற* **புண்டரிகன்** *என்பானை மணந்தாய். அவன் திருமால் அருளாற்பெற்ற ஒரு மணியைக்கொண்டு பொன் பெற்று, மாணவர்கள் தன்னைச் சூழ, வாழ்க்கையை நடத்தினான். நீ உன் வினைப்பயனாற் பெருங்காமத்துக்கு ஆளாகி, உன் கணவனையேயன்றி வேறு பலருடனும் போகம் துய்த்தாய். ஒருமுறை,* **துருவாச முனிவர்** *வர, உன் கணவன் அவரை ஒரு மணிமண்டபத்தில் இருத்தி உபசரித்து அவருக்கு உணவுபடைத்துவர உன்னை அனுப்பினான். நீ உணவுடன் சென்ற போது, 'உணவுவேண்டாம், நான் உண்டாயிற்று' என முனிவர் கூறித் துயில, மறைவிலிருந்த நீ அவரைத் துயிலிடைத் தழுவினாய். அவர் விழித்தெழ நீ பயந்து ஓடி ஊரின்புறத்தே ஓர் ஆலடியில் இருந்த ஆட்டுமந்தையில் ஒளித்து நின்றாய். இதனை ஞானக்கண்ணால் அறிந்த முனிவர் தமது மாணாக்கனும்* **தன்மகுத்தனை** *அனுப்பி உன்னை அந்த ஆலமரத்தின் உச்சியில் நிற்கும்படிச் சபிக்கச் செய்தார். மறுநாள் காலையில் துருவாசரும் புண்டரிகனும் ஆலமரத்து அடிக்கு வந்து நீ நின்ற நிலையைக் கண்டார்கள். புண்டரிகன் துருவாசரை நோக்கித் "தங்களுக்கு அன்னம் இட வந்தவள் ஆலின் நுனியில் இருப்பது என்னோ?" என வினவ, அவர் எம்மால் இவள் இக்கதி உற்றனள் எனப் புண்டரிகன் கோபித்து 'நீங்கள் செய்த இது நீதியல்ல' என்றான்.*

## அத்தியாயம் 6.

### அஜமுகியின் பழைய வரலாறு

**கலி விருத்தம்**

131\. *அந்தணிர்! வியப்பினொடும் அச்சமொடும் மாயை*
*தந்தமகள் அன்னையொடு தன்செயல் வினவ*
*விந்தையனை கூறுவள்* **கோ மேத***மெனுந் தீவில்*
*வந்ததொர்* **வசிட்டனை** *மணந்தருள்* **சுபோதை.** (1)

132\. *அன்னவள் இடத்தின்மறை யந்தணன் வசிட்டன்*
*நின்னைமுன் அளித்தனன் நெடுங்கண்மலர் ஓதி*
*கன்னல்மொழி யென்ன நடைக் கன்னி***சித்ர ரேகை**
*யென்னுமொரு நற்பெயர்கொ டிவ்வுலகின் வாழ்ந்தாய்.* (2)

133\. *கருங்கயல் புரட்டியடு கண்ணியர் களைந்த*
*இருங்குவளை தின்றுபல ஈர்ஞ்சுளை குதட்டி*
*வருங்கரிய மோட்டெருமை வாழைநிழல் துஞ்சத்*
*தரங்கம்அகழ் எற்றிடு***பூச் சக்ரநகர்** *தன்னில்,* (3)

134\. *செந்தழல் வளர்க்கும்* **அரிசேனன்** *அருள்செவ்வி*
*மைந்தன்மகிழ்* **புண்டரிகன்** *மாலடி வழுத்திப்*
*பந்தமுற வுன்னையவன் பாயெரிமுன் வேட்டுச்*
*சந்துகமழ் மாடநிறை தன்னகர் அடைந்தான்.* (4)

---

131\. *அனை-அன்னை.*

133\. *பல-பலாப்பழம்; மோடு-வயிறு, பருமை; அகழ்-அகழி*

135. பின்னர்மறை யோனமுரு பெய்யுமணி வண்ணன்
தன்னருளி னோர்மணி தருங்கழஞ்சு நூறு
பொன்னெழி வருதுபகற் போதுதொறும் பெற்றே
நன்னெறிய மாணவர்கள் நாளும்அயல் சூழ, (5)

136. நீதிபொறை வாய்மைதவும் நேயமுடன் வேதம்
ஓதியத னல்முனி வொழிந்ததவன் நாளுங்
கோதிலன னீணிதி கொடுத்துமனே வாழும்
போதுமணி வாரிறுகு பொம்மன்முலை விம்மி, (6)

137. ஓங்குருவின் மூவுலகத் துள்ளஅழ கெல்லாம்
வாங்கிநிறை தெள்ளமுதம் வார்த்ததிற் குழைத்து
தாங்கெழில்கொள் தூரிகை தழீஇக்கலந்து வல்லி
தேங்கமழ் அலர்க்குரிசில் தீட்டியது போலாம். (7)

138. ஏங்கியிடை நொந்திட எழுந்திறுகி மேன்மேல்
வீங்கியெழில் வார்நெதாழுக விம்மியிணை செம்மாந்
தோங்குமுலை நின்வினை யுடற்றியத னல்வேள்
பூங்கணை வருத்தநிறை போகி மெலி வுற்றே. (8)

139. ஆசையமு தூற்றமெடுத் தாழியெனப் போகி
வீசியுளத் தோவில்பொரு வெள்ளமிகுத் தோடிக்
கூசுநிறை நாணமுயர் கூலமழித் தந்தோ
தேசுடையர் யாரையுமெய் தீண்டிநலன் உற்றாய். (9)

140. திங்களொளி சங்குவளை செங்கைகள் நெருங்கக்
கொங்குமர வங்கெழுமு கொந்தளம் அவிழ்ந்து
தொங்கல்பல சிந்திவிழ யுங்கடி தொதுங்கக்
கங்குல்பகல் நின்பதி கலந்துடன் மகிழ்ந்தாய். (10)

---

135. மணிவண்ணன்-திருமால்; ஓர் மணி-திருமால் அளித்த ஒரு மாணிக்கம். கழஞ்சு-⅙ அவுன்ஸ் எடையுள்ளது.

136. முனிவு ஒழிந்த தவன்-தவத்தவன்; கோதிலன் நல் நீள்நிதி-கோது-குற்றம்; வாழும் போது-வாழுங் காலத்தில்; பொம்மல்-பொலிவு, பருமன்.

137. தூரிகை-எழுதுகோல்; அலர்க்குரிசில்.மன்மதன்.

138. நின்-உன்னுடைய (அசமுகியைப் பார்த்து மாயை கூறினது). உடற்றியதனல்-வருத்தினதால்; போகி-இழுந்து.

139, கூலம்-வரம்பு, முறை; தேசு-ஒளி-அழகு;

140. கொங்கு . வாசனை; மரவம் - கடம்பு; கெழுமு - நிறைந்த; கொந்தளம் - கூந்தல்; தொங்கல் - மாலை.

141. கொம்மைமுலை மேகலைகள் கூற்றமடு கூற்றம்
பொய்ம்மையல ஆவிகொடு போமின்நெறி போமின்
இம்மையுடன் அம்மைபெற எண்ணுதிரேல் என்றே
செம்மலர் அடிச்சிறு சிலம்புகள் சிலம்ப, (11)

142. மற்றவன் மணுக்கரை மறைக்குலரை யப்போ
துற்றவரை மித்திரரை யுண்மையற வோரை
நற்றவரை யாசகரை நாடுமன்னி யோரைப்
பெற்றியில் அடைந்தவரைப் பெட்பினடுத் தம்மா, (12)

143. நின்னுடைவ சம்பெற நினைத்துமய லாக்கி
மன்னுவலி யாலுடன் மணந்தனை யநேகஞ்
சொன்னதிலென் யாவரையுந் தோய்ந்துநல னுண்டாய்
உன்னையெழி லாசைகொ டொருவுகிலன் கேள்வன். (13)

144. ஆற்றுதனை யாய்!கள வறிந்துமறி யான்போற்
போற்றிவறி தேயிருந்த போதுதவத் தோர்க்குள்
ஏற்றமுநி யோகினில் இருந்துதுரு வாசன்
மாற்றருமணுக்கரொடு வந்தவண் அடைந்தான். (14)

145. அந்தணரில் ஏற்றநெறி யாகியநின் கேள்வன்
புந்திசெய்ம ணுக்கரொடு போகியெதிர் கொண்டே
இந்துதவழ் தன்மனை யிருத்தியருச் சித்து
வந்தமுநி வற்கொர்மணி மண்டபம் அளித்தான். (15)

146. பின்னர்மனை மேவியருள் பிஞ்ஞகனன் பற்கே
அன்னமலி யும்பலி யளித்துமகிழ் வாக்கி
என்னருகு வாவென இயம்பிவிட நீபோய்
மன்னுமுநி பாலணுகி வாங்குபலி யென்றாய். (16)

147. மாதவன் மறுத்துணவு மாந்தினன்;நீ செல்லென்(று)
ஓதினன்;அம் மாமுநியை யுண்மகிழ்ந்து மீளப்
போதுமவள் போலொரு புறத்தணுகி நீத்தோன்
மாதுயி லிடத்தணுகி வல்லைதழு வுற்றாய். (17)

---

41. கொம்மை-திரட்சி, வட்டம்; சிலம்ப-ஒலிக்க. சிந்தா-637-பார்க்க.
42. மணுக்கர்-மாணுக்கர்; குலர்-குலத்தவர்; நற்றவரை-நல்+தவரை (தவத்தவரை) நாடும் அன்னியோரை; பெட்பு-விருப்பம்.
43. அவசம்-தன்னை மறத்தல். ஒருவுகிலன்-பிரிகிலன்.
44. தனையாய்-தனையையே-மகளே!
45. இந்து-சந்திரன்.
46. பிஞ்ஞகன்-சிவன்; பலி-உணவு.
47. மாந்தினன்-உண்டேன்; நீத்தோன்-துறவி (துருவாசர்); மாதுயில்-பெருந்தூக்கம்; வல்லை-விரைவு.

148. அந்தஅம யத்தின்முநி ஐதென விழிக்கச்
சிந்தையொ டகன்றுநெடுந் தேர்மறுகின் ஓடி
யந்திநிழல் கூர்பெரிய ஆலடியின் மேய
பந்திநிறை யாட்டிடை பயந்தவண் ஒளித்தாய். (18)

149. ஏகறிவி லாய்முநி யெழுந்துதன்ம ருத்தன்
ஆகியம ணக்கனை யழைத்திவ் வகை சொல்லி
யோகையொடப் பாவிதனை யொல்லைகொணர் கென்னப்
போகியவட் கண்டிலனிப் போதென வுரைத்தான். (19)

150. நன்புதல்வி யே!முநிவன் ஞானவிழி யாற்பார்த்
தன்புறுதேர் வீதியிலோர் ஆலடிசேர் ஆட்டின்
மின்புரை மருங்குலுளம் வெந்துறநிற் கின்றாள்
துன்பகல நேடியங்ஙன் தோற்றியவட் கண்டே, (20)

151. ஏதென மனத்திலெடுத் திவ்வளவ தென்னுப்
பாதகம் இழைத்த கொடும் பாவி மறைந் திங்கே
நீதனி நின் றாயினியிந் நீண்மர நுனிக்கண்
மீதினில் எனச்சொலி விரைந்துவரு கென்றான். (21)

152. அப்படி யெனு,அவன்போ யாட்டிடை யிருக்கும்
மைப்படி கணுள்தனை மனங்கொடு சபித்தான்
கொப்படி விரித்தநெடுங் கோளிநுனி நின்றாய்
மெய்ப்படிவ நீற்றினன் விடிந்தபினெ ழுந்தே, (22)

153. தண்டுகுசை குண்டிகை தழீஇப்புறஞ்சென் றீசன்
தொண்டுபுரி யுஞ்சரிர சுத்திசெய்து வீசுந்
தெண்டிரைநன் னீர்படிந்து செய்கடன் இயற்றிக்
கண்டனனிவ் வாலினுறுங் காரிகையை யம்மா. (23)

154. ஓவறு வியப்பினெடைவ் வூரினுளோர் எல்லாங்
காவிவிழி யாலினிற்குங் காட்சிதனைக் கண்டே
ஆவல்மிகு புண்டரிகன் ஆயிழையை யுள்ளம்
வேவவொரு வர்க்கொருவர் வெள்கியுரைக் கின்றார். (24)

---

148. ஐது-நுண்மை, வியப்பு.

149. ஏக அறிவில் ஆய் முநி-தனி ஞானத்தால் ஆய்ந்த முநி. ஓகை-உவகை, மகிழ்ச்சி. ஒல்லை-விரைவு.

150. மின்புரை மருங்குல்-மருங்குல் (இடையை) உடையவள்-நிற்கின்றாள். நேடி-தேடி. அவட்கண்டே-அவளைக்கண்டு.

151. மீதினில்-மீதில் நில்-என்றான் -என்று துருவாசர் நன்மருத்தனுக்குச் சொன்னார்.

152. கொப்பு-மரக்கிளை; கோளி-ஆலமரம்; படிவம்-உருவம்

153. குசை-தருப்பை; இ-ஆலின்-உறும்.

154. காவி விழி-காவி விழியாள்-காவி-நீலோற்பலம்.

155. பின்னர்வெள்கு புண்டரிகன் பீடுறும ணுக்கர்
தன்னொடு பழிச்சிமுடி தாழ்ந்துதுரு வாசன்
பொன்னடி வணங்கிநுனைப் போற்றிசெய்து பிச்சை
அன்னமிட வந்தமனை ஆலிருப்ப தந்தோ. (25)

156. விண்முகட்டளாவுலவை வீசிவள ராலின்
பெண்மதியின் மேவியுளம் பேதுறநிற் கின்றாள்
உண்மைமுநி வா! இதென்கொல் ஓதரிய பாவத்
திண்மையுரை யென்ன, முநி செய்கையுரை செய்தே, (26)

157. அன்னவளெம் மால்நெடிய ஆலினுறப் பட்டாள்
என்னமிகு சீற்றமுள் எழுந்தபுண்ட ரீக
னின்னுரையி லீதுவரல் நீதியல பாவம்
சொன்னவருஞ் செய்தவர்போல் துக்கவலை வீழ்வார். (27)

## அத்தியாயம் 7

### அஜமுகியின் பழைய வரலாறு (தொடர்ச்சி)

இதைக் கேட்ட துருவாசர் 'இவள்மேல் உனக்கேன் காதல்? ஒழுக்கங் கெட்ட இவளால் பலர் பாவத்துக்கு ஆளானார்கள். நீ இவளை அழைத்துச் செல்க' என்றார். அங்ஙனமே புண்டரிகன் அழைக்க ஆலின் உச்சியினின்றும நீ சிறிதே இறங்கினாய். பின்பு துருவாசர் சொற்படி புண்டரிகன் உன் மீதிருந்த காதலால், அங்கிருந்த அந்தணர்களை நோக்கி உங்களுள் இவள் நலத்தை நுகர்ந்தோர் யாவரும் இவளை அழையுங்களென, அவர்கள் மேல்நோக்கி உன்னை அங்ஙனமே அழைக்க நீ ஆலின் நடுப் பாகத்தை அடைந்தாய். புண்டரிகன் துருவாசரை நோக்கி 'என் இன்னும் இவளுக்கு இறங்க முடியவில்லை?' எனக் கேட்கத் துருவாசர் 'இவளைத் தழுவினோர்கள் பலதிசையிலும் சென்றுள்ளார்களாதலின் இவளே அவர்கள் பெயர்களைக் கூறினால் கீழே இறங்குவாள்' என்றார். அப்படியே நீ அவர்கள் பெயர்களைச் சொல்ல ஆலின் அடிப்பாகத்தை அடைந்து நின்றனை. உன் நிலையைக் கண்ட புண்டரிகன் உள்ளம் வெதும்பியும் உன்னை விட்டு நீங்க மனம் வராது நின்றான். துருவாசர் உன்னைப் பார்த்து 'நீ செய்த பாவத்தின் பயனிது' என்றார். புண்டரிகன் துருவாசரை நோக்கி, 'நாங்கள் வயிணவர்கள் என்றல்லவோ சிவ முநிவராகிய நீங்கள் இந்த அடாத மொழிகளைக் கூறுகின்றீர்கள்' என்றான். இதைக்கேட்ட துருவாசர் மிகக் கோபித்து 'நீ இவள்மேல் கொண்ட காதலால் இவளது குற்றங்களைக் காணாது மகிழ்கின்றாய். இனி நீ யோனி சித்தத்தவனாய், வைதிக விரோதியாய், சிவனிடத்து அன்பிலாதவனாகக்கடவை.'—எனச் சபித்தார். அவனுடைய மாணவர்களையும் 'நீங்கள் குரு பத்தினியைத் தோய்ந்த காரணத்தால் உங்கள் மனைவியர் வியபசாரிகளாகக் கடவர்கள்' எனச் சபித்தார். பின்னர் உன்னைப் பார்த்து 'நீ எம்மை வலுவில் தழுவினதால் அசுரர் குலத்திற் பிறப்பாய்; ஆட்டுமந்தையில் ஒளித்திருந்ததால் உன்முகம் ஆட்டுமுக மாகும்' எனச் சபித்து மரத்து அடிப்பாகத்தினின்றும் இறங்கிவரப் பணித்தார். நீ இறங்கிவந்து அவரை வணங்கி மன்னிப்புக் கேட்க, அவர் 'நீ உலகறிய உண்மையை உரைத்ததனால் உன்பாவம் எல்லாம் நீங்கியது. வருபிறப்பில் நீ காமியாகத் திரிந்து ஒருமுறை எம்மையும் தழுவி இருமக்களைப் பெற்று, சாத்தனாரின் கணங்களால் தண்டனை அடைந்து பாவம் நீங்கப்பெற்று, சிபருப்பதத்தை அடைந்து அங்கே தவம்புரிந்து, பின்னர் கயிலையை அடைந்து கவுரிபூஜை செய்து நித்தியானந்த வீட்டை அடைவாய்' என ஆசி கூறினர். அங்ஙனமே நீ அசுரர் குலத்திற் பிறந்து மதனமோகினியாய்ப் போகங்கள் துய்த்து சிபருப்பதத்தை அடைந்தனை. இனி, நீ முருகன் திருவடியைச் சிந்திப்பதால் உனது பாவம் போம். நீ கயிலையிற் கவுரி பூஜை செய்து பேரின்ப வீட்டை அடைவாய்; இதில் ஐயமில்லை"—(என மாயை கூறினள்).

155. பழிச்சி-துதித்து; மனை-மனையாள்; ஆல்-ஆலமரம்.
156. உலவை-மரக்கொம்பு.
157. எம்மால்-யாம் இட்ட சாபமொழியால்.

## அத்தியாயம் 7.

### அஜமுகியின் பழைய வரலாறு (தொடர்ச்சி)

158. துருவாச முநியவன்சொற் கேட்டே நன்று
சொற்றனைநிற் கிவள்பேதை மனைவி யென்னும்
வெருவாவல் லபிமானம் என்கொல் துட்ட
வியபசாரி யாலளப்பில் மறையோர் வீந்தார்
பொருவாரற் றடிகனத்துப் புடைத்து விம்மும்
பொம்மல்முலை யநேகர்விர தங்கண் மாய்த்தாள்
ஒருவாத கொடும்பாவி யிவளாற் பல்லோர்
உயர்குலம்விட் டரும்பாவ முற்று ளாரால். (1)

159. இக்கொடிய பாவிநினக் கில்லா ளாகில்
இப்போது மரத்தினினின் றிறக்கிக் கொண்டே
பொக்கமறத் திருவினொடு போநீ யென்னப்
புண்டரிகன் அம்முநிசொற் கேட்ட ழைத்தான்
நக்குகதிர் முத்துவடம் சுமந்து வீங்கி
நளினமுகை யடர்த்தெழுந்து நானந் தோய்ந்து
பக்கமிறு கிப்புடைத்துக் கனத்து ரத்துப்
பணைத்திடங்கொள் குவிமுலையப் பகல்நீ யம்மா, (2)

160. பழுமரத்தின் நுனியினுஞ்சற் றிறங்கி னுய்நற்
பண்ணவர்தங் குரிசிலியா ரொருவர் நீவிர்
தழுவுமவள் நலனுகர்மற் றோர்கள் என்றே
தற்சூழ இருந்திடும்அந் தணரை நோக்கிக்
குழுவினொடும் இவளைமரத் தினும ழைத்துக்
குறித்துவிரை வொடுமிறங்க விடுமின் என்னத்
தொழுதருபுண் டரிகனவள் விருப்பால் மாரன்
தொடுசிலைவா ளிக்கிலக்காய்த் துளங்கி யம்மா; (3)

161. அந்தணரெல் லோரையுங்கண் டவளை மீள
அழைப்பதினில் அனுமதிமற் றவன்பு ரிந்தான்
சிந்தைமகிழ் அவன்தன்மா ணவர்கள் பின்னுஞ்
சிலமறையோர் அவணடைந்தோர் அவர்கள் எல்லாம்
வெந்திறலக் கொடும்பாவி தன்னைப் பார்த்து
மேனேக்கு முகத்தினராய் விளித்தார் அந்தப்
பைந்தொடியப் பழுமரத்தின் நாப்பண் உற்றாள்
பகைத்துருத்துப் புண்டரிகன் பகர்ந்தான் அம்மா. (4)

---

158. வார்-கச்சு
159. நானம்-கஸ்தூரி; உரம்-மார்பு.
160. பண்ணவர்-முநிவர்-"பண்ணவர் படிவங் கொண்டான்"-சிந்தா-395. குரிசில்-தலைவர்.(துருவாசர்)
161. நாப்பண்-மத்தியில்.

கலி விருத்தம்

162. தண்டு குண்டிகை தாங்கு முனிவிர்! பாய்
கெண்டை யங்கட் கிளிமொழி பேரன்பு
கொண்ட வேதியர் கூவவுங் கோளிநாப்
பண்ட ரிக்கின் றனளென் பகரெனும். (5)

163. மாத வத்தினர் அப்படி வாய்மையொன்
ரோதி நிற்கவும் ஒல்லை பவங்குறித்
தாதி நாளணைந் தோர்க ளளப்பிலார்
வேதி யர்கள விற்புணர் வீரரும். (6)

164. என்று கூறி யிடக்கர் அடக்கலிற்
குன்ற மன்ன குவிமுலை மாதுளங்
கன்றிச் செய்யுங் கருமம் வெளிப்படா
தென்ற வற்கு முணர்த்துவ மென்றரோ, (7)

165. புண்ட ரீகப் புதுமணஞ் சேர்களி
வண்டு லாங்குழல் மாமனை யாள்தழீஇக்
கொண்ட காதலர் கூவுதற் கிங்குற(து)
எண்டி சைக்கணெங் கெய்தின ரோவென்று, (8)

166. மாத வத்துரு வாசன் மரத்துறும்
பாத கத்தியைப் பார்த்தரும் பாவிநீ
யாதொ ருத்தர்இன் பத்தணைந் தோரையிப்
போது ரைக்கப் பொருக்கெனப் பேர்சொல்லி. (9)

167. நிழல்ப ரப்ப நிமிர்கெழு பாசடைப்
பழும ரத்தின்நாப் பண்தணந் தில்லிடத்
தொழுகெ னக்குழை யோட்டிக் குமிழ்மறித்
தெழுக யற்கண் எறிந்திடும் ஏந்திழாய்! (10)

---

162. முனிவிர்-(துருவாச)முனிவரே! கோளி நாப்பண் தரிக்கின்றனள் என்?-ஆலின் மத்தியில் தங்குகின்றாள்; இது என்ன காரணம்?

163. மாதவத்தினர்-துருவாசர், பவம்-பாவம்; பவங்குறித்து ஒல்லை அணைந்தோர்; ஒல்லை-விரைவு; பவம்-பழவினை-என்னலுமாம். களவிற்புணர் வீரர்-வஞ்சப் புகழ்ச்சி.

164. இடக்கர் அடக்கலில்-தவறான காரியத்தை மறைப்பதால். மறைப்பதால் வெளிப்படாது-எனக் கூட்டுக. அவற்கும்-புண்டரீகனுக்கும்.

165. புண்டரீகம்-தாமரை. புண்டரீகன் (சிலேடை)

167. பாசடை - பசிய இலை. குழை...ஏந்திழாய்! (அசமுகியைப் பார்த்து மாயை விளித்தது); பழுமரம்-ஆலமரம்-குமிழ்-குமிழ்ப்பூ-மூக்கு. "மூக்கரிந்து மண்ணில் எங்கணும் தூக்கி வைத்தென குமிழ் மலரும்" காஞ்சி புரா-நாட்டு.59. 'மலர்க் குமிழ் ஒத்துள துண்டம்'-திருப்.198.

168. மனக்கொ ளத்துரு வாசன் மொழிப்படி
நினைத்தி யைந்தவர் தம்பெயர் நீசொலிச்
சினைப்ப ராரை செறிந்தனை நேடியே
நினைத்துன் உள்ளத்து நீமறந் தோர்மற்றும். (11)

169. நின்னை மேவு நிகரில் மறையவர்
பின்னர் கூடும் பிரம சரியரில்
மன்னு வோரின்ப வாரிதி யில்லுனை
சன்னி யாசியர் சாற்றுந் தபோதனர். (12)

170. எண்ணி றந்தபேர் இங்ஙனம் அண்மிசேர்ப்
பெண்ண லஞ்செய் பெருவலி யால்தழீஇ
நண்ணி யவ்வத னால்விர தபங்கம்
எண்ணம் அற்றெய்தி யின்னுயிர் நீத்துளோர். (13)

171. பாந்த ளம்பிடர் மேய பரவையம்
பூந்து கிலுடைப் பூவுல கத்துளோர்
ஆய்ந்து கூறில் அளப்பிலர் வட்டமிட்
டேந்தி ளங்கொங்கை! இல்லறம் நீத்தரோ. (14)

172. மற்று மாதவர் வாண்முகம் நோக்கியே
செற்றம் இன்றித் திரும்பவும் இப்படிச்
சொற்ற னைதவத் தோரில் விசிட்டனாய்க்
கற்ற புண்டரீ கன்னுளங் காய்ந்தரோ. (15)

173. தீய அச் சொற் செவிபுகப் பெற்றுமுட்
காயுங் காமக் களவவி சாரியாய்
மேய காந்தை வினோதம் அறிந்துவே(று)
ஆயி மையை யருங்கடி வேட்டிலன். (16)

---

168. சினை-கிளை. பராரை-(ஆலின்) பருத்த அடிப்பாகம். நீ என்பது அசமுகி.

166-168. பேர் சொல்லி-மரத்தின் நாப்பண் தணந்து-இல்லிடத்து ஒழுகென (துருவாசர் சொல்ல)-துருவாசர் மொழிப்படி நினைத்து அவர்(கள்)தம் பெயர்(களை) நீ சொல்லி-பராரை-செறிந்தனை-என முடிக்க.

169. பிரமசரியர், இல்மன்னுவோர் (இல்லறத்தோர்), சந்நியாசியர். தபோதனர் (வானப் பிரஸ்தர்). உனை சந்நியாசியர்-வினைத்தொகை.

170. அண்மி-அடைந்து, நீ பெருவலியால் தழீஇ நண்ணிய அதனால் எண்ணம் அற்று விரதபங்கம் எய்தி-உயிர் நீத்துளோர்-எண்ணிறந்த பேர்-எனக் கூட்டுக. விரத பங்கம் எண்ணம் அற்று எய்தி...தம்மை அறியாமலே (விரதபங்கம் எய்தி).

168-170. நீ மறந்தோர்-மறையவர்-பிரமசரியர்-தபோதனர்-உயிர் நீத்துளோர் எண்ணிறந்த பேர்.

171. பாந்தள்-ஆதிசேடன்; பிடர்-புறங்கழுத்து; பரவை-கடல். 'பரவையம் பூந்துகில் உடைப் பூவுலகு'—'நீர் கொண்ட கடலாடை நிலமகள்'-**காசிக்கலம்.2**; 'பாய் திரை உடுத்த ஞாலம்'-**கல்லாடம்** (முருகர் துதி).
நீத்தர்-நீத்தவர்-இல்லறம் நீத்தர் அளப்பிலர். ஏந்திளங் கொங்கை-கொங்கையளே!

172. மாதவர்-துருவாசர், சொற்றனை-நீ சொன்னாய், நீ-அசமுகி. விசிட்டன்-பெரியோன்

173. களவு-அவிசாரியாய். காந்தை-மனைவி.

174. காத லாலுனைக் கையக லப்பெறு(து)
ஆத ரத்தொ டவனிருந் தான், மினே!
மாத வத்துரு வாசன் நினைக்குறித்(து)
ஓதி னன்கள வொண்டொடி யேயென்று, (17)

175. தாவி லாமுற் சனனத்து நீ செய்த
பாவம் பின்னப் பயன்களை யேதரும்
ஆவ தீதிதற் கையம் இலையென்று
நோவ வேயுனை நோக்கி நுவன்றனன். (18)

176. பின்னர் மாமுநி பேசுசொற் கேட்டுழை
மன்னு புண்டரீ கன்மா ணவர்களோ(டு)
உன்ன ருஞ்சொல் உரைத்தனன் கைதவந்
துன்னு வேடன் துருவாச சைவனே! (19)

177. மற்றும் எம்மை வயிணவர் என்றுமுன்
செற்ற மோடு சிலசில பாதக
மற்று மேகுறித் தேயெமக் கடாத்து
சொற்ற னையெனச் சொல்புண்ட ரீகனே, (20)

எண்சீர் விருத்தம்

178. அழித்திடுமுக் குறும்பெறிந்திந் தியமைந் துள்ளத்
தடக்கியருள் துருவாசன் அவிர்வெண் முத்தங்
கொழித்திடுமாற் புணரியக டுளைந்து யிர்த்துக்
கொப்புளித்த கடுங்காள கூடத் தோடு
செழித்திடுமூ ழிக்கனலும் ஒருங்கு கக்கித்
திருகுசினம் புழுங்கியெழச் சீற்றம் ஓங்க
விழித்திடுகண் புருவஇணை நெறிக்கப் பார்த்து
விம்பஇதழ் கடைதுடிக்க வெகுண்டு ரைத்தான். (21)

179. சுருள்விரிநெட் டிலைக்கருந்தா தொழுக வாட்டித்
துகளறமன் னியவுளியங் கடுப்பச் செவ்வி
யுருள் குறுங்காய்க் கவிழ்தலைத்தாற் றரம்பை சுற்றி
யோசைதெளி தந்திரிமாக் கதண ஞெண்டு

---

174. மினே-மின்னே!(விளி)
176. உழை-பக்கம். உன்னருஞ் சொல்-உன்ன அருஞ் சொல்-நினைத்தற்கு அரிய சொல்; துருவாச சைவனே (நீ) கைதவம் துன்னு வேடன்; கைதவம்-கபடம்.
178. மால்-பெரிய: புணரி அகடு உளைந்து-புணரி-கடல்; அகடு-வயிறு. காளகூடம்-ஆலகாலவிஷம். விம்பம்-ஒளி.

வெருள்கலக விழிமடவார் பசுந்தோ ளென்ன
வெதிர்கொடுநாட் பலமுறுத லென்ன அந்தோ
மருள்விழிமான் குளம்பிவர்வெம் பகத்துக் காக
மயங்கியிவ ளுடன்கூடி மனம கிழ்ந்தாய். (22)

180. விரிதிரைவா ரிதியுலகி லதனுல் தீய
விஞ்சைவல்ல வுளத்தின ராய்க் கொடிய பாவம்
புரியுமிம்மா ணவர்களுடன் கூடி நீயும்
பொருக்கனவே பகத்திலுறுஞ் சித்த னுகிச்
சுருதிமொழி வைதிகத்தின் வழிநிந் தித்துத்
துகளுறுசாத் திரத்துமனம் வைத்தெஞ் ஞான்றும்
புரிசடையெம் பரனிடத்திற் பத்தி யின்றிப்
போதியினி யெனக்கறுத்துப் புகன்று பின்னும் (23)

181. பழுதறுமான் மாப்பரிக்கு மறையோர் தம்மிற்
பாதகமே வடிவெடுத்த கயவிர்! நீவிர்
தொழுதகுதே சிகனில்லா ளுடனே யந்தோ
தோய்ந்தவினை பிடர்பிடித்துந் திடவே சிந்தை
முழுதும்வெரு வாதுமணந் திடலால் நுங்கள்
மொய்குழல்வெண் ணகைத்துவர்வாய் மனையார் எல்லாங்
கழுகெனமா சுறும்விபசா ரிகளே யாகக்
கடவர்களென் றுடன்சபித்தக் கணமு னிந்தே. (24)

182. தழைகுழைத்து நிழல்பரப்பும் பழும ரத்தில்
தழீஇயிருக்கின் றவள்வதனஞ் சிறிது நோக்கிப்
பிழைவிரித்துப் படரிருள்நண் ணியவு ளஞ்சேர்
பேதாய்மற் றெமைவலியா ல் தழுவ வேண்டிக்
குழைகிழித்த கயல்புரளக் களவின் விம்மு
கொம்மைமுலை மிசைத்தழுவிக் கொண்டாய், நம்பால்
மழைபழித்த வுருவசுரர் மரபில் தோன்றி
வரக்கடவை யெனமீண்டும் வகுத்து ரைத்தான். (25)

183. கதுமெனச்சென் றுட்டினிடைக் கரந்தி ருந்த
காரணத்தால் முறுக்கவிழ்ந்து கமழ்செந் தோட்டுப்
பதுமமலர் கடுக்குமுகம் ஒருவி யார்க்கும்
பழிப்பாடு முகமாகக் கடவாய் பாவி!

---

179. முதல் முன்றடி நன்கு விளங்கவில்லை. கலகவிழிமடவார்- 'கலகவிழி மாமகளிர்'- திருப்-827. மான் குளம்பு இவர் வெம் பகம்- மான் குளம்பைப் போன்ற அல்குல்; இவர்- ஒத்த; 'கலைக்குள் மறைத்திடு மானின் குளப்படியிற் சளப்படும் இப்பவக் கடலை'- திருப்.797.

182. மழை- மேகம். மழைபழித்த உரு அசுரர்- கருமை நிறங்கொண்ட அசுரர்- காரரக்கர்.

183. பழிப்பு ஆடு முகம்- சிலேடை- பழிப்புக்கு இடமான முகம். பழிக்கத்தக்க ஆட்டின் முகம்- விதுவின் அகடு அணவு பழுமரம்- சந்திரன் வயிற்றைத் தொடுகின்ற ஆல மரம். செய்யுள் 198-ம் பார்க்க. வடமரம்- ஆலமரம்; மாதே- விளி-அசமுகியைக் குறிக்கின்றது.

விதுவினக டணவுபழு மரம்விட் டிங்கே
விரைந்திறங்கிச் செலவேண்டும் அங்கே வாச
மதுநுகர்பாட் டளியெனச்செல் லெனச்ச பித்தான்
வடமரம்விட் டுடனிறங்கி வந்தாய் மாதே! (26)

184. செந்தழற்கற் றைக்கொழுந்து விரித்தல் மானுஞ்
செங்காந்தட் பொற்கரங்கூப் புபுதொடர்ந்த
தொந்தவினை நைந்திடச்சென் றொடுங்கித் தாழ்ந்து
துருவாசன் மலர்சரணும் போரு கங்கள்
வந்தனையைந் தங்கமும்பூ வுறவ ணங்கி
வாய்புதைத்துக் குனிசிலைபோ லுடல்வ ளைத்துச்
சிந்தையுட லெங்குமன நடுங்கி நின்று
தெருமரலால் ஒருவசனஞ் செப்பி நின்றாய். (27)

185. அத்தன்மை நீ புரிந்தும் அடியேற் குன்மேல்
அணுத்துணையுஞ் சீற்றமின்றி யளப்ப ருஞ்சீர்
மெத்துபெரு மகிழ்ச்சியுளத் ததனால் உண்மை
மிக்கோய்!நின் சரணடைந்தோர்க் கருள்பு ரப்போய்!
எத்தன்மை யாகிலுமற் றெளியேற் குள்ளம்
இரங்கியருள் புரிதியென் று வெருவித் தேம்புஞ்
சித்தமுடன் அனேகவிதம் உரைத்து வாழ்த்திச்
சேயிழாய்! வணங்கியவப் பகல்தெ ளிந்தே, (28)

186. நிலவுமிழ்வெண் ணீற்றினவிர் ஒளிப ரந்த
நெற்றிமுனி வரன்மகிழ்ந்து கருணை கூர்ந்து
பலவிதத்தால் ஏத்தும்உனைப் பார்த்துப் பொல்லாப்
பண்புபுரி வோய் உனது பாவம் எல்லாம்
உலகறிய வுரைத்ததனாற் கழுவப் பட்ட(து)
உண்மைமற்றி யாமொன்றும் புரிந்த தில்லைச்
சிலகரும விசேடத்தால் அசுரர் தம்பாற்
சித்தமகி ழச்சனித்துச் சிறந்தே யம்மா. (29)

187. உள்ளமது விழைந்தபடி யிளைஞர் தம்மை
யொருதலைக்கா மத்தினால் மோகிப் பித்துக்
கள்ளவிழ்தண் மலர்த்தொடையாற் பிணித்துக் கொவ்வைக்
கனியிதழூற் றெழுகமுது களித்தே நல்கி

---

184. 'செந்தழல்... செங்காந்தள்'. 'சுடர்ப்பூங் காந்தள்'. திருமுரு. 'தீயின் அன்ன ஒண் செங்காந்தள்.' மலைபடு- 145. செங்காந்தட் பொற்கரம். 'காந்தட் கரம்-திருப்-937. சரணும் போருகங்கள்- பாத தாமரைகள். ஐந்தங்கமும் பூவுற வணங்கி- பஞ்சாங்க நமஸ்காரம் செய்து, தெருமரலால். மனச்சுழற்சியால்.

187. வளை.வள்ளை-காது, குமிழ்-மூக்கு-167-ன் குறிப்பைப் பார்க்க. அளகம்.கூந்தல். வானம்.வானப்பரப்பு, வானங் கொள்ளை கொளப் பணைத்திருக்கும் முலைகள். "அந்த விண்ணெல்லாந் தழுவ எழுமுலையாள்"- திருவாரூருலா-397.

துள்ளுகயல் விழிகள்வளைக் குழைகள் தாவித்
தொடர்ந்துகுமிழ் மறித்தளகஞ் சோர வானங்
கொள்ளைகொளப் பணைத்திருக்கும் முலைகள் விம்மிக்
கூடியபின் னொருகாலங் குறித்து வந்தே, (30)

188. மற்றுமெமைக் கைக்கிளையான் மோகிப் பித்து
வலிதுடலம் ஞெமுங்கமலர்க் கரந்த ழீஇ மால்
முற்றுமெமைக் களித்துமணந் திருவர்ப் பெற்று
முடக்கைநெடுந் தடக்கைமதக் கலுழி பாயச்
சுற்றும்வரி யளிமுரலுங் கவுண்மாச் சாத்தற்
சூழ்கணங்கள் தடிதலினல் தொலையாப் பாவஞ்
சற்றுமறத் தணந்துபருப் பதத்து மேன்மை
சாற்றியசீ பருப்பதத்திற் சார்ந்து பின்னும், (31)

189. உத்தமமா கியவயிராக் கியத்தைப் பெற்றே
யோங்கொளியாய்ப் பரமசோ பனமா யென்றும்
நித்தியமா கியகயிலை யடைந்து செவ்வாய்
நீலவிழி வெண்முறுவற் கவுரி பூசை
சித்தமகி ழப்புரிந்தா னந்த வீட்டில்
திளைத்திடுவை யென்றுபெம்மான் மலர்த்தாள் சிந்தை
வைத்ததுரு வாசனிந்தப் படியு ரைத்தான்
வனப்புநிறை தனையாய்! அவ் வாய்மை யாலே, (32)

190. கரியமுகில் உருவசுரர் குலத்தின் எம்பாற்
கட்டழகு விட்டொழுகு புதல்வி யாகப்
பரிவினொடு பிறந்துவளர்ந் துளம் நினைந்த
படிமதன மோகினியாய்ப் பலபோ கங்கள்
பிரிவறவே யருந்தியண்ட முகட ளாவிப்
பெருத்திடுசீ பருப்பதத்தை யடைந்தாய் மின்னே!
திருவுருவாம் அறுமுகவன் மலர்த்தாள் தன்னைச்
சிந்தனைசெய் திடினுனது செய்பா வம்போம். (33)

191. கண்ணுதல்மே வியகயிலை தன்னின் மேவிக்
கவுரியை! நூல் முறையின்வழி பாடு செய்து
பெண்ணணங்கா கியதனையாய்! உவட்ட றாத
பேரின்ப வாரிதியில் துளைந்து மூழ்கி
யுண்ணெகிழ மயிர்பொடிப்ப விழிநீர் மல்க
உரைகுழறித் தழுதழுத்தென் புருகச் சோதி
யண்ணல்பொலங் கழலடிக்கீ ழொன்று பட்டே
யானந்த முற்றிருப்பை ஐயம் இன்றே. (34)

---

188. கைக்கிளை- ஒருதலைக்காமம். இருவர்-வில்வலன்-வாதாபி. கவுண்மாச் சாத்தன்-யானைவாகனங் கொண்ட சாத்தனார். சாத்தற் சூழ் கணங்கள் தடிதலினல்-சாத்தனைச் சூழ்ந்த மாகாளர் ஆதிய கணங்கள் தண்டிப்பதனல். கந். புரா. மகாகாளர் வருபடலம் பார்க்க.

## அத்தியாயம் 8.
### மாயையின் வரலாறு

இதைக்கேட்ட அசமுகி உனது வரலாறு யாதெனத் தன் தாயை (மாயையை) வினவ, மாயை தான் காசிபருக்குத் திதியென்னும் பெயருடன் மனைவியாயிருந்து பல அசுரர்களை ஈன்றதையும், அவ்வசுரர்கள் தேவர்களால் போரில் துன்புறுத்தப் படுவதைக் கண்டு வருந்தி அவர்களை வெல்ல வல்ல அசுரர்களைப் பெறவேண்டி சிசயிலமலையில் நின்று கீழே விழுந்து இறந்து அசுரர் குலத்திற் பிறந்து சூரபதுமனாதியரைப் பெற்று அவர்களைக்கொண்டு தேவர்களை வாட்டியதையும், இனித் தான் கயிலைக்குச் சென்று இறைவனை வழிபட்டு வீட்டின்பம் பெறப்போவதையும், காசிபர் தன்னைப் பிரிந்தபின் அதிதியை மணந்து தன் மேலுள்ள மோகத்தைக் கைவிட்டதையும், சக்கிரனது அருளால் முக்காலத்து உணர்ச்சியைத், தான் பெற்றிருப்பதையும் விவரமாகக் கூறினள். பின்னர் அசமுகி, மாயையுடன் சிசயிலத்தில் இறைவனை வழிபட்டு ஏத்திக் கயிலையை அடைந்து அங்கு தேவியை அருச்சித்து ஏத்தித் தன் தாயுடன் வீடுபேறு பெற்றனள்.

## அத்தியாயம் 8.
### மாயையின் வரலாறு

192. இலகுமெழில் அசமுகிகேட் கின்றாள் அன்னாய்!
    எனது விருத் தாந்தமெலாம் இனிது ரைத்தாய்;
அலகிலிசை பெறுமுனது சரிதம் எல்லாம்
    ஆதரவாய்த் தமியோனுக் கருள்செ யென்ன
உலகுபுகழ் மாயைமகிழ் புதல்வி சொற்கேட்(டு)
    உளமகிழ்மின் னே! கேட்டி முன்னர் மாதர்
திலகநிகர் திதியெனும்பே ருடையே னாகிச்
    செஞ்சடைக்கா சிபன்மனைவி யெனச்சி றந்தே, (1)

193. மற்றெனக்கிங் களப்பருஞ்சீர் அசுர ரான
    மைந்தர்களுண் டவர்களைப்போர் வலியால் தேவர்
செற்றனரப் போதெளியேன் புதல்வர் சோகந்
    தீராத நாற்கெழுமு பையு ளாகி
அற்றமொடு தேம்பியிளைத் திந்த வெற்புக்(கு)
    அரசான திருச்சயிலம் அடைந்து கோபம்
உற்றுவலி சேர்புதல்வர்ப் பயந்து வானோர்
    உயிர்வதைக்கக் கடவர்களென் றுளத்தில் உன்னி, (2)

194. சங்கற்ப மனத்தொடுசீ சயிலம் நின்று
    தரையில் வீழ்ந் துயிர் நீத்துத் தனையாய்! சூற்கொள்
கங்குலுரு அசுரர்குலத் துதித்தேன் மேன்மைக்
    காசிபர்பாற் சூரபத்மன் முதலா யுள்ள
துங்கமுறு புதல்வரைப்பெற் றவரால் மானச்
    சுரரையெல்லாம் புடைப்பித்து முற்றோற் றத்தின்
மங்கலசுந் தரியாய்நின் றவளைப் பார்த்து
    மகிழ்ந்து தனை யாய்! உன்னை வருந்திப் பெற்றேன்; (3)

---
193. பையுள்-துன்பம். அற்றம்-சோர்வு.

195. இறும்பூதே சங்களிடத் தரிய வேட்கை
யெய்தியதால் மகிழ்நனைமீண் டடைந்தே னில்லை
பெறும்போகந் தருகிரிக்குள் அதிக மேன்மை
பெற்றகயி லையைநயப்பாற் பொருந்தி யீசன்
நறும்போது கமழ்வாசக் கூட்டுப் பொற்றாள்
நாண்மலர்தூய் வழிபட்டா னந்த வீட்டில்
உறும்போகம் அடைந்துசெம்மாந் திருப்பேன் என்றும்
ஒண்ணுதல் ஈதையமில்லை யுண்மை யாமால். (4)

196. அண்டமுக டணவுகிரி தமக்குள் மேன்மை
யாகியசீ சைலமிசை நின்று வீழ்ந்து
பண்டையுணர் வுற்றிடுகா ரணத்தால் ஆவிப்
பற்றுவிட்டேன் அப்போதுன் றாதையான
எண்டிருசீர்க் காசிபமா முனிவன் றேம்பி
யிருந்துயரக் கடல்மூழ்கித் தணந்து மற்றோர்
கண்டனைய சொல்லதிதி மணந்தென் மோகங்
கைவிட்டார் சுழலுமணிக் கருங்கண் மாதே!. (5)

197. புகருதவு கருணையினால் எனக்குள் ளத்திற்
பொருக்கெனமுக் காலத்தின் அறிவு தோற்றுஞ்
சிகரமெனப் பணைத்திறுகி யடிக னத்துச்
செம்மாந்த குவிமுலையாய் ! உனக்கிப் போது
நிகரறுமுற் சரிதமெலாம் அடைவில் தேர்ந்து
நிகழ்த்தினேன் என்ன அசமுகியீன் றாள்முன்
பகருமொழி தனையடைவிற் கேட்டே யின்பப்
பரவைபடிந் தன்னைபொற்றாள் பணிந்து மாதோ, (6)

198. மதியினக டுரிஞ்சுலவை பொதுளும் வேங்கை
மலர்கனகம் வழங்குகிரி தமக்குள் மேலாய்க்
கதிதருஞ்சீ சைலமிசை யீன்றா ளோடு
காதலுடன் கூடவருள் பரமே சர்க்குப்
புதியமுகை முறுக்குடைந்து பிலிற்றுஞ் செந்தேன்
பொழிதருநாள் நறுமலர்தூய் வழிபட் டேத்தி
முதியவுரு அந்தத்திற் கிரிகட் கெல்லாம்
முதன்மைபெற வளர்கயிலை வரைய டைந்தே. (7)

---

195. இறும்பூ தேசங்கள்- மலைப்பிரதேசங்கள். இறும்பு-மலை; ஈறுநீண்டது. மகிழ்நன்-கணவன் (காசிபர்), ஈது ஐயம் இல்லை.
196. கண்டு-கற்கண்டு. அதிதி-தேவர்களின் தாய் (திதி-அசுரர்களின் தாய்).
197. புகர்-சுக்கிரன்.
198. மதியின் அகடு உரிஞ்சு... வேங்கை.— 'விதுவின் அகடு அணவு பழுமரம்' என்றார் முன்னும்- 183,ம் செய்யுள் பார்க்க. 'இளந்திங்கள் அகடுரிஞ்சு மணிமாடம்'— பெரிய-திரு- 7-4-1 வேங்கைமலர் கனகம்வழங்கு(ம்)- 'செம்பொனார் தருவேங்கை'- தேவா-சம்-246-1. 'வேங்கைப் பொன்மருள் நறுவீ; ஐங்குறு- 217.

199. அவ்விடத்தில் அசமுகியாள் அங்கண் மல்கும்
அண்ணல்மலை யரையனருந் தவத்தில் ஈன்ற
கொவ்வையிதழ்த் தரளநகைக் குமுத வாய்பொற்
குழைபுரட்டி யெறிகயற்கட் சிலைப்பு ரூரச்
செவ்விமயில் மலர்ச்சரணத் தருச்சித் தேத்தித்
திகழ்ந்துகது மெனத்தனைமுன் வருந்தி யீன்ற
அவ்வையுடன் கூடவெழு பிறப்பற் றெம்மான்
அடிக்கமல வீடுதனை யடைந்தா ளன்றே. (8)

---

## அத்தியாயம் 9.
## விபூதி மான்மியம்

*முருகவேள் அகத்தியருக்குச் செய்த உபதேசங்களுள் ஒன்றாகிய **விபூதி** மான்மியத்தை முனிவர்கள் வினவ, சூதமுனிவர் சொல்லுகின்றார் :— கற்பம், அநுகற்பம், உபகற்பம என விபூதி மூவகைப்படும். இறைவனைப் போற்றி ஐந்தெழுத்தை நினைத்து திருநீற்றை விதிப்படி தரிக்க வினைஒழியும். பஞ்சபூதங்களும் திருநீற்று உருவதாகும். திருமால் ஆதிய யாவரும் திருநீற்றைத் தரிப்பார்கள். திருநீற்றால் பலவகைச் செல்வமும் உண்டாகும்; பலவித துயர்களும் நீங்கும். திருநீற்றை நீரிற் குழைத்து உச்சியாதிய பதினைந்து இடங்களில் தரிப்பவன் மூத்தேவரும் ஆவன். அதை நீக்கியவன் பாவி யாவான். அதை உட்கொள்ளுவோன் யாவராலும் தொழப்படுவான். உபநிடதங்கள் திருநீற்றின் பெருமையைக்கூறும்.*

*முன்னொரு பிரளயத்தில் திருமால் ஆலிலையில் துயிலும்பொழுது இறைவர் அங்குச் செல்ல அவரைக்கண்ட திருமால் 'நீ யார்' என அவரை வினவ, இறைவர் அவருக்குத் திருநீறு அளித்தார். அதைத் திருமால் நெற்றியில் அணிய அவர் சிவ ஞானம் அடைந்து இறைவரை வணங்கினர். இறைவர் திருமாலைத் தம் மனைவியாக்கி அவரிடத்தில் ஐந்து தலைகொண்ட பிரமனைத் தோற்றுவித்தார். அந்தப் பிரமன் செருக்குற்றதை அறிந்த இறைவர், **வடுக தேவரால்** பிரமனது உச்சித் தலையைக் களைவித்தார். அன்றுமுதல் பிரமன் நான்முகன் ஆனான்.*

***சர்ப்பாசுரன், பஞ்சமேட்டிரன், அனலாசுரன்** என்ற மூவரால் இறந்த வானவர்களைத் **திருநீற்றால் வீரபத்திரர்** ஒரு கண நேரத்தில் எழுப்புவித்தார்.*

*அரக்கன் ஒருவன் **வாமதேவ முனிவரைத்** தழுவ அவர் உடலிற் பூசியிருந்த திருநீறு அவன்மேற்பட்டு அவன் வீடுபேறு உற்றான்.*

*பரதார விருப்பினனான அந்தணன் ஒருவன் இறந்தபின்பு சுடுகாட்டிலிருந்து வந்த ஒரு நாயின் காலிலிருந்த சாம்பல் அவன் உடலிற்பட்டது; அதனால் அவன் நற்கதி அடைந்தான்.*

## அத்தியாயம் 9.
## விபூதி மான்மியம்
### அறுசீர் விருத்தம்

200. தொழுதகு முனிவர் சொல்வார் தொன்மைநூற் புராணம் எல்லாம்
முழுதுணர் சூத கேண்மோ முருகவேள் அகத்தி யற்குப்
பழுதிலா வுபதே சந்தான் பண்ணினன் என்றாய் நீயிப்
பொழுததை யின்ன தென்றே புகறியென் றுரைத்த லோடும்.

---

199. சிலைப் புரூரம்-புரூரம்-புருவம்- "புரூரம் நெறிக்கும் திண்சிலை" (பிரபோத.3-45) மயில்-பார்வதி. அவ்வை-தாய் (மாயை). 'அவ்வைக்கு மூத்த மாமன்'-சிந்தா.1046.

201. முநிவிர்காள்! கேண்மின் சொல்வேன் முற்செய் பாவங்கள் தீர்த்துப்
புனிதமாக் காநிற் கின்ற பூதிமான் மியமுஞ் சோதித்
தனிமுதல் உருத்தி ராக்க சரிதமுஞ் சிகர மேருக்
குனிசிலை யண்ணல் நாமங் கூறுமான் மியங்கள் தாமும், (2)

202. சிவதரு மங்தொ குத்துச் செப்புமான் மியமும் அன்னோற்(கு)
அவமதி யால்து ரோகம் ஆக்குகா ரணமுஞ் செவ்வன்
நவமலர் கொணர்ந்து பூசை நடாத்துமான் மியமும் என்றுஞ்
சிவமுணர் யோகப் பேறுஞ் சிவஞான சரிதந் தானும், (3)

203. அந்தணீர்! இவைய னைத்தும் அறுமுகக் கடவுள் சந்தக்
கொந்துலா மலைய மேவு குறுமுநிக் குரைத்தான் அன்னோன்
தந்தருள் கருணை யாற்செந் தாமரைச் சரணஞ் சூடி
வந்தனை புரிந்து சொல்கேன் மனத்தொடெல் லீருங்கேண்மின். (4)

204. அண்ணல்மெய் வடிவாங் கற்பம் அநுகற்பம் உபகற் பம்மென்(று)
எண்ணுமூ வகைத்தாம் பூதி யெளிதினெப் பவமுந் தீர்த்தே
நண்ணுற விசையின் ஈசன் நறுமலர்ப் பதம்நி னைக்கப்
பண்ணியே பத்தி முத்திப் பயன்நல்கும், பெயர் நினைந்தே (5)

205. ஏவன்மற் றொருவன் போற்றி யீசன்மந் திரவெண் ணீற்றைத்
தாவில்சீர் விதியா தாகத் தரிக்கின்றான் அவனுக் குள்ள
மேவரு வினைந்த தெல்லாம் விரைவிலுண் டாகும் வெய்ய
தீவினைத் தொடர்ச்சி யாவுந் தீருமக் கணத்தின் மாதோ. (6)

206. வேதவே தாந்த எல்லை மேவியுள் உணர்ந்தோர் யார்க்கும்
பூதர அரசன் பாவை புணரிறை மான்மி யங்கள்
ஆதியோ டெத்தி றத்தால் அறிவரி தத்தி றம்போற்
பூதிமான் மியமுந் தேர்ந்து புகலரி துண்மை யாமால். (7)

207. ஆற்றருந் தவத்தீர்! வாய்மை ஆதர வரிய ஞானங்
காற்றனல் உதகம் பூமி ககனமா தியஅ னைத்தும்
நீற்றுரு வாகும்; போதன் நெடியவ னுதி தேவர்
சாற்றுநால் வருணர் மற்றோர் தையலர் தரிப்ப தாமால். (8)

---

202. அன்னோற்கு-சிவனுக்கு.

204. பூதி-பவம் தீர்த்தே. ஈசன் பதம் நினைக்கப் பண்ணியே பயன்நல்கும்— என முடிக்க.

204—205. பெயர் நினைந்தே ஏவன் போற்றி...தரிக்கின்றான்-எனக்கூட்டுக.

206. பூதரம்-மலை. பூதர அரசன்-இமயமலை. பாவை-பார்வதி.

207. உதகம்-நீர். போதன்-மலரவன் (பிரமன்).

208. களங்கனி யனைய கண்டன் கருதரு மகிழ்ச்சி வெண்ணீ(று)
உளங்கொள்மந் திரத்தால் அங்கம் உறத்தரித் ததனால் எட்டு
வளங்கெழு செல்வத் தோடெண் வகைபெறும் சித்தி யும்நீர்
துளங்குசெஞ் சடையோன் பாதந் தொழுதகும் அன்பும் உண்டாம்.

209. எண்ணரு சத்தி யாகி ஏகமாம் ஆண வத்தில்
திண்ணிய இருட்பி ழம்பு சீத்துவெண் ணிலவு கான்ற
புண்ணிய நீறெல் லோர்க்கும் பொருவிலா வசியம் நல்கி
கண்ணகன் ஞாலம் போற்றுங் களிபெறுஞ் சீர ளிக்கும். (10)

210. திங்களங் கண்ணி வேய்ந்த செஞ்சடைக் குழகன் நீற்றைப்
பங்குசேர் பிறையெ யிற்றுப் பாரிடங் குணபங் கூளி
வெங்கொலை நிருத ரோடு விறற்கொடுங் கயவர் கண்டால்
அங்கமுள் நடுங்கி வெய்துற் றகன் றுசேண் படர்கு வாரால்.(11)

211. திருகுவெஞ் சினம்பு மூங்கித் தீயுமிழ் நயனப் பேழ்வாய்
பருகுயிர் செந்நீர் தேக்கும் பருப்பத அகட்டுச் செந்தீ
யுருகிவார்ந் தேறு குஞ்சி யொளிமுய லகன்வெண் குட்டம்
பெருகுநோய் கணத்தின் மாழ்கும் பிஞ்ஞகன் நீற்றால் மாதோ.

212. தெள்ளுநூல் துறைப டிந்த சீரிய ராலெஞ் ஞான்றும்
எள்ளரு நீறுத் தூளம் எழில்திரி புண்ட ரங்கள்
உள்ளமோ டணிதல் வேண்டும் உத்தூளம் புண்ட ரந்தான்
விள்ளரு மனத்தால் என்றும் விதிமுறை கடக்கொ ணாதால்.

(வேறு)

213. குழவி மதிக்கோ டுழவிண்ட
கொன்றை சேருஞ் செஞ்சடையோன்
விழவு பகரு மான்மியத்தில்
வெண்ணீ றிலகு புண்டரத்தில்
அழகு திகழுத் தூளத்தில்
அருமா மறையில் அவருண்மை
பழக விழையும் விருப்பில்லார்
அவரே கொடிய பாதகரே. (14)

---

208. எட்டு...செல்வம்-அஷ்ட ஐசுவரியம். ராஜாங்கர் மக்கள்-சுற்றம்-பொன், மணி, நெல், வாகனம், அடிமை. எண்...சித்தி-அஷ்டசித்தி-அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.
209. சீத்து-நீக்கி.
210. பாரிடம்-பூதம்; குணபம்-பிசாசு; கூளி-பேய்.
211. முயலகன்-முயல்வலி (வலிப்பு நோய்). முயலகன்-தாருகா வனத்து இருடிகள் யாகத்தில் எழுந்த பூதம். இதன் பெயர் கொண்ட நோய் 'முயலகன்'
212. உத்தூளம்-உத்தூளனம்- நீரிற் குழையாது விபூதியை வரியின்றிப் பூசுதல். திரிபுண்டரம்-நீரிற் குழைத்து விபூதியை நெற்றியில் மூவரியாக அணிதல்.
213. விழவு—திருவிழா.

214. நீறு புனலிற் குழைத்துமுடி
நெற்றி களமார் புந்தியிரு
வேறு புறந்தோள் நடுக்கரங்கள்
வென்னோ டெருத்த தலம் பதினைந்(து)
ஈறில் திரிபுண் டரந்தரித்தோன்
எவனோ அவனே மலரயனும்
கூறும் அவனே திருமாலும்
அவனே முக்கட் குழகனுமே. (15)

215. சுரும்பு பெடையோ டிதழ்குடைந்து
சொரியு மதுவாய் மடுத்தருந்த
அரும்பு விரியும் நறுமென்தோட்
டம்போ ருகத்தோன் மணிநாவில்
விரும்பு மறைக ளாற்பட்ட
விதியென் பதியா தொன்றுளதுள்
திரும்பு வதனைத் தணந்தவனே
தீய பதிதன் ஆவனன்றே. (16)

216. அளத்தற் கரிய பாதகனு
னூ முட்கொண் டவனெவரும்
இளத்தற் கரிய மொழிகளினுற்
கீர்த்தி யெடுத்துப் பலபழிச்சி
உளத்திற் பரிவாய் விதிப்படியே
உத்த மாங்க முதலாகத்
தளத்திற் படர்ந்து தொழப்படுவோன்
அவனுக் கிணையாச் சாற்றரிதால். (17)

217. நீதி புரிகா பாலியுப
நிடதம் உரைக்கும் வெண்ணீறு
தீதில் வருண நான்குடனாச்
சிரம நான்கு தனக்கும் எங்கோன்
ஆதி யருள்மந் திரத்தாலும்
அலகி லாமந் திரத்தாலும்
ஓதி வனையும் புண்டரமும்
உத்தூ ளனமுந் தரித்திடவே. (18)

---

214. எருத்த தலம்- கழுத்தின் பின்புறம்.
215. அம்போருகத்தோன்.தாமரை மலரோன்-பிரமன். திரும்புவதனை-திரும்புவதை; தணந்தவன்-நீங்கினவன்; விதியென்பது யாது-ஒன்றுளது; மறைகளிற் கூறப் பட்ட விதியெது உளதோ அதில் உள்ளம் திரும்புவதை நீங்கினவன்.பதிதன்; பதிதன்-குல ஒழுக்கம் தவறினவன்.
216. உட்கொண்டவன்-திருநீற்றை உட்கொண்டவன். பல பழிச்சி-பல வகையாகத் துதிக்கப்பட்டு;பழிச்சி-தொழப்படுவோன்-எனக்கூட்டுக. உத்தமாங்கம்-தலை. தளத் திற் படர்ந்து-பூமியில் விழுந்து பணிந்து;அட்டாங்கநமஸ்காரம் (செய்யப்படுவான்).

218. தரும முனிவர் சுவேதாச்சுவ
தரசா திகளுந் தாளஞ்சேர்
திரிபுண் டரஞா னங்கமெனச்
செப்பும் ஓர்நான் காம்வேதத்(து)
உரிய பொருளுந் தாளனமும்
ஓங்கு திரிபுண் டரமுநன்றாய்ப்
பொருவில் அஞ்ஞா னமனைத்தும்
போக்கும் எனவே புகன்றிடுமால். (19)

219. ஆறு லுங்கூர் அஞ்ஞானம்
அகற்று வதுகே வலஞானந்
தானே யாகும் அஞ்ஞானந்
தன்னைச் சிவஞா னங்கெடுக்கும்
நானு விதமற் றதிலுண்மை
நாடு முனிவர் பசுபதிதன்
ஆறு விரதம் அநுட்டித்தோர்
அவர்பால் உளதாஞ் சிவஞானம். (20)

பிரமன் தோற்றமும் வடுகரால் சிரம் அற்றதும்

220. ஓங்கும் உயர்வீட் டினைவிழைவோர்
உத்த மாங்க முதலாகத்
தீங்கு தெறுவுந் தாளனமுந்
திரிபுண் டரமுந் தரித்திடுவார்
ஈங்கு முன்னோர் பிரளயத்தில்
எறிநீர்ப் பரவை நடுவுலவை
தாங்கு பணைஆல் இலையின்நடுத்
தண்து யாயோன் அறிதுயிலும், (21)

221. அந்த வேளை பகவானும்
அண்ணல் அங்கண் அடைந்தனன்நீள்
சிந்து எவைக்கும் பெரிதாயுந்
திங்கள் மிலைந்தோன் சரணார
விந்தம் மருவும் பெருவிரல்மாத்
திரமே வேலை நனைந்ததப் போ(து)
ஐந்து படையோன் ஆண்டகையாம்
அமலர்க் கண்டு மயங்கியபின், (22)

---

218. சுவேதாச் சுவதரம்—108 உபநிடதங்களுள் ஒன்று. சாதிகள்-இனங்கள்.
219. கேவல ஞானம்-திரிகால ஞானம். ஆறு-கெடுதலில்லாத
220. தெறு-அழிக்கும். அறிதுயிலும்-அறிதுயில் கொண்டான்.
221. அண்ணல்-சிவன்; சிந்து-கடல்; பெரிதாயும்-பெரிதாயிருந்தும். வேலை-கடலால்; ஐந்து படையோன்-சங்கு, சக்கரம், வாள், வில், கதை-என்னும் ஐந்து ஆயுதங்களை உடைய திருமால்.

222. நீயா ரெனவப் போதிறைவன்
நீற்றை யவனுக் கெடுத்தளிக்க
மாயோன் வாங்கி நன்னுதலில்
மகிழ்ந்து தரிக்கச் சிவஞான
மேயா தரவின் அடைந்துதன்னை
வியப்பின் அறிந்து மதிமுடியுஞ்
சேயாம் உருவும் நுதல்விழியுஞ்
செவ்வான் உருவிற் சிறப்பொளியும், (23)

223. வாரி யகடு கிழித்தெழுந்து
வருகார் விடமுண் டிருண்டும் ஒளி
கூரு மிடறும் பேராண்மை
குலவு மாதே வனைக்கண்டுள்
ஆரும் விருப்போ டெழுந்துருகி
யட்டாங் கத்தால் தொழுதிரக்கஞ்
சேர அடிகள் போந்ததென்கொல்
செப்பு கெனவே சிவன் மொழியும். (24)

224. விண்ணின் முகடு கிழித்தோங்கி
விரியும் வடபத் திரந்துயில்வோய்!
எண்ணில் உலகம் படைக்கமறை
யிசைக்கும் பதுமத் தேவைமனம்
நண்ணி விதியால் தோற்றுவிக்க
நாடி யிஙன்வந் தடைந்தனஞ்சீர்
பண்ணும் எமதா ணையின் மனையாய்ப்
படிவம் எடுத்தே வருகவென்றே, (25)

225. பின்னும் உரைக்கும் நறுந்துளவோய்!
பெட்பி னுடன் நீ நமதுசத்தி;
துன்னும் உடலந் தனிலயன்தான்
தோற்றிப் படைப்பன் என்றறைந்தே
உன்னும் இவனை (மனை) யாக்கி
யுறுசம் போகம் இழைக்கவுலை
மன்னி யுருகும் பசும்பொன்நிகர்
வருவீ ரியத்தை மகிழ்ந்தளித்தான். (26)

---

222. சேயாம் உருவு-குழந்தை வடிவு.
223. இரக்கம்-தவறு நினைந்த வருத்தம்.
224. வடபத்திரம்-ஆலிலை. பதுமத்தேவு-மலர்க் கடவுள்-பிரமன். படிவம்-வடிவு.
225. மனை-இச்சொல் ஏட்டில் விடுபட்டிருக்கின்றது-

226. ஒலியா தியவெவ் விடயமைந்தும்
ஒருவு முனிவீர்! நறுந்துளவம்
மலிவார் தடந்தோள் அண்ணலுந்தி
வனசத் திடையூ டைந்துசிரம்
பொலிமா மறையோன் உதித்தனன்முப்
புரமூன் றெரித்தோன் ஆணையுறீ
வலியால் உயிரோ டுலகனைத்தும்
மகிழ்ந்து படைத்தே யிருந்தனனால். (27)

227. பின்னர் ஒருநான் மறைபுகன்ற
பெம்மான் மனத்தாங் காரமெழுந்(து)
உன்னல் அரிய பரம்பொருளை
யுளத்திற் கருதா திருந்தனனால்
மன்னீ றிலகு திரிசூலப்
படைகொள் வடுகன் விரைந்துகனி
யென்ன வுகிராற் கொய்தனன் வான்
உற்ற சிரமொன் றினையம்மா. (28)

228. அன்று முதல்நான் முகனெனஇங்
கயனை மொழியும் அனைத்துயிரும்
மன்றல் கமழுந் துழாய் மார்பன்
மதியின் நிலவு கடுக்கும் வெணீ(று)
ஒன்று படவே தரித்தனனால்
ஒல்லை யுறும்அஞ் ஞானம்ஒரீ இத்
துன்று புகழ்சேர் மதலையெனச்
சுருதித் தேவை யளித்தனரால். (29)

**அசுரரால் இறந்த வானவரை வீரபத்திரர் திரு நீற்றால் எழுப்பியது**

**கலி விருத்தம்**

229. திருகுஞ்சின வலிபொங்கிய திறல்**வீரபத் திரன்**முன்
உருவெங்கத வடிவந்திகழ் **சர்ப்பாசுர** னலும்
பெருகுஞ்செயல் **ஐங்கோசமெய்ப் பிசிதாசன** னலும்
அருகும்படி கொலைகொண்டெழும் **அனலாசுர** னலும், (30)

---

226. விடயம் ஐந்து-ஐம்புல உணர்ச்சி.(ஒலி,ஒளி, ஊறு, சுவை, மணம்)

227. மறைபுகன்ற பெம்மான்-பிரமன்; வான் உற்ற சிரம்-உச்சித் தலை.

228. இங்கயனை-இங்கு அயனை; சுருதித் தேவு-பிரமன்.

229. ஐங்கோச மெய்ப் பிசிதாசனன்-பஞ்ச மேட்டிரன் என்னும் அசுரன். பஞ்சம். ஐந்து; மேட்டிரம்-கோசம்-ஆண்குறி. பிசிதாசனன்-அசுரன்; பிசிதம்-மாமிசம், அசனம்-உணவு.

230. குருதிப்புனல் பெருகத்திரள் குடர்சோர்ந்திட வலியாற்
பொருதித்துணை யென்னுதுடல் புடைபட்டுயிர் இறந்து
பருதித்துணை படர்வானவர் பார்ப்பார்தமை யெல்லாங்
கருதிப் பொடி யதனலொரு கணத்தில்லெழுப் பினனுல். (31)

வாமதேவ முநிவரைத் தழுவிய அரக்கன் வீடு உற்றது

231. பொருதெண்டிரை யுலகந்தனி யுய்க்கும்புய அரசன்
பெருகும்பல சனனங்களிற் பெறுபாதகச் சட்டை
யுருவம்பெறு நிருதன்பொடி யுத்தூளனம் ஆக
வருபுங்கவன் எனும்வாமதே வற்சார்ந்துவீ டடைந்தான். (32)

பாதக அந்தணன் பரகதி பெற்றது

232. ஒருவேதியன் தமிழ்த்தேயத்தின் உறைவோன்மற மனத்தோன்
வருமாதர்கள் மூலையாவையும் மணந்தூறுசெய் பதிதன்
வெருவாநெவி டத்தும்நுகர் மிகுபாதகன் மற்றோர்
தருமேலகா லத்தின் னுயிர் தணந்தான் அவன் தலையே. (33)

233. மாந்தர்கயி றடிசேர்த்துபு வல்லேயிழுத் தெறியக்
காய்ந்துநமன் தூதர்நர கத்தேற்றிடுங் காலே
பேர்ந்தேகய வன்மேனியிற் புறங்காடுசெல் நாய்க்கால்
தோய்ந்தார்துகள் சாம்பர்படத் துகள்தீர்கதி யடைந்தான்.

---

## அத்தியாயம் 10.

### விபூதி மான்மியம் தொடர்ச்சி

#### புயவலன் கதை

வங்கதேசத்தில், கொடையிற்சிறந்த **புயவலன்** எனப் பெயர்கொண்ட ஒரு அரசன் இருந்தான். அவன் தைப்பொங்கல் தினத்தில் தானஞ் செய்யும்போது, அந்தணர் சிகாமணியான **விதர்ப்பநாட்டுச் சுசீலன்** என்பவர் வந்தார். "அரசே! இவருக்குத் தருகின்ற தானம் ஒன்று அனந்தமாகும், இவருக்கு முதலில் தானம் இடுக" என்று யாவருங்கூற அரசனும் அவரை அழைக்க, அவர் அரசனை நோக்கி 'நீ திருநீறு அணியாது செய்யும் தானம் உனக்கு நன்மை பயக்காது' என உரைத்தார். இதைக் கேட்ட அரசன் கோபங்கொண்டு 'என் அப்படிக் கூறுகின்றீர்? திருநீறு அணியாமல் செயத்தக்க தருமங்கள் இல்லையா?' என வினவச், சுசீலர் "திருநீறு அணியாது தானம் செய்தால் மக்கள் மடிவர், சுற்றத்தார் ஒழிவர், எல்லாம் ஒன்றுவிடாது ஒழியும்; திருநீறு கற்பகத் தருவின் தன்மையது. திருநீறு தரிப்பவனை இடர்கள் தொடரா.

---

229-230. வீரபதிரன்...எழுப்பினனுல் என முடிக்க.

230. இறந்து பருதித் துணைபடர்வானவர்-இறந்தவர் சூரியன் மார்பு வாயிலாக வீர சொர்க்கஞ் செல்லுதல் மரபு. 'கதிருடல் வழிபோய்க் கல்லுழை நின்றோர்"- **கல்லாடம்** 8. பொடி யதனல்-திரு நீற்றால்.

231. வாம தேவன்-வாமதேவ முநிவர்.

232. ஓர் தரும் ஏல் அகாலம்

231-233. இந்த இரண்டு கதைகளின் விரிவைப் பிரமோத்தர காண்டத்தில் 'விபூதி மகிமை' கூறும் அத்தியாயத்திற் காணலாம்.

*'நக்கா' எனக் கூறித் திருநீறிட்டால் பிணிகள் நாசமாகும்' என்றார். இதைக் கேட்ட அரசன் மத்தோடு நகைத்து, (திருநீறிடாது தானஞ் செய்துவந்த) எனக்கு யாதொரு குறையும் இல்லை. நீர் சொல்லுகின்றபடி குறைகள் நேர்ந்தால் உம்மையடுத்துத் திருநீறு இட்டுக்கொள்வேன்; இப்போது நீர் தானம் வாங்கிக்கொள்ளும்'—எனக் கடுஞ் சொல் புகன்றான். சுசீலர் "அரசே! உன் தானம் எனக்கு ஆகாது" என்று சொல்லி உடனே எழுந்து போனார். அதைக் கண்ட அரசி அவர் போவதைத் தடைசெய்ய எண்ணி, வேண்டுமென்றே, தும்மினாள். பலநாள் கழித்து அரசன் பெருநோய் உற்றான்: தேசத்தை இழந்தான்; மனைவியுடன் கானகத்தை அடைந்தான். அங்கே அவன் மனைவியை ஒரு வேடன் கைப்பற்றினான். வழிதெரியாது அரசன் திகைத்தான். பசியால் வருந்தி உணவுக்காகத் திருடத் தொடங்கினான். ஒருமுறை திருடும்பொழுது ஊர் காவலர் கையிற் பட்டான்; கையும் காலும் வெட்டப்பட்டான்; குறைபட்ட கால் கையுடன் விதர்ப்ப நாட்டுத் தலைநகராம்* **குண்டினபுரத்தை** *அடைந்து நெடுநாள் பிச்சையேற்று உண்டு வந்தான்.*

## அத்தியாயம் 10.

## விபூதி மான்மியம்-தொடர்ச்சி

### புயவலன் கதை [234-283, 330, 331]

#### கலி விருத்தம்

234. முனிவீரினும் பொடிமான்மியம் மொழிகின்றனன் கேண்மின்
நனிசேர்கொடை யினின்மாதவர் நசையிற்புவி யோர்தந்
துனிதீரமெய்ப் பொருளீதலில் தூயோன் **வங்க தேயப்**
புனிதன் **புய வலனும்**பெயர் பூண்டான் ஒரு நிருபன். (1)

235. அக்காவலன் ஒருகால்திதி யனுகூலநற் றினஞ்சேர்
தைக்கோதில்சங் கிரமத்தினில் தழல்வேதியர் பொருட்டாய்
மிக்கானநல் தானஞ்செயும் வேலைபல தேயத்
தக்கோரவண் அடைந்தாரது தனைக்கேட்டுளம்மகிழ்ந்தான். (2)

236. மறையோர்க்கரசெனும்வேதியன் **வைதர்ப்ப**நற் றேயத்(து)
உறைஞானி **சுசீலன்**அவண் உற்றான்முனி வீர்! அவ்
இறையாமிவனைவேதியர் எல்லாரும் வழுத்தி
முறையால்வணங் கியபின் இறை முகம்பார்த்துரைக் கின்றார்.

237. மன்னும்இவன் நத்தற்கரு மறையாவும் உணர்ந்தோன்
உன்னுவுரை தருசாத்திர உண்மைப்பொருள் தெரிந்தோன்
மின்னார்சடை முடியீசன் விரைத்தாள்மனம் வைத்தோன்
முன்னேயிவற் கருந்தானங்கள் முற்றும்புரி குதியால். (4)

238. திலமாமளவேனுங்கொடுத் திடிலொன்றனந் தஞ்செய்
பலமாமென இசைந்தேநர பாலனவற் கூவப்
புலமான சுசீலன்சொலும் பூபால!வெண் ணீறு
நலமானமெய் உத்தூளனம் நவில்புண்டரந் தரிப்பாய். (5)

---

234. நசை-விருப்பம், துனி-துன்பம்.
235. கோது-குற்றம், திதி...சங்கிரமத்தினில்-தைப் பொங்கலாம் நல்ல நாளில். தை சங்கிரமம்-தை சங்கிராந்தி.
237. நத்துதல்-விரும்புதல்.
238. திலம்-எள்; ஒன்று அனந்தம் ஆம்; கூவ அழைக்க; புலம்-அறிவு.

239. அன்றேனுத வியதானம் அனைத்தும்பலன் இல்லை
நன்றேபுரி வெண்ணீற்றினை நாளுந்தரி யாமல்
நின்றேதரு மந்தானங்கள் நீசெய்தன அனைத்துஞ்
சென்றேபலன் உதவாதிது திடமாமென உரைத்தான். (6)

240. துறவீர்!நர பதிவேதியன் சொற்கேட்டறத் தாலும்
மறமார்சினத் தாலுஞ்சொலும் மறையோய்! இடு பூதி
முறையால்தரித் திடலெற்கென மொழிகாரண மேதிங்(கு)
அறையார் பொடி தரியாமற்செய் யருந்தன்மமற் றிலையோ?(7)

241. பூதிக்குள மகிழ்வாயின போதிற்புரி தானம்
நீதிக்கியல் பெனச்சொற்றிடும் நியமம் மெனச் சொல்லென்(று)
ஓதிக்கட வியமன்னனை யுறநோக்கியந் தணன்தன்
கோதிற்சொல வென்றித்திடங் குறித்தேயுரைக் கின்றான். (8)

242. கிளரும்மணி ஞெகிழஞ்சிறு கியகிண்கிணி மலர்த்தாள்
தளருந்நடை மழலைம்மொழி தனையர்முத லியபே
ருளரும் இறந் திடுவாரொரொரான் றொழியாதுறும் அதனால்
வளரும்பொரு தருவாகியல் வற்றாவணி நீறே. (9)

243. மூக்காலமும் முகமாறுடை முதல்வன்திரு நீற்றை
யெக்காலமும் மெய்யிலணிந் திடரானது தொடரா
இக்காமனை யெரிசெய்திடும் இறையோன்திரு நீற்றை
'நக்கா'என அணிவார்பிணி நாசம்மிது திண்ணம். (10)

244. இதனாலறி மற்றொன்றுமிங் கிலையென்ற சுசீலன்
விதமானசொற் கேட்டந்தணிர்! விரிநீர்ப்புவி யரசன்
மதமாயெள்ளி நகைத்தேநவ வடிவாவரு மெனக்குக்
கதமாமிடி யெங்கே? மைந்தர் கடிதாயெங்ஙன் இறந்தார்?(11)

245. தடக்கையடி யெங்கேகுறைந் தன? ஆகையி னாலே
தொடக்கும்பிணி யடையாது,நீ சொல்கின்றன எனக்கு
நடக்கும்படி வந்தால்மறை நவில்வோய்!நின தயல்வந்(து)
அடக்குஞ்சமழ்ப் பின்றிப்பொடி யணிந்தெவ்வம் ஒழிப்பேன்;

---

240. தன்மம்-தருமம்.

241. நியமம் என-நியமம் என்ன. தன் கோது இல்லாத சொல்லின் அவ் வென்றித் திடம்.

242. ஞெகிழுதல்-கழலுதல். "ஞெகிழ் தொடி இளையவர்" கலித்-73-8.

243. அணிந்து-அணிய.

244. நவம்-புதுமை; செழிப்பு. கதம்-பஞ்சம்.

245. சமழ்ப்பு-நாணம்; எவ்வம்-துன்பம்.

246. இப்போதுமுந் நூல்வேதிய! யானீந்திடு தானங்
கைப்போதினில் வாங்கென்று கடுஞ்சொற் சொலும்அரசன்
வெப்போதுறு மிச்சொல்லினை மிகுவேதியன் கேட்டங்(கு)
அப்போதெழுந் தரசே!உன தருந்தானமெற் காகா; (13)

247. என்றேசொலித் தன்தேயத்தில் எய்தக்கடி தகன்றான்
அன்றேபுர வலன்வேட்டிடும் அரிவைகப டாகிப்
பின்றேசறவே தும்மினள் பின்னரவர் நெடுநாட்
சென்றேயிடு பகன்மன்னவன் திகழ்தீப்பிணி யுற்றான். (14)

248. அவ்வெல்லையிற் பெருநோய்சுற்றி அடுத்தேவரச் சூழ்ந்து
வெவ்வேறுள பெருஞ்சேனைகள் வீயக்கொடி யோன்தான்
கைவேல்மரு வலராலந்த கடிமாநகர் விட்டுப்
பெய்வேதனை அதனோடிடர் பெருங்கானகம் அடைந்தான்.

249. அக்கானகத் தவன் றன்மனை அடல்வெங்கொலை வேடன்
கைக்கேயகப் பட்டாள்விட்டுக் கவலையுடன் பிரிந்து
திக்கானதை யறியாதுளந் திகைத்தேயழுங் கரசன்
எக்காலமும் பசிதாகத்தொ டிருந்தேபலி யெடுத்தான். (16)

250. கொடும்பாவிக்கொர் பிடியும்பலி கொடுத்தாரிலை யெவரும்
நெடுங்காலமெய்ப் பசியால்நொந்து நின்றேயெங்குந் திருடி
யடங்காப்பசி தொலைத்தான் ;அந்த அரும்பாவியிப் படியே
மடங்காதுசின் னுட்சோர்ந்ததில் வருங்காலத்தில் ஒருகால்,(17)

251. உருத்தேயிதழ் மடித்தேகடித் தூர்காவலர் கண்டு
செருத்தேடிய புயத்தாலுளம் திகைத்தேயிடப் புடைத்துப்
பெருத்தேயிடுங் கரத்தாற்கரம் பிணித்தேநகர்ப் புறத்தே
கருத்தேகெடக் கொடுபோய்க்கரங் கால்வீழ்ந்திடக் குறைத்தார்.

252. மூந்தைவிதி வசத்தாலவன் முருக்கும்பசி தாகஞ்
சிந்தைநலிந் திடவேசென்று திரும்பவிதர்ப் பேசன்
விந்தைசெறி யுங்குண்டின வியன்மாநகர் அடைந்து
நிந்தைபெற நொந்தேபிச்சை நெடுநாளெடுத் துண்டான்.(19)

---

247. அகன்றான்-புறப்பட்டான்; அன்றே-அச்சமயத்தில்; கபடாகி-வஞ்சனை எண்ணத்துடன்; பின்று ஏசுறவே-பின்பு, அவர் வருந்தவேண்டி(த் தும்மினள்). பகல்-நாள்.

248. வீய-மடிய. மருவலர்-பகைவர்.

249. அழுங்கு-வருந்தும். பலி-பிச்சை.

## அத்தியாயம் 11.

### விபூதிமான்மியம் (தொடர்ச்சி)

#### (புயவலன் கதைத்தொடர்ச்சி)

புயவலன் மனைவியைப்பற்றிச்சென்ற வேடன் புலியின் வாய்ப்பட்டு இறந்தான். அவளும் வினைப்பயனால் குண்டினபுரத்தை அடைந்தாள். பசியாற்றாது திருடி, மூக்கு அறுக்கப்பட்டு, அழுது அரற்றிக் கணவனைத் தேடி அலைந்தாள். இருவரும் ஒருமுறை ஒன்றுகூடி ஒருவரை ஒருவர் அறியாமல் சுசீலர் வீட்டை அடைந்தார்கள். அவர் "நீங்கள் யார்? பாதக வினைப்பயனால் இந்நிலையை அடைந்துள்ளீர்கள்' என்றார். புயவலன் 'எந்தாய்! எனக்கு ஏன் இந்தத் துயர்நிலை வந்தது?' எனக் கேட்டான். சுசீலர் 'மன்ன! திருநீறு தரித்துப் பின்பு தானம் தருக என நான் முன்பு உரைத்த பொழுது நீ திருநீற்றை மதியாது உன் அகந்தை மேலீட்டால் மறுத்த தீவினையின் பயன் தான் இது'-என்றார். புயவலனும் தான் செய்த பிழையை எண்ணிச் சுசீலரை வணங்கி 'ஐயனே! என் துயரும் என் ஆணவமும் ஒடுங்க உங்கள் திருக்கரத்தால் திருநீறு அருளுதல்வேண்டும்' என வேண்டினன். சுசீலரும் 'அரசே! உன் இடர், பிணி இவைகள் நீங்கும்; உன் மனைவியையும், செல்வத்தையும், நாட்டையும் நீ திரும்பிப்பெறுவை' என ஆசிகூறித் திருநீறு அளித்தார். அரசன் அதை வாங்கி உடல் முழுதும் அன்புடன் தரித்தவுடனே குறைபட்ட அவன் காலும் கையும் வளர்ந்தன; நோய் ஒழிந்தது; அழகு பொலிந்தது. சுசீலன் திருவருளைப் புயவலன் மகிழ்ந்தான். அப்போது அங்கிருந்த அவன் மனைவி அவனே தன் கணவன் என அறிந்து மகிழ்ந்து அவனை நோக்கி—" என் கண்மணியே! மதிகேடியாகிய நான் உன் மனைவி; முனிவர்பால் எனக்கும் திருநீறு வாங்கித் தந்து என் இடர்களை நீக்கியருளவேண்டும்; அன்று முனிவர் தானத்தை வாங்காது சென்றபோது, நான் என் வாழ்வுச் செருக்கால் வேண்டுமென்றே தும்மினேன்; அக் குற்றத்தால் மூக்கு அறுபட்டேன்" எனக் கூறிப் புலம்பினாள். அரசனும் சுசீலரை வணங்கி 'இவளையும் கடையேற்றவேண்டும்' எனப் பிரார்த்தித்தான். சுசீலரும் 'அஞ்சற்க! இத் திருநீற்றை அவள் கையிற் கொடு' எனக்கூறி விபூதி அளித்தார். அவள் அதை வாங்கித் தரிக்க அவள் மூக்கு வளர்ச்சியுற்றது. உடலும் பொலிவுற்றது. பின்பு இருவரும் சுசீலரை வணங்கி நின்றனர். இந்த அதிசய நிகழ்ச்சிகளைகேட்ட அந்த நாட்டு அரசன் 'விசித்ர ரதன்' அங்கு வந்து சுசீலரை வணங்கி 'இப் புரவலன் என் மாமன் மகன். இவனை இந்நாள்வரையும் தேடினேன். உங்கள் திருவருளால் இன்று இவனைக்கண்டேன்'—எனக் கூறிப் புயவலனுக்கும் அவன் மனைவிக்கும் அணி கலன்களையும் சேனைகளையும் நல்கி 'நீ உன் வங்கதேசத்துக்குச் செல்வாயாக' என விடுத்தான். அவர்களும் போவதற்குச சுசீலரிடம் அநுமதி கேட்க, அவர் திருநீறு அளித்து 'இத் திருநீற்றால் நீ பகையை ஒழிப்பாய்' என ஆசிகூறி அனுப்பினர். திரு நீற்றை அணிந்து அரசன் தன் தேவியுடன் வங்கதேசத்துக்குப் புறப்பட்டான். அப் போது வங்க தேசத்தைத் தன்வசப்படுத்திக் கொடுங்கோல் ஆட்சி செய்து வந்த பொல்லா அரக்கன் புயவலனைப் போரில் எதிர்க்க வந்தான். புயவலன் நெற்றியில் அணிந்திருந்த விபூதியைக் காணப் பெற்றவுடனே அவன் அரக்க உருவம் நீங்கித் தேவரூபம் பெற்றான். புயவலன் ஆச்சரியப்பட்டு 'நீயார்; உன்வரலாறு யாது?'-என வினவினன். அதற்கு அவன் 'அரசே! என்வரலாற்றைப் பின்னர் உரைப்பேன' எனக் கூறிப் புயவலனை அழைத்துச சென்று திருநீற்றால் பட்டம் தரிப்பித்துப் பின்பு கூறுவான் :—

### வருணன் அரக்கனான கதை

'நான் வருணன்; அரக்கர்கள் செய்யும் கொடுமைகளுக்கு ஆற்றாது நான் இந்திரனிடம் சென்றேன். என் கஷ்டத்தை உரைத்தேன். அப்போது அகத்திய முனிவரும் நாரதரும் அங்கே வந்தார்கள். நாரதர் தாம் பூவுலகிற் கண்ட அற்புத வரலாறு ஒன்றைக் கூறினார்-அவர் கூறியதாவது: —

### சுதன்மன் விசுத்தன் கதை

காஸ்மீர தேசத்து அரசன் 'வஜ்ரதேகி' தனது புரோகிதனர் சுதன்மனைப் பார்த்து 'நீ கல்வி வாசனை யில்லாது இருக்கின்றாய். கல்வி யில்லாதவர் முகம் சுடுகாடு ஒக்கும்' என்றான். சுதன்மன் 'அரசே! நான் திருமாலைப் பூசித்துக்கலைவல்லவன் ஆவேன்' எனக் கூறி, அங்ஙனமே அவரை வழிபட்டுச் சகல கலை ஞானங்களும் கைவரப்பெற்றான். தான் பெற்ற பேற்றை அரசனுக்கும் உரைத்தான். ஆனால், மிகத் தருக்குற்று அரசனிடம் தானம் வாங்க வரும் கல்வியாளர்களாம் மறையோர்கள் யாவரையும் பழித்தான். இதைக் கண்ட பிரம தேவர் தமது உருவை மறைத்துக் கிழ வேதியராக வந்து சுதன்மனுக்கு 'நீ பண்டிதர்களைப் பழித்தல் முறையல்ல; கல்வியொடு அடக்கமும் கூடினால் தான் யாவரும் வாழ்த்துவர்'-என எடுத்துக் கூற, சுதன்மன் கோபித்து 'நீ எனக்கு ஒன்றும் புத்தி கூற வேண்டாம் ' எனக் கடுஞ் சொல் உரைத்தான். உடனே பிரமதேவர் தாம் கொண்ட வேதியர் கோலத்தை விட்டுச் சுதன்மனை நோக்கிக் கோபித்துக் 'கல்விச் செருக்கால் என் மொழிகளை நீ அலட்சியம் செய்தாய். ஆதலால், உன் நா தம்பிக்கக் கடவது (நீ ஊமையாகக் கடவது)' எனச் சாப மிட்டு மறைந்தார்.

## அத்தியாயம் 11.

### (புயவலன் கதைத் தொடர்ச்சி.)

#### அறுசீர் விருத்தம்.

253\. மூக்கு றும்பெறிந் தறத்துறை போகிய
முனிவிர்!அப் பகல்பாவம்
மிக்க தீமையன் தன்மனை பிடித்திடும்
வேடன்வெம் புலிதன்றாற்
கக்கு சோரிமெய் குளித்திட இறந்தனன்
கவலையுற் றிடுமின்னாள்
தொக்க கன்மதேச டத்தினால் அங்நகர்
துயரமீக் கொளச்சார்ந்தாள். (1)

254\. பீழை வல்வினை யுடற்றியே தொடர்ந்துபின்
பிடர்பிடித் துகைத்துந்த
தூழை சென்றுசென் றெங்கணுந் திருடிவைந்
நுதியிலைக் கணைவென்ற
மாழை யொண்கண்வள் ளைக்குழை பொருதெதிர்
மறிகுமிழ் கொய்பட்ட
ஏழை சிந்தைநொந் துடற்பசி கனற்றிட
இரங்கிநின் றுளைந்தம்மா, (2)

255\. விழும ரற்றுநெஞ் சழிவுறும் நிலந்துழா
விம்முமெய் பதைத்தேங்கி
எழுமு யிர்க்கும்மந் தோமுறையோ எனும்
இருகைமென் முலையெற்றும்

---

253\. அங்நகர்-குண்டினபுரம்.

254\. பீழை-துன்பம்; தூழை-சிறுவாயில்; வை-கூர்மை; நுதி-முனை; மாழை-மாவடு. வள்ளை-ஒருவகைக் கொடி; வள்ளைக்கொடி போன்ற காது. குமிழ்-குமிழம்பூப் போன்ற மூக்கு. கொய்பட்ட-அறுபட்ட.

அழுமி ரங்குமூழ் வினைவிளைந் தனைநினைந்
தயருமன் பனைநேடித்
தொழுமு யிர்ப்பறத் திகைத்துடல் வெதும்புமைத்
துணைவிழி புனல்சோரும். (3)

256. அம்பு பட்டுவீழ்ந் திடருறு மயிலென
அலக்கணுற் றிடுமாழ்கும்
வெம்பும் இப்படி வருந்துமிப் பாவியும்
வேந்தனும் ஒழியாமற்
பம்பு பையுள்மீ தூரநோய் நலிந்துடற்
பழுத்தளிந் தவிழ்புண்தோய்
செம்பு ழுக்கள்புன் தலைநெளிந் துதிர,நீர்
தேடியிந் நகர்சார்ந்தார். (4)

257. ஒண்டி யொண்டிநின் றுலறுவெள் வாய்பிளந்
தோவறக் காணீட்டிக்
கொண்டு வீதிவாய்க் கடைகடை தொறும்பலி
கூறிவெம் பசித்தீக்கொள்
பண்டி யுட்புகைந் தெரிந்தெழ இருவரும்
பருவர லுடன்சேர்ந்துங்
கண்டொ ருத்தரை யொருத்தர்கூர்ந் தறிந்திலர்
கதமுடன் அலைந்தம்மா, (5)

258. ஆற்ற ருந்தவக் கிழமைசால் சுசீலர்தம்
அருங்கடி மனைமுன்றில்
ஏற்ற ருந்திலா தெய்தினர் இடருழந்
தெய்துமத் தகையோரைப்
பேற்றின் மேம்படு சுசீலர்கண் டியாவர்நீர்
பேசுமின் எனநொந்து
சாற்று நீவிர்மா பாதகம் அருந்திடுந்
தன்மையித் தகைத் தென்றார். (6)

---

256. "அம்பு பட்டு வீழ்ந் திடருறு மயிலென அலக்கணுற்று." "அம்புருவ ஆற்றா துழலுங் களிமயில் போல் ஓடி"—**நளவெண்பா**-கலிதொடர்-113. அலக்கண்-துயர் பையுள்-துன்பம்; புழுக்கள் உதிர-நீரைத்தேடி.

257. பண்டி-வயிறு; பருவரல்-துயர்; கதம்-(பசியினால் வரும்) கோப வேதனை.

259. அந்த வேலையம் முனிவனைப் புரவலன்
ஆதரத் தொடுநோக்கி
யெந்தை கேளடி யேன்றினி மனந்துணுக்
கெனஅடிக் கடிஎவ்வம்
வந்த தேதென மன்ன!நான் உனைப்பொடி
வனைந்திடேன் றெளிதாக
முந்தை நாளுரைத் தனன்;அதை மறுத்தனை
முற்செய்தீ வினைதன்னால். (7)

260. இருநிதிப்பெறு வளத்தினு லும்வடி
விளைமைகூர் எழிலாலும்
பெருமிதத்துரு வலியினுல் அகந்தையைப்
பெற்றமு னேதந்தான்
ஒருமை யுற்றுகந் துதவுநீ தானமெற்
குதவஎன் றருளோடும்
வருக என்றழைத் திடவும்வேண் டாவென
மறுத்துமீண் டகல்போது, (8)

261. கதழிருட்பிழம் பெறிந்துவெண் ணிலவொளி
கடுக்கும்வெண் பொடியெள்ளி
விதிபிழைத்திடு தன்மையால் இத்துயர்
மேயதை யமஃதன்றென்(று)
இதமுறச்சொலும் ஏல்வைநற் சுசீலர்சொல்
இன்பமுற் றிடக்கேட்டுக்
கதுமெனப்புர வலன்முனை விதியினைக்
கனவுபோல் நினைந்தம்மா, (9)

262. அந்தணன்பத மலர்முறை பணிந்தெழுந்
தங்கைகூப் புநின்றே
யெந்தை நீயவண் வந்துநற் றனமுன்
னேற்றிலை நினதீஞ்சொற்
சிந்தை யுற்றிடாத் தீவினை யேன்பொடி
தேர்ந்துடன் தரியாமல்
வந்த பாதகத் தால்துயர் மேயது
மற்றையம் இலைமாதோ. (10)

---

260. அகந்தையை முன்பெற்ற ஏதம்.

261. கதழ்-மிகுதல்; கடுக்கும்-ஒக்கும்; எள்ளி-இகழ்ந்து. ஐயம் அஃதன்று-அது ஐய மில்லை. ஏல்வை-பொழுது, கதுமென-விரைவுடன்.

263. ஆகை யாலினி அத்தனே இத்துயர்
அனைத்தையும் உடன்தீர்த்திட்(டு)
ஓகை யாலுயிர் பிணிக்குமா ணவத்தையும்
ஒழித்தருள் திருநீற்றை
நீகை யாலெடுத் தளித்தருள் என்றுளம்
நெக்குடைந் திடரெல்லாம்
போகை யாலவன் பதமல ரிணைப்பல்காற்
போற்றிவந் தனைசெய்தான். (11)

வேறு

264. கண்டார்வ நிறைந்த சுசீலன்மலர்க்
கரமீது பவித்திர நீறுமிகக்
கொண்டேதிரு பந்தனை நோக்கிமன்னு!
கோதற்றவெண் ணீறு தரித்திடில்நீ
தண்டா இடர் வெம்பிணி பாவமறத்
தனிமாமனை யோடுசெல் வங்கள்தழீஇத்
திண்டாடமர் வெம்பகை வெல்வையெனச்
செப்பித் திருநீறு கொடுத்தனனே. (12)

265. ஒலியாதிகள் வென்றிடு வீர்!திசைதோ
றோராழி யுருட்டிமுன் வையமெலாம்
மெலியாது புரந்த பெருந்தகைதூய்
வெண்ணீற்றினை வாங்கி யுடல்முழுதும்
மலியாதர வோடு தரித்திடலும்
வாளாற்குறை பட்டகை கால்கிளரங்
குலியாவும் வளர்ந்தன நோயறமெய்
குலவும்எழில் கூர மகிழ்ந்தனனால். (13)

266. குன்றோடு மலைந்து திரண்டெழுதோள்
கோமான்தன தங்கம் அனைத்தெழில் பார்த்(து)
என்றூதை சுசீல ரருட்செயலீ
தென்றோர்ந்திடு போது குறித்தவன்தாள்
முன்றூழ விழுந்து பணிந்துருகா
முளரித்துணை கூப்புபு வாழ்த்தியுழை
நின்றானவன் வாழ்மனை மூக்கிலியந்
நிருபன்தனை நோக்கி வியந்துணர்வாள். (14)

---

264. பவித்திரம்-பரிசுத்தம். தண்டா இடர்-தண்டாத-தடைபடாத, குறைபடாத ; மனை-மனையாள்.
265. ஒலியாதிகள் வென்றிடுவீர்-ஐம்புலச் சேட்டையை வென்ற முனிவர்களே! (சரித்திரம் கேட்கும் முனிவர்களைக் குறித்த விளி). அங்குலி-விரல்.
266. நிருபன்-புயவலன்.

267. விண்டாவி யெழுந்துயர் மாவிழுது
விட்டே ஒழுகுந்தெ ணிலாவுமிழ்கால்
கொண்டேறி விளிம்பெறி முத்துவடங்
கொவ்வைத்துவர் வாய்மட வார்கணுடன்
தண்டாஅயல் நின்றசை யுந்திரள்தோள்
தனிவேலிறை தன்துணை வன்னெனவே
கண்டாவலி னோடு குறித்தொருசொற்
கணவன்முக நோக்கி யுரைத்திடுவாள். (15)

268. கருணைகர னே!உயி ருக்குயிரே!
கனியிற் சுவையே! இருகண்மணியே!
மருணாவற வெம்பிணி யால்மெலியும்
மதிகேடிநின் வாழ்மனை யாகுமெனக்(கு)
அருணையக மாமுநி கைத்திருநீ
றடிமைக்கொள வாங்கி யளிக்கின்மலத்(து)
இருணாசம் விளைக்குமந் நீறுதரித்
தெளியேனும் இடர்க்கடல் தீர்குவனால். (16)

269. என்றோதிடு வாள்முக நோக்கி மின்னே!
எப்பாவம் இழைத்தறு பட்டதுன்மூக்(கு)
ஒன்றாக வுரைத்தி யெனப்புகல்வாள்
உன்தானம் மறுத்துர வோன்படரும்
அன்றோவிய மெய்க்கவி னாலுமெய்வாழ்(வு)
அளத்தற்கருந் தன்மையி னாலுமதங்
குன்றா எளி யேன்கப டாயிகழ்ந்தே
குமிழ்நாசி புடைக்கமுன் தும்மினனால். (17)

270. அந்தக்கொடும் பாதகத் தாற்குமிழ்மூக்
கறுபட்டது வாய்மை யெனக்குரிசில்
சிந்தித்தது வாமென நிச்சயத்தால்
தெரிகின்ற சுசீலர் பதம்புவிமேல்
வந்தித்தொரு சொற்புகல் வாணிவளென்
மனையாள் கபடாயயல் தும்மினதால்
நிந்தைப்பட மூக்கில ளாயினள்சீர்
நிமலா இவள் பாலுளம் வைத்துணரே. (18)

---

267. விண்டாவி-விண்தாவி. (மடவார் கண்ணுடன்) முத்துவடம்...அசையும் தோள். கண்டு...ஆவலோடு.
268. மருள் நா வற்ற. முநி-சுசீலர்.
269. உரவோன்-சுசீலர். படரும் அன்று-சென்ற அத்தினத்தில். ஓவியமெய்க் கவின்-சித்திரம் போன்ற உடலழகு. வாழ்வு அளத்தற்கு அருந் தன்மையினால்.

271. மிக்கோய்!என மன்னனை நோக்கியுளம்
மெலியாதுகொள் என்று விபூதிதனைக்,
கைக்கேயருள் கூர எடுத்திவள்பாற்
கருதிக்கொடெ னக்கடி தாயுதவ
மெய்க்காவலன் ஏத்தி மலர்க்கையினால்
வெண்ணீற்றினை வாங்கினன் மாமணியாம்
மைக்காவி விழிக்கு மகிழ்ந்தருள
வந்தித்தது வாங்கி யணிந்தனளே. (19)

272. அவ்வேலை விபூதி யின் மேன்மையினால்
அறுபட்டமென் மூக்கு வளர்ந்ததுடன்
மெய்வேதனை விட்டழ கானதுபின்
வேந்தன் னுடன் மெல்லிய லுங்களிகூர்ந்(து)
இவ்வாறற வோனருள் பெற்றனமென்
றிருகைம்மலர் கூப்பி யிறைஞ்சிவிழி
பெய்வாரி பிலிற்றிட மெய்சிலிர்ப்பப்
பெருகார்வ நிறைந்து பணிந்தனரே. (20)

273. அக்காலை விதர்ப்ப தலத்திலிருந்
தரவச்சுமை மாற்றும் விசித்ரரதன்
இக்காதைகள் கேட்டு மகிழ்ந்துடன்வந்
தெழின்மாமுநி தாள்தொழு தெந்தையுனால்
மிக்கான அருட்பெறும் இக்குரிசில்
வினையேன்மகிழ் மாதுலன் மைந்தனிவன்
எக்கானகம் உற்றன னோஎனநெடுந்
தெளியேற்கு விசாரம் இருந்ததுவே. (21)

274 எந்தாய்நின் அருட்சிறு பார்வையினால்
இவன்மேனியுங் கண்டனன் என்று சொலிக்
கொந்தார்பொழில் சூழ்விதர்ப் பாதிபனுங்
கொடிமாமணி மேடைவங் காதிபனைச்
சந்தார்குவ வுத்திரள் தோள்நெருங்கத்
தழுவிக்களி கூர மகிழ்ந்துருகிச்
சிந்தாகுலம் விட்டவ னுக்குமவன்
தேவிக்கும் மணிக்கலன் நல்கியபின், (22)

271. காவி விழிக்கு-காவி விழியாளுக்கு.

272. வேதனை விட்டு மெய் அழகானது (அழகாயிற்று).

274. வங்காதிபன்-வங்க தேசத்தரசன் (புயவலன்): குவவு-திரட்சி, பெருமை. நெருங்க-இறுக.

275. சீலம்பெறு நன்முக மன்சொலுவான்
 திகழ்மாமணி மேடைகள் சேர்மனையின்
பாலஞ்சல் எனக்கொடு போயுணவும்
 பரிவோடுத விக்கட மால்வரையைங்
கோலஞ்செறி கொய்யுளை மாஅனிகங்
 குறையாது புரந்தர சன்தனைஏழ்
தாலம்புகழ் நின்னகர் செல்லெனநல்
 தவமேவு சுசீலர்தம் பாலடைந்தே, (23)

276 வங்காதிப னும்மவன் மாமனையும்
 மறையோது சுசீலர் மலர்ச்சரணம்
பொங்கார்வமொ டேத்தி யருந்தவமெய்ப்
 புனிதா!நின ருட்சிறு பார்வையினல்
இங்காதர வோடெளி வந்தடியோம்
 இருவோர்களும் உய்ந்தனம் இன்றுநின்றற்
செங்காவி வயற்பணி லந்திகழுன்
 தேயஞ்செல வேயுளம் எண்ணினல், (24)

வேறு

277 வடிவாள் விதிர்த்துத் துடிக்குமிதழ்
 மடித்துச் சுழல்கண் தழல்சொரியத்
துடிவா னுருமே றென அதிர்க்குந்
 துன்னர் படைவெம் பகைதுரக்கப்
பொடியா தரவோ டளித்தியெனப்
 புகன்றே பணிந்த புயவலற்பார்த்(து)
அடியார்க் கெளிய முநியுரைப்பான்
 அரசே! நீற்றூற் பகைதுரப்பாய், (25)

278. அஞ்சல் எனவே யுரைத்துவெண்ணீ
 றபிமந் திரித்துப் புயவலற்கு
விஞ்சு கருணை யாற்கொடுக்க
 வெண்ணீற் றினைக்கா வலன்வாங்கி
நெஞ்சம் மகிழ்ந்து விதிப்படியே
 நெற்றி மிசையே தரித்தவன்தாள்
கஞ்சம் மலர்க்கை யாற்பணிந்து
 கண்ணீர் வாரத் துதித்தபின்னர், (26)

---

275. முகமன் - உபசார மொழி. மனையின்பால் - அஞ்சல் - எனக்கொ(ண்)டு போய். கடமால்வரை-யானை(ப்படை) ஐங்கோலம் செறி மா-ஐந்து கதிகளைக் கொண்ட குதிரை(ப்படை) "ஐங்கதி நடத்திக் காட்டி" — திருவிளை. மெய்க்காட்-37. அனிகம்-காலாட்படை. தாலம்-பூமி.

276. காவி-குவளை. பணிலம்-சங்கு.

279. மழலைக் களிவண் டரற்றுகவிழ்
மதநீர் அருவி பிலிற்றிடத்தன்
நிழலைச் சுளித்துப் பொருதகைம்மா
நீலக் கலினப் பரிவீரக்
கழலைப் புனையும் விறற்படையோர்
கனிவாய்த் தரள நகைக்கருங்கட்
குழலைப் பழிக்கும் மொழியுடனக்
கோமான் அருளாற் புறப்பட்டான். (27)

280 நெடுநீர்ப் பரவை யகடுளைந்தெழ்
நிலமார்த் திடவாய் திறந்துயிர்த்த
கடுவிட் டழும்வெம் பொறிவடவைக்
கனலுஞ் சிதறுஞ் சுழல்விழித்தெவ்
அடுவாய்ப் பிறைவல் எயிற்றொருதீ
யரக்கன் அரசன் வரல்கேளாத்
தொடுவார் கழற்கா லிவன்பகையைத்
தொடர்ந்து வசமாக் கியபின்னர், (28)

281. அந்த நகரம் உடன்தேயம்
அனைத்துங் கைக்கொண் டுயிர்களெலாம்
நொந்து வெருவ இடரிழைத்து
நோக்கும் நகரந் தனைவிட்டுச்
சிந்தை மகிழப் புறப்பட்டுச்
செங்கோல் அரசன் தனைவதைக்க
வந்து வெகுண்டான் அக்காலை
மன்னன் விபூதி முகநோக்கி, (29)

282. கோர அரக்கன் உருத்தணந்து
குலவும் அமரர் உருக்கொணர்ந்தான்
வீர அரசன் இறும்பூது
வியந்து நோக்கி நீயார்கொல்
சேரும் நினது வரவேது
செப்பு கெனவே யிமையாது
கூரும் விழிநாள் மலர்த்திண்டோள்
கொற்ற இமையோன் இனிதுரைக்கும்: (30)

---

279. கைம்மா-யானை(ப்படை). 'நிழலைச் சுளித்துப் பொருத கைம்மா'.'கொலைவேழம்... தன் நிழலையும் தான் சுளிக்கும் நின்று'' புற - வெண்-350.ஒழிபு-8. கலினம்-கடிவாளம்,

280. கடு ஈட்டம்-விஷத் தொகுதி; தெவ்-பகை; இவன்-புயவலன்.

282. தணந்து-நீங்கி. இறும்பூது-அதிசய நிகழ்ச்சி.

283. மன்னு எனது வரத்துரைப்பன்
வருக நீயென் றரசுதனைப்
பொன்னு டனைய அந்நகரிற்
பொருவின் மணிபல் விதமழுத்தி
மின்னார் எழில்கூர் அரியணையின்
மிசைவைத் துயர்மங் கலநாளிற்
சின்னு தியபன் முழவியம்பத்
திருநீற் றுற்பட் டந்தரித்தான். (31)

**வருணன் தான் அரக்கனால் கதையை உரைத்தல் [284-330]**

284. உள்ளம் மகிழ்ந்து புகல்கின்றான்
ஒளிர்வை வேலோய்! மானவர்காள்!
மெள்ள ஒருமை யுடன்கேண்மின்
மேல்திக் கிறையாம் வருணனியான்
துள்ளு திரைமுந் நீர்நாப்பண்
சூழ்ந்த அரக்கர் அசுரர்களால்
எள்ளல் இடர்ப்பட் டறவுளம்நொந்
திமையோர்க் கரசன் இடமடைந்தேன். (32)

285. அங்கண் மகவான் நின்செயலே
தறைக என்ன அசுரருடன்
செங்கண் அரக்கர் சலதிநடுச்
சேர்ந்தெவ் வுலகும் இடர்க்கடலிற்
கங்குல் பகலாய் வருந்தவுடன்
கவற்று கின்றார் அதனாலியான்
தங்கு வதற்கா காதெனவே
சாற்றி மகவான் அருகிருந்தேன். (33)

286. அக்கா லையிலாற் றருந்தவஞ்செய்
அண்ணல் பொதிய மால்வரைசேர்
மிக்கோன் அவண்வந் தனனவனை
விண்ணோர் இறைகண் டெழுந்திறைஞ்சி
நெக்கா தரவில் அருக்கியநன்
னீரா திகளால் அருச்சித்துத்
தக்கா சனத்தின் மிசையிருத்தித்
தானும் அவனால் அருகிருந்தான். (34)

---

283. வரத்து-வரவு. சின்-சின்னம்-கடைக்குறை.
285. மகவான்-இந்திரன்; சலதி-கடல்; கவற்றுகின்றார்-கவலை கொடுக்கின்றார்.
286. ஆற்றரும் தவம்; மிக்கோன்-அகத்தியர்.

287. அப்போ தவண்நா ரதமுனிவந்
தரியா சனஞ்சேர்ந் திந்திரன்தன்
கைப்போ தலராற் பூசைசெயக்
கண்டிந் திரனோ டகத்தியனை
மெய்ப்போ தகத்தால் உறநோக்கி
வேலை யுலகில் ஓரிறும்பூ(து)
இப்போ துளது கண்டுங்கட்
கியம்பு வதற்கே வந்தனனால். (35)

[சுதன்மன் விசுத்தன் கதை; நாரதர் உரைப்பது]

288. களிவண் டரற்றும் பொழில்புடைசூழ்
**காச்சு மீர** தேயபதி
ஒளிவண் தொடை**வச் சிரதேகி**
உவந்து **சுதன்மப்** புரோகிதர்ப்பார்த்(து)
எளிவந் துழல்வோய்! பூசுரருக்
கினிய கல்வி கற்றிலைநீ
களிவந் திடுமுன் முகம் ஈமங்
கடுக்கு தெனவே சொற்றனனால். (36)

289. அந்த நிருபன் முகநோக்கி
அரசே! எனக்குப் படித்ததெலாம்
எந்த வகையோ வருகஇலை
இமிழ்தேன் கூட்டுண் டறுகால்சூழ்
கொந்து செறிபைந் துளவத்தார்க்
கோவிந் தனையா தரித்துமிகு
விந்தை யடைவேன் என்றுரைத்து
வேத மனுவால் வழிபட்டான். (37)

290. நிருதர் உயிர்மேய்ந் தெழுகுருதி
நிறையப் பருகித் தேக்கெறிந்து
பருகி அனந்தம் அவிராழிப்
படையை வலமேந் திய அண்ணல்
கருதி மகிழ்ந்து பலவிதமாங்
கல்வி கொடுத்து மறைந்தனனால்
சுருதி முடிவு தெளிந்துணர்ந்த
சுதன்மன் குரிசில் அவையடைந்தான். (38)

---

288. ஈமம்-சுடுகாடு. கற்றிலை-உன் முகம் ஈமங்கடுக்கும்-"கலை கற்றுணரார் முகம், உற்று நோக்கின் மயானத்தை ஒக்குமால்" (உப-காண்-விபூதி மான்-152.) கடுக்கும்-நிகர்க்கும்.

289. அறுகால்-வண்டு. மனு-மந்திரம்.

290. அண்ணல்-திருமால்.

291. அரிய விதமாம் பலகல்வி
அனைத்தும் வந்த வகையரசற்(கு)
உரைசெய் திடஅப் போதிறைவன்
உவந்து மறையோர் தமைக்கூட்டிச்
சுருதி வழிவேள் விகள்புரிந்து
தொன்னூல் உணர்ந்தோற் கருந்தானம்
பரிவின் அளித்தான் பண்டிதரைப்
பழித்தான் சுதன்மன் தருக்கித்தே. (39)

292. இந்த மறையோற் குத்தரங்கள்
இயம்பு வார்மற் றிலதால்மெய்
விந்தை யுணர்பண் டிதரையெலாம்
வெகுண்டு நோக்கி அவமானம்
நிந்தை புரிந்த பகல் வேதன்
நீதி மறையோன் கிழவுருவாய்
வந்து சுதன்மன் முகநோக்கி
மறையோய்! கேண்மோ எனவுரைத்தான். (40)

293. விந்தை வினயத் தொடுங்கூடி
மிக்கோர் வாழ்த்தப் படும்; பிரம
நிந்தை யுளதாம் வினயமற
நிற்கும் போதா கையினாலே
சிந்தை மகிழ்நீ பலகல்வி
தெளிந்தா லும்பண் டிதரையெலாம்
முந்தி அவமா னம் புரிதல்
முறைமை யல்ல எனவுரைத்தான். (41)

294. எறிதெண் டிரைநீர்க் கடலுலகில்
யாவர் பிறந்த நாள்தொடங்கி
அறிஞ ரானார் ஒருவரிலை
அறிக என்ற பூசுரன்சொற்
குறியை வினவக் கேட்டுமிகு
கோபந் தன்னால் உரைக்கின்றான்
வறிது நீபண் டிதர்போல
வழங்கு மாற்றம் இனிவேண்டேம்; (42)

---

292. மறையோன்-சுதன்மன். விந்தை-வித்தை-கல்வி. புரிந்தபகல்-புரிந்த போது.

293. கூடி-கூடினல்.

294. பூசுரன்-மறையவன் (பிரமன்)

295. தொன்மை அறநூல் துறைபடியார்
தொழுநற் குலத்தோர் ஆயிடினும்
புன்மை மூட ராகும் இந்தப்
பொதுவில் இருப்போ ருடனீயுங்
கன்ம சேட ரெனுமூடர்
காணும் இதனுக் கையமிலை
தொன்மை யுருமூ த்துக்கிழமாய்த்
தொலைவோய் யாவை அறிகுவை நீ. (43)

296. என்று நிந்தித் திடுமொழிகேட்
டேத்து மறையோன் உருத்தணந்து
கன்றி வேதா மொழிகின்றான்
கற்றோன் என்றே அபிமான
வென்றி யுள்ளிற் கரிய புத்தி
விளம்பி னேன்சிற் றறிவாலென்
நன்றி மொழிகே ளாமடமாய்
நனிகூர் பொறையும் இகந்தனையால். (44)

297. எனையும் இகழ்ந்தாய் உன்மணிநா
இனித்தம் பிக்கக் கடவதென்று
தனையும் உணரா மறையோனைச்
சபித்த பின்னர் அளிமுரலப்
புனையும் முகமெல் லிதழ்முறுக்குப்
பொருக்கென் றலர்ந்து பொகுட்டயல்வீழ்
நனையு முருகு கொப்புளிக்கும்
நளின மறையோன் மறைந்தனனால். (45)

---

296. மறையோன் உரு-வேதியர் கோலம்; தணந்து-நீங்கி; கன்றி-கோபித்து; வேதா-பிரமன். அபிமான வென்றி உள்ளிற்கு-தன்மதிப்புக் கொண்ட உன் உள்ளத்துக்கு. இகந்தனை-விட்டனை.

297. தனையும் உணரா-தன் நிலையைச்சற்றும உணராத. நளின மறையோன்-தாமரை மலரோன் (பிரமன்).

# அத்தியாயம் 12

## விபூதி மான்மியம் தொடர்ச்சி

### சுதன்மன் விசுத்தன் கதைத் தொடர்ச்சி

*இங்ஙனம் சுதன்மன் நாவை இழந்து நின்றதைக் கண்ட அரசன் வஜ்ர தேகி சுதன்மனது தம்பி விசுத்தனை அழைத்து யோசிக்க, விசுத்தன் நான் திருமாலைப் பூசித்து இக் குறையை நீக்குவேன் என்று கூறி அப்படியே அவரைப் பூசித்தான். திருமால் எதிர்தோன்றி வித்யா கர்வத்தினால் வேதம் வல்ல அந்தணர்களையும் அறிஞர்களையும் சுதன்மன் இகழ்ந்தான். அடக்கமில்லாத கல்வி நிந்தைக்கு இடமானதால் பிரமன் அவனைச் சபித்தான். அந்த சாபத்தை நீக்கல் அரிது என்றார். விசுத்தன் பின்னும் விடாது வேண்டத் திருமால் 'உன் தமையன் நாவைப் பெற்றாலும் முன் போலத்தான் இருப்பான்; இந்தச் சாபத்தை நான் நீக்கமுடியாது' என்றார். அதற்கு விசுத்தன் 'விசுவாமித்திரர் அல்லவோ திரிசங்குவுக்குப் பொன்னுலகில் இடம்பெற வைத்தார்; பிரமனிட்ட சாபத்தை நீக்குதல்தானா உங்களுக்கு அரிது? உங்களுக்குக் கருணை ஒரு சிறிதும் இல்லையே' என்றான். இதைக்கேட்ட திருமால் 'என்னை மதியாமல் நீ இங்ஙனம் பேசுகின்றாய்; உன் உடல் குறைந்து போகக் கடவது' எனச் சபித்து மறைந்தார். வஜ்ரதேகி இதை அறிந்து சுதன்மன் விசுத்தன் இருவரையும் திருக். கேதாரத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கு சிவதரிசனத்துக்கு வரும் முனிவர்களிடம் முறையிட்டான். இந்தச் சாபத்தை விலக்க வல்லவர் எவரையுங் காணாது அவன் ஏக்கமுற்றான். அப்பொழுது ததீசி முனிவர் அங்கேவர அவரோடு நடந்த வரலாற்றை இவன் கூற அவர் இறைவனைத் தியானித்துத் திருநீறு அளித்தார். அந்தத் திருநீற்றை அந்தணர் இருவருக்கும் உடல் முழுதும் அரசன் பூசச் சாபம் விலகிச் சுதன்மனுக்கு நாவும், விசுத்தனுக்கு உடலும், முன்போல நல்ல வண்ணம் விளங்கின. வஜ்ரதேகியும் அந்தணர் இருவரும் அற்புத மனத்தராய்த் ததீசி முனிவரை வாழ்த்தி வணங்கினர். முனிவரும் அவர்களுக்கு ஆசி கூறித் தமது ஆசிரமத்தை அடைந்தார். மறையோர் இருவரும் அன்று தொட்டு விபூதியைப் போற்றி அணிந்து நற்கதி உற்றனர்.*

### வருணன் அரக்கனான கதை

*இங்ஙனம் திரு நீற்றின் பெருமையை நாரதர் சொல்ல அதைக் கேட்டு அகத்தியரும் இந்திரனும் மகிழ்ச்சியுற்றனர். அப்போது நான் (வருணன்) இந்திரனை நோக்கி வீண்பொழுது போக்கும் அக்கதையை விடுங்கள்; அரக்கர்களின் கொடுமை பெரிதாயிருக்கிறது; உன் வச்சிரப்படையால் அவர்களை அழித்தருள் என முறையிட்டேன். இதைக்கேட்டு அகத்தியர் மிகக் கோபங்கொண்டு என்னை நோக்கி 'அடே! மூடா! நீ அஞ்சாது வெண்ணீற்றை அலக்ஷயமாய்ப் பேசினாய். நீ அரக்கனாகக் கடவை' என என்னைச் சபித்தனர். பின்பு, அகத்தியர் (கடலில் ஒளித்திருந்த அரக்கரை வெளிப் படுத்தவேண்டி, இந்திரனோடு கடற்கரைக்குச் சென்று இறைவனைத் தியானித்துக் கடல் நீரைப் பனித்துளிபோல உண்டனர். இந்திரனை நோக்கி நீ இனி அரக்கரை வெல்வாயாக என ஆசி கூறித் திருநீறு தந்தனர்; இந்திரனும் திருநீற்றை அணிந்து அரக்கரை வதைத்தனன்; பின்னர் இந்திரன் அகத்தியரை அணுகி மூடனாம் வருணனுக்கு அருளவேண்டும் என அகத்தியர் புயவலன் என்னும் அரசனுடைய நெற்றியில் உள்ள திருநீற்றை என்று அவன் தரிசிக்கின்றானோ அன்று அரக்கனுருவு நீங்கப் பெறுவான் எனக் கூறித் தமது இடத்துக்குச் சென்றனர். இன்று உன் முகத்தில் உள்ள திரு நீற்றைக் கண்டேன், சாபம் நீங்கிற்று; பழைய வடிவைப் பெற்றேன் எனக் கூறி வருணன் தனது சொந்த பட்டணத்தைச் சேர்ந்தான். புயவலனும் வருணனுடைய கதையைக்கேட்டு வியப்புற்று திருநீற்றை என்றும் போற்றி வாழ்ந்து இறுதியில் திருக் கயிலையை அடைந்தான்.*

*திருநீற்றின் பெருமையைப் பேசுபவர், கேட்பவர் நற்கதியை அடைவார்கள். திருநீறணிய எல்லாப் பாவமும்தொலையும்; எல்லாப் பேறுகளும் கிடைக்கும்; இது வேத வாக்கியமாம்.*

## அத்தியாயம் 12.

## விபூதி மான்மியம் தொடர்ச்சி

### [சுதன்மன் விசுத்தன் கதைத் தொடர்ச்சி]

298. அந்தப் படியே கொடும்பாவி
யான மறைவல் லோன்நெடுநா
ளெந்தத் தொடர்வல் வினையதனாற்
சுழலா தேதம் பித்ததப்போ(து)
எந்தப் பதமும் மொழியாமல்
இறையோன் அவையின் மூகனைப்போல்
நிந்தைப் படவே தனியிருந்தான்
நிருபன் இதுவே தெனவுரைத்தான். (1)

எழுசீர் விருத்தம்

299. நெஞ்ச மீதுவெகு சிந்தை யுற்றமரர்
நிருபனே! மலைய முநிவனே!
செஞ்சொ லாலிறை பினுஞ்சு தன்மன்மகிழ்
சேய பின்னவனை நோக்குறு
விஞ்சுத ன்மதி விசுத்த! என்செய்வம்
விளம்பு கென்றிட விசுத்தனும்
அஞ்சல் என்றருள் துழாய லங்கலிறை
யடிப ணிந்துமொழி பெறுகுவோம். (2)

300. என்று ரைத்துமணி தருப சுங்கழை
யிசைத்து நீணிரை குவித்துவான்
குன்றெ டுத்துமழை காத்த கண்ணனடி
குளிர்ப சுந்துளவ மாலையால்
நின்ற ருச்சனை புரிந்தனன் கிரண
நேமி யோனெதிர் அடைந்தனன்
அன்று கட்புனல் சொரிந்து நெக்குருகும்
அன்பு கொண்டுபுகழ் கின்றனன் (3)

301. அருள்தெ ரிந்தபக வானு மாகியடி
யார்தமக் கபயம் நல்கியே
யிருள்து ரந்தஅருள் விண்டு வாய்மகிழும்
இறைவ னே!நினடி யானைநீ

---

299. இறை.வஜ்ரதேகி; நோக்குறு-நோக்கி; அஞ்சல் என்று அருளும் இறை-திருமால்.
300. மணி-முத்து; முத்து தரு(ம்) கழை-மூங்கில் (புல்லாங்குழல்).
301. அடியானை-அடியானாகிய சுதன்மனை. விண்டு-திருமால்.

மருள்த ருங்கொடிய சாபம் விட்டிட
மகிழ்ந்து காத்தருள் எனச்சொலித்
தெருள்த ருங்குண விசுத்தன் வாய்மொழி
தெளிந்து விண்டுமொழி கின்றனன். (4)

302. கருதி நல்குமென் வரத்தி னலரிய
கல்வி பெற்றனன் உடன்றிவன்
சுருதி யந்தணரை யறிஞர் தம்மைமிகு
துயர மீக்கொள இகழ்ந்தனன்
அரிதில் வந்திடும் அளப்ப ருங்கவிதை
யான தோர்வினயம் ஆயிடிற்
பெரிது வந்திட விளங்கும் நிந்தைகள்
பிறந்ததால் விதிச பித்தனன். (5)

303. ஆகை யாலரிய சாப மீட்கஅரி
தரிதெ னக்குமெனு மாயவ
ஞகை யானமொழி கேட்ட பின்னரும்
உவந்து போற்றி மொழிகின்றனன்
மூகை யானஅடி யேங்கள் செய்தபிழை
முழுதும் நீயினி பொறுத்தயன்
ஈகை யால்மருவு சாப நீத்திடுதி
யென்ற வாய்மொழியை வினவியே, (6)

304. பைந்து ழாய்ப்படலை மாலை மார்பிறை
பரிந்து பின்னரும் இவன்றனக்(கு)
இந்த வித்தைகள் அளித்திடிற் கவிஞர்
யாரையுங் கவிமதத்தினல்
நிந்தை சொற்றிடுவன் என்று ணர்ந்துமறை
நீதி யற்றிடு விசுத்த!நீ
விந்தை செய்கரு மதத்தி னலினி
விளைந்திடும் பலனும் இல்லையே; (7)

305. இப்ப கற்பிரம சாபம் நீத்திட
எனக்கொர் சத்திகளும் இல்லையென்(று)
ஒப்ப றப்புகலு மாலை நோக்கியுள்
உறுத வெஞ்சின வுடற்சியாற்
செப்பு கின்றனன்சொல் கவுசி கத்தவசி
தேக மோடுதிரி சங்குவைத்
தப்ப றப்பொனுல கத்தி லேயிசை
தழைத்தி டக்கடி திருத்தினன்; (8)

303. மூகை-ஊமை; நீத்திடுதி-நீக்கியருள்.
305. உடற்சி-கோபம். கவுசிகன்-விசுவாமித்திரர்.

306. மதும ழைக்கது ழியுமிழ்கு றுந்துளி
வழிந்து பில்கவரி வண்டுசூழ்
புதும ணப்படலை கமழ்ப சுந்துளவு
புனைத டம்புய முகுந்த!கேள்
சதுமு கக்குரிசில் சாப நீக்கவொரு
தயையெம் மாத்திரமும் இல்லையோ
கதுமெ னப்புகறி யென்ற தோர்மொழி
கண்டு கண்ணனறை கின்றனன். (9)

307. சற்று மென்னைமதி யாமல் மோகமொடு
தவறு நிந்தை மொழி சாற்றினை
சொற்ற நீயுடல் குறைந்திடக் கடவை
சோர்ந்தி டாதொரு மதிக்குளே
யுற்ற தென்றுரு மறைந்த னன்பினர்
உவாக் கடற்கலை யுடுத்தபார்
முற்று மேத்திறை விசுத்தன் உற்றிடு
முராரி சாபமும் உணர்ந்தனன். (10)

308 உதவி கூர்சுதன்ம னெடுவி சுத்தனையும்
ஒக்க வேகொடு புராரிதன்
பதம லர்த்துணைகள் கண்டு தெண்டன்முறை
பண்ணியுள் நெகிழும் அன்பினல்
துதிசெய்தம்பொனிடை யிடைகு யிற்றுமணி
சுடர்வி டும்பெரிய கோபுரத்(து)
அதிக வாயின்மிசை யவர்க ளோடுமுடி
யரசன் ஆர்வமொ டிருந்தனன். (11)

309. அந்த வேலைகே தார நாதனை
யநேக மாமுநிவர் சூழவே
வந்து தெண்டன்முறை பண்ணி யார்வமொடு
மன்ன வன்புடை யடைந்தனர்
இந்த வேதியர்கள் இருவ.ரும்பிரமன்
எறிசு டர்த் திகிரி மாயவன்
தந்த சாபமுன் அடைந்து வந்தவர்கள்
ச்சாப நீங்க அரிதாகுமால். (12)

310. என்று ணர்ந்துமுடி யரச னுக்குளம்
இரங்கி ஆசிகள் மொழிந்தபின்
சென்று தத்தமுயர் பன்ன சாலையிடை
சேர்ந்துளார் கொடிய சாபமும்

307. மதி-மாசம்; கலை-ஆடை; இறை.வஜ்ரதேகி.

ஒன்ற றக்கடிது தீர்க்கு மாதவரும்
ஒருவ ருண்டென உணர்ந்துதான்
வென்றி வேலிறை விசார மாயுள
மெலிந்து சிந்தையொ டிருந்தனன். (13)

311. போற்று மாணவர்க ளொடுத நீசிமுநி
புங்க வன்துளவ மாலயற்(கு)
ஏற்ற மானகே தார நாதனை
யிறைஞ்சி நின்றனன் அவன்தனை
யாற்றல் சான்றவிழை வோடு மன்னவன்
அடைந்தொ டுக்கமொ டிறைஞ்சி,ஓர்
மாற்றம் இன்றியுளம் நெக்கு நெக்குருக
மயிர்பொ டித்திட வழுத்தினன். (14)

312. முநிவ! கேள்! மல ரயன்து ழாயிறை
மொழிந்த சாபமிவர் வினையினல்
துனியு றச்சிவணி மருவு கின்றவர்
துளங்கும் என்புரோ கிதர்களாம்
நனிம கிழ்ச்சியொடு சாப நீத்தருள்
நல்கு கென்ற இறை சொற்குறித்(து)
இனிமை யால்வினை யகற்று வெண்பொடி
யெடுத்து மாமுநி கொடுத்தனன். (15)

313. மல்ல லைத்திடு தடம்பு யங்கெழும
ஏத்தி யப்பொடி வாங்கியே
தொல்லை விப்பிரர்கள் வடிவ னைத்துமுத்
தூளனம் பணின னப்பகல்
ஒல்லை மன்னனும்; விசுத்தன் மெய்ம்முழுதும்
ஓங்கி மல்கியது முன்னர்போல்
தொல்லை யிற்றிடு சுதன்மன் நாவுமியல்
தொன்மை போன்றுளது நன்மையால். (16)

314. இந்த அற்புதம் எலாங்குறித் துலகில்
எவரும் ஆச்சரியம் எய்தினர்
தொந்த முற்றவினை நீற்று நீறதுத்
தூளனம் புரியு நன்மையாற்
பந்தம் உற்றஇரு வோரும் மன்றல்கமழ்
பங்க யக்குரிசில் மாயனல்
வந்த இக்கொடிய சாப நீங்கினரம்
மான்மி யங்களெவர் அறிகுவார். (17)

312. துனி-வருத்தம்.
313. விப்பிரர்கள்-அந்தணர்கள். தொல்லை இற்றிடு சுதன்மன் நா-முன் தம்பித்துப் போன (சுதன்மனுடைய) நா.

**315.** என்று கூர்த்துணரும் வச்ர தேகியர
சிருடி புங்கவர் எவர்க்குமே
வென்றி பெற்றிடு ததீசி தாள்மலர்
விரும்பி வந்தனை புரிந்தனன்
நன்றி முற்றுணர் இரண்டு வேதியரும்
நன்னி லத்தின்முடி தோய்ந்திடத்
துன்று காதலொடு முறையி றைஞ்சுபு
துதித்து நின்றுமொழி கின்றனர். (18)

**316.** பொழித ருங்கருணை ததீசிமுனி
புங்கவன் அருள்வெண் ணீற்றினால்
உழித ரும்பவம் அகற்றி வந்தருளும்
உன்ற னாலடியர் இருவருங்
கழிபெ ருங்கதி யடைந்தனம் நிலவு
கான்ற வெண்பொடியின் மான்மியம்
வழித ருங்குரவ நீயும் ஈசனும்
வரத்தினால் அறிகு வீரரோ. (19)

**317.** என்று நன்மொழி யிசைத்து மண்மிசை
யிறைஞ்சு வேதியர்கள் தம்மையுங்
குன்றம் அன்னபுய மீது பார்மருவு
கொற்ற வன்றனையும் ஆசிகள்
நன்று நன்றென மொழிந்து வந்துதன்
நலங்கொள் ஆச்சிரமம் நண்ணினான்
அன்று தொட்டுமறை யோர்வி
பூதிமெய் அணிந்து நற்கதி யடைந்தனர். (20)

**318.** இத்த கைத்தென உரைத்த மாகதி
யாழ்நரம் புளரும் நாரதன்
உத்த மச்சொலினை மந்த மாருதம்
உலாய மாமலய முனிவனும்
மத்த கக்கரட வெள்ளைவாரணனும்
வார மல்கமுறை கேட்டபின்
சுத்த வெண்பொடியை ஒருவ ருக்கொருவர்
துதிசெய் தன்பினொ டிருந்தனர். (21)

---

**316.** ததீசிமுனி-விளி. புங்கவன்-சிவன்.

**318.** வாரம்-அன்பு.

வருணனது கதை-தொடர்ச்சி

319. அங்கண் வேறுமன தாகி யப்பகல்
அடாத தொன்றுளம் நினைந்து நான்
புங்க வர்க்கிறைவ என்ற ழைத்துவிண்
போது போக்கு கதை விடுகென
இங்கி தத்தினொ டுரைத்து வாரிதியி
னிடையி ராக்கதரொ டசுரரும்
பொங்கு சேனையொ டெனைத்து ரத்தியுயிர்
பொன்றி டக்கொலைசெய் கின்றனர். (22)

320. பாழி வாயிதழ் துடிப்ப வெண்பிறை
பகுத்த கூரெயி றதுக்கியே
ஊழி காலமென உயிர டங்கலும்
உடற்றி உண்டகொடி யோர்களைப்
பூழி வாய்மடிய வச்சி ரப்படை
புகுத்தி யென்றபகல் மணிகள்தூர்த்(து)
ஆழி யாம்அருவி தென்ற லங்குழவி
யணையு நீர்மலய முநிசொல்வான். (23)

321. வெஞ்சி னங்கொடு சீறி யேயுளம்
வெகுண்டு வா!கொடிய மூட!நீ
அஞ்சி டாதுசிறு சொற்சொல் கின்றனை
அரும்ப வங்களை ஒழித்தல்செய்
விஞ்சு வெண்பொடியின் மான்மி யம்பகரும்
வேலை யெங்கள்மொழி தள்ளியே
எஞ்சும் இக்கதை விடுக என்றனையொ
ரெண்ணம் அற்றுவரும் நீசனே. (24)

322. மனத்தி னுலுமே நினைக்கொ ணுதசொலை
வாக்கி னுற்சொல்பா வத்தினுற்
கனத்த பேருரு அரக்க னுகவே
கடவை யென்றுகூறு முநிவன்முன்
நினைத்து வன்பொடு சபித்து விண்ணரசை
நேய மோடழைத் துரைசெய்தான்
வினைப்பெ ரும்பவம் எலாம கன்றன
விரும்பி யிக்கதைகள் கேட்டதால். (25)

---

319. நான்-வருணன்; இங்கிதம்-குறிப்பு, கருத்து.

320. பாழிவாய்-அகன்ற வாய்; அதுக்கி-கடித்து; பூழிவாய்-புழுதியில்; புகுத்தி-புகுத்து வாயாக (செலுத்துவாயாக); என்றபகல்-என்று சொன்னபோது. தூர்த்து-நிறையப் பொழிந்து; ஆழியாம் அருவியும்-தென்றலங் குழவியும் அணையும்...மலயம், நீர்-நீர்மை-தன்மை பிடிக்கு(ப் பலாப்பழத்தை) உண்ணக் (களிறு) உதவுதல்- "பிடியூட்டிப் பின் உண்ணுங் களிறு" கலி-11. 'பிடிபசி களைஇய...வேழம்'—குறுந். 37.

323. வெடிகு ரற்சுழலும் விழிய ரக்கரணி
வீற்று வீற்றுளறி யோடியே
பொடிப டச்செருவில் அடலி னிக்கடிது
போதி லாகும்நிற் கரிதலப்
படிசெல் என்றுமைக் கடல்நெ டுங்கரை
பரிந்து சென்றனன் இணங்கிடாப்
பிடித னக்குதவு சுனைமு டப்பலவு
பெட்பின் மாமலய முநிவனே. (26)

324. விந்த மால்வரை யடக்கு செங்கமல
மீது வெண்பொடியை வாங்கியே
புந்தி கூரஅடி மந்தி ரத்தினுதல்
பொலிம லர்க்கையின் வனைந்துகை
முந்தி நீட்டியலை தன்னை வாவெனமுந்
நீர்ப னித்திவலை போலவே
வந்தி ருந்ததுளி யாக ஈசனை
மனக்கொளா முநிவ னுண்டனன். (27)

325. குன்ற ருஞ்சிறக ரீர்த்து வெற்றிபுனை
குலிச வான்படைகொள் மன்ன !நீ
யின்று பாத்க இராக்கதக் குழுவை
இனிவ தைத்திடுதி என்றுமுன்
நின்ற வானவ ரிறைக்கு வெண்பொடியை
நேய மோடுதவி னன்வரந்
துன்று வெண்பொடியை வாங்கி யேய்ந்தசுரர்
சூழ ரக்கரை வதைத்தனன். (28)

326. பின்னர் மைக்கடலை முன்னர் போல்திரை
பிறங்க விட்டருள் அகத்தியன்
தன்னி டத்தினி லடைந்த னன்கமழ்
தருக்கண் வீழருவி மதுநிறை
பொன்ன கர்க்கிறைவன் எனைய ழைத்துவளர்
பொதிய மாமுநிவன் அருகுவந்(து)
உன்னு தற்கரிய துதியி னுளம்
உவகை கூரஅறை கின்றனன். (29)

---

325. 'குன்று அருஞ் சிறகர்' (குலிசன்-இந்திரன்) ஈர்த்தது-மலைகளின் சிறகை இந்திரன் அறுத்த சரிதம் குறிக்கப்பட்டுளது. "திசைக் கிரியை முதற் குலிசன் அறுத்த சிறை" (திருவகுப்); 'கிரிமுற்றும் அரிவதொரு கிளர் வஜ்ரன்'—வில்லி.பார. 12-ஆம் போர் 57).

327. ஆற்ற ருந்தவம் இழைக்கு மாமுனிவர்
அரச! கேண்மதி! ஒழுக்கமாம்
மாற்றம் ஒன்றுமறி யாத மூடமிகு
வருண னுக்கருள்செ யென்றுமுன்
போற்றி வந்தனை புரிந்த னன்நிகரில்
பொதிய மாமலை யகத்தியன்
தோற்று நல்லுவகை யொடுகுறித் தொருசொல்
துணிவில் எற்கும்உரை செய்தனன். (30)

328. புயவலக் குரிசில் எனவு திப்பனொரு
புரவ லன்அவன் நுதற்பொடி
நயனு றக்கருதி நோக்கியே கொடிய
நவைய ரக்கவுரு விட்டென
வியனு ருத்தனையு முன்ன போலறிவில்
மேவி மேற்றிசை யடைந்திவன்
பயனு றப்புவி புரப்பன் என்றுதன்
பதிய கத்தியனும் நண்ணினன். (31)

329. நானும் இப்படி யுவந்து வந்தெனது
நகர மீதினி லிருந்தனன்
ஈன முற்றவ லரக்கர் மேனியுடன்
எய்தி முற்றிய ததற்பினர்
மான முற்ற வுனுதற்கொள் பூதியை
மகிழ்ந்து பார்த்தென்வடி வெய்தினேன்
ஊனம் அற்றதிது என்று சீர்வருணன்
ஒல்லை சேர்படையை யுன்னினன். (32)

330. கருதும் எல்லையவர் யாரும் வந்தனர்
கதித்த பேர்களொடு கூடிவான்
பருதி போலமகிழ் வெய்தி மாடமலி
பட்டி னத்தினில் அடைந்தனன்
சுருதி யந்தணர் விபூதி கண்டதால்
தொல்லை யம்பதி யடைந்தனன்
விருது சேர்ந்தபுய வலனும் இக்கதையை
வினவி யற்புதமும் எய்தியே, (33)

---

329. என்று-என்று தன் வரலாற்றைக் கூறியபின். வருணன் படையை உன்னினன்-வருண பதத்தில் தனக்கிருந்த சேனையை வரும்படி நினைத்தான்.

330. பட்டினம், தொல்லையம்பதி-வருணனது ஊர். இது 'விபாவரி', 'சிரத்தாவதி'—எனப்படும். அடைந்தனன்-வருணன் தனது பதியை அடைந்தான். சுருதி அந்தணர்-சுசீலர்.

331. பாயி ருட்படலை சீத்து வாலொளி
பரப்பு நீற்றின்மிகு பத்தியாய்த்
தூய வெண்பொடியை மீது பூசும்உத்
தூள னங்கள்செய்து பூதியின்
நேயம் உற்றறிவி னுற்ப டுத்துமனை
நீதி மைந்தருற வோடுசேர்ந்(து)
ஆய போகவிதம் உண்டு மெய்யகலும்
அந்த நாட்கயிலை யெய்தினன். (34)

திருநீற்றால் வரும் பேறுகள்

332. யாவன் மற்றொருவன் இந்த வெண்பொடி
யினைக்கு மான்மியம் உரைக்கிறன்
யாவன் மற்றொருவன் ஓது வித்துலகம்
எங்க ணும்புகழ் விரிக்கிறன்
யாவன் மற்றொருவன் இருசெ வித்துளையுள்
எய்த விட்டருள் நிறைக்கிறன்
யாவன் மற்றொருவன் அவன் விருப்பமுடன்
நிற்பன் மாகதியை யடைகுவான். (35)

333. மைந்தர் வேண்டினவன் மைந்த ரைக்கிரண
மாழை வேண்டினவன் மாழையை
அந்தம் அற்றுவரு பலக லைப்பொருளின்
அறிவு வேண்டினவன் அறிவினை
விந்து நாதவொளி மேற்க டந்தபர
வீடு வேண்டினவன் வீட்டினைப்
புந்தி யான து மகிழ்ச்சி பொங்கவொரு
போதி லேயடைகு வானரோ. (36)

334. எரியி லோடவைத் திடுப சும்பொனை
யெடுத்த வன்களவு செய்தவன்
பரிவி னன்மது நுகர்ந்த வன்உடல்
பதைக்க வேதியரை அட்டவன்
அரிய தாகுமிது முதல வாகிய
அடாத பாதகம் இழைத்தவன்
உரிய பாதகம் அனைத்தும் நீத்திடுவன்
உற்ற தையமிலை யில்லையே. (37)

335. அருந்த வக்கிழமை பூண்டி யோகினில்
அடைந்த அந்தணிர்!மென் மேலுமே
வருந்தி யேயிதுபல் காலு ரைத்தென!
மனங்கொ ளாஅறிமின் நீவிர் தான்

335. உரைத்தென-உரைத்து என்ன உரைப்பானேன். மனங்கோளா-மனங்கொண்டு.

பரிந்து கேண்மினிது பிரம கத்திமா
பாத கங்கள்முத லியவெலாம்
பிரிந்து நீங்கவரு சாந்தி யாகுமறை
பேசு கின்றதிது வுண்மையே. (38)

336. பகரி லாதுபதன் அழிகு றுஞ்சருகு
போது பார்த்தவ ணருந்திநூல்
பகரும் வேதவே தாங்க முற்றுமுணர்
பண்ண வீர்!சகல சுருதியின்
நிகரி லாதவுப நிடத சாரமென
நிமல மானசிவ வுருவமாம்
அகர மாதிவரு ணத்தி லென்னவரும்
அத்தி யாயமிது சித்தியே. (39)

---

## அத்தியாயம் 13.

### உருத்திராக்க மான்மியம்

*உருத்திராக்கம் புனைந்தவன் எவனுயினும் அவனை வினை அடையாது. எத்தகைய ஞானமும் எத்தகைய விரதமும் உருத்திராக்கம் புனையும் பேற்றுக்கு இணையாகா. ஆயிரம் ருத்ராக்ஷம் புனைந்தவனைச் சிவனென்றே தேவர்கள் தொழுவர்.*

*சிரத்தில் 1, காதில் 6+6, கழுத்தில் 32, இரு தோளில் 16+16, இரண்டு மணிக்கட்டில் 12+12—ஆக அணிபவன் இறைவனேயாம். முத்து, பவளம், வைடூரியம், பளிங்கு, பொன், வெள்ளி இவையுடன் ருத்ராக்ஷம் அணிபவனை இறைவனென உலகம் போற்றும். ருத்ராக்ஷம் அணிந்து நீரில் முழுகுபவன் கங்கையில் முழுகினவனுய் இருமைப் பேறுகளையும் அடைவான். நீரில் முழுகாது ருத்ராக்ஷத்தை அருச்சிப்பவன் லிங்கத்தை வழிபட்ட பலனைப் பெறுவான். ஒரு முகம், ஐந்து முகம், பதினொரு முகம், பதினுன்குமுகம் உள்ள ருத்ராக்ஷமணியைத் தொழுது அருச்சிப்பவன் வறுமையடையான்; செல்வம் பெறுவான்.*

#### குரங்கும் கோழியும் வீடுபேறுற்றது

*நந்தி நகரில் வேசையர் குலத்தில் நந்தை என்பவள் சிவபக்தி நிறைந்தவள். அவள் குரங்கு ஒன்றையும் கோழி ஒன்றையும் வளர்த்தாள். அவைகளுக்குக் கண்டிகை (ருத்ராக்ஷம்) புனைந்தாள்; ஆடல் பயிற்றினுள்; அவைகளுடன் விளையாடி மகிழ்ந்தாள். அவைகள் இறந்தபின்பு, குரங்கு காஸ்மீர தேசத்தில் ராஜகுமாரனுகப் பிறந்தது; சுதன்மன் எனப் பேரிடப்பெற்றது. கோழி மந்திரிகுமாரனுகப் பிறந்தது; தாரகன் எனப் பேரிடப்பெற்றது. இருவரும் ருத்ராக்ஷ மணிகளையே ஆபரணமாகத் தரித்துச் சகல செல்வ போகத்துடன் வாழ்ந்து சிவகதி பெற்றனர்.*

---

336. பகர்-ஒளி; பண்ணவீர்-முனிவர்களே! (பண்ணவர்-என்பதன் முன்னிலை). வருணம்-எழுத்து; வருணத்தில் அகரம் ஆதியாக வருவதுபோல.

## அத்தியாயம் 13.

### உருத்திராக்க மான்மியம்

உருத்திராக்கத்தின் பெருமை, அணியும் வகை முதலியன

கலி நிலைத்துறை

337. சூத மாமுநி மொழிகுவான் தொழுதகு தவத்தீர்!
கேதம் நீத்திடக் கற்பவர் மகிழ்ந்துகேட்கின்றோர்க்(கு)
ஆதி நாட்டொடர் பாதகம் அனைத்தையும் அறுக்குஞ்
சோதி யாமிறை யக்கமான் மியத்தையான் சொல்கேன். (1)

338. பத்தி யற்றவன் பத்தன்வான் பரம்பொருள் உணரும்
முத்த ருட்கொளா மூர்க்கரின் மூர்க்கனே முதலாம்
இத்த கைத்துணை யாவனு கிலுமவன் அவனென்
அத்தன் அக்கமா மணிதரிப் போன்வினை யடையான். (2)

339. ஓங்கு தத்துவா தீதமெய்ப் பரஞ்சுடர் உணர்ந்தோர்
ஈங்கு ரத்தன மாவிர தங்களென் றிசைப்பார்
தாங்கும் அக்கமா மணியினைத் தரித்தனர்த் தருமம்
வாங்கு தெண்டிரைப் புவிதனி லேதொடு மானும்? (3)

340. இம்பர் யாவனெண் கண்டிகை யாயிரம் எடுத்து
நம்பு காதலில் தரித்திடா நின்றனன் நாளும்
உம்பர் யாவரும் அவனையே கண்டுநெக் குருகித்
தும்பு ராதியர் புகழ்சிவன் என்னவே தொழுவார். (4)

341. அன்றி யுஞ்சிரத் தொன்றுகா தினையிலவ் வாறு
துன்று நன்கள மீதிலெண் ணன்கிரு தோளின்
மன்றல் கூரநா னன்குநா னன்கிரு மணிக்கட்
டென்றும் ஆறிரண் டாறிரண் ணிந்துளோன் இறைவன். (5)

342. நித்தி லம்பவ ளம்வயி டூரியம் நிலவின்
சுத்த மாகிய பளிங்குபொன் வெள்ளியீ துடனே
அத்தன் அக்கமா மணியினை அணிந்திடும் அவனை
எத்த லங்களும் இறையென ஐயமற் றிறைஞ்சும். (6)

343. ஒருமை கூர்மதி உள்ளவன் யாவனே ஒருவன்
பொருவில் அக்கமா மணிமுடி மீதினிற் புனைந்து
முருகு லாம்புனன் மூழ்குவோன் கங்கையின் மூழ்கி
யிருமை சேர்பலன் பெறுவன்மற் றையமொன் றிலையே. (7)

337. அக்கம்-ருத்ராக்ஷம்.
339. உரத்தன-வலிமை உடையன. மானும்-நிகர்க்கும்.
341. சிரத்தில்-1; காதில்-6+6; கழுத்தில்-32; தோளில்-16+16; மணிக்கட்டில்-12+12.

**344.** உரக மாமுடி யுலகினில் யாவனே ஒருவன்
பெருகு காதலால் அக்கமா மணிபுனல் பெறுமல்
வரும ருச்சனை புரிபவன் இலிங்கமே வழிபட்(டு)
அருள்பெ றும்பலன் பெறுவனீ தையமின் றுமால். (8)

**345.** முழுதும் ஓர்முகம் ஐம்முகம் பதினொரு முகமீ
ரெழு முகங்களாம் அக்கமா மணிகளை யெவனென் ?
தொழுத ருச்சனை புரிபவன் வறுமையைத் தொலைத்துப்
பொழுது நீப்பருஞ் செல்வமுற் றிடுவன்வான் புகழ. (9)

### நந்தை வளர்த்த குரங்கும் கோழியும் வீடு பெற்ற கதை

### கலி விருத்தம்

**346.** அந்தணிர்! வியந்தொர்கதை யன்பொடுசொல் கின்றேன்
நந்தி நக ரின்கணிகை நந்தை நிழல் முன்கால்
இந்துநிகர் வெண்குடைபொ னின்சிவிகை வம்பார்
மந்தஅநி லஞ்சிதறு செம்பொனொ டனந்தம். (10)

**347.** விஞ்சுமிவை கொண்டுமகிழ் விம்ப இதழ் வண்சீர்
வஞ்சிசிவன் அம்பொனடி வந்தனைசெய் தென்றும்
பிஞ்சுமதி யம்புனை பிணங்குசடை யெங்கோன்
அஞ்சலெனு நன்கதை யறிந்துளம் வியந்தாள். (11)

**348.** துண்டமதி கொண்ட இறை தொண்டர்முன் விழுந்தே
தெண்டனிடு கின்றவள் தினந்தொறும் அரங்க
வண்டல்செய என்றுகவி வன்படை நெடுங்கால்
கண்டிகை வளைந்துதன கங்கைகளறைந்தே, (12)

**349.** ஆடல்புரி வித்துமகிழ் ஆயிழையின் மிக்க
சேடியர் குழுக்கள்புடை சேரமுன் நகைத்தே
தோடுகுழை யக்கமணி தோள்வளை தரித்து
நாடக மிகுத்தகவி நாள்தொறும் நடிக்க, (13)

---

**344.** புனல் பெறுமல்-நீரில் முழுகாமல், அக்கமணி பூண்டு அருச்சனை புரிபவன்.

**345.** எவனென்-எவனாயினும் என்ன, நீப்பரும் பொழுது-அளப்பருங் காலம்.

**346.** நிழல் கால்-ஒளி வீசும், வம்பு-வாசனை, மந்த அநிலம்-தென்றல்.

**347.** விம்பம்-கொவ்வை: 'விம்ப இதழ்க் கும்ப முலை' குற்று. புராவஞ்சி-நந்தை என்பவள். 'பிஞ்சு மதியம் பவன்' - என்றும் பாடம். 'பவன்'-சிவன்.

**348.** அரங்க வண்டல் செய என்று-மேடையில் விளையாடுதற்கு; கவி-குரங்கு; வன்படை நெடுங்கால்-காலே ஆயுதமாகக் கொண்டது; பதாயுதம்; காலாயுதம் (351)-கோழி வளைந்து தன் அகங்கைகள்.

350. சேவலிறை யக்கமணி சேர்கரம் எடுத்திட்
டோவில்நடம் மற்கடக மோடெதிர் நடித்துப்
பூவுலகின் மற்றிவைசில் போதுகள் கழிக்கத்
தாவிலுயிர் விட்டுநெடி தாமுரு எடுத்தே, (14)

கொச்சகக் கலிப்பா

351. கனனல்வெண்ணித் திலமீன்ற **காச்சுமீர** தேயத்தின்
மன்னவையின் முன்னிறந்த மற்கடகஞ் **சுதன்மனென**
மன்னவன்மந் திரியிடங்கா லாயுதந்**தா ரக**னென்ன
முன்னிருவர் பிறந்துகலை முளைபிறைபோல் வளர்ந்தனரால்

அறுசீர் விருத்தம்

352. தருண வடிவாய் விளையாடிச்
சகல மாமெண்ணெண் கலையுங்
கருணை யறிவு கூர்ந்துமிகக்
கற்று முடிபொற் குண்டலங்கள்
அருண மணிப்பூண் அனைத்தையும்விட்
டக்க மணிநா னுமணியா
பரண மெனவேய்ந் தரும்போகம்
பலதுய்த் தருள்வீ டடைந்தனரே. (16)

---

## அத்தியாயம் 14.

### (உருத்திராக்க மான்மியம் தொடர்ச்சி)

#### புட்கர தேசத்தரசன் "சவுமியன்" கண்டிபூண்டு வெற்றிபெற்றது

**புட்கரதேசத்**தரசன் **சவுமியன்** வேசையரை வேட்டுத் தன் மனைவி **வசுமதி**யைப் புறக்கணித்தான். வசுமதி சஞ்சலமுற்று அரச சபைப் புரோகிதனுடைய மனைவியிடம் தன் குறைகளைக் கூறி, "என் கணவன் என்னை நேசிக்கும் வழி யாது, கூறுக" என வேண்டினள். இதைக் கேட்ட புரோகிதன் மனைவி "நீ ருத்ராக்ஷ மணி அணிந்து கொள். பிணிபோம், வசீகரம் கூடும், பாதகம் தவிரும், பூத பிசாசுகள் அணுகா, பாம்பின் கடி முதலியன வருத்தா" எனக் கூறி, ருத்ராக்ஷ மணி ஒன்றை வசுமதிக்கு ஈந்தாள். வசுமதியும் அதைப் புனைந்தாள். அன்றே அரசன் மனம் மாறி வசுமதியை விரும்பி மகிழ்ந்தான். அரசன் அவளுடனேயே காலம் போக்கினன். இங்ஙனம் இருந்ததனால் சேனைகளைச் சரிவரக் காப்பாரில்லாது போயிற்று. பகையரசன் இவன் நகரை வளைந்தான். போரில் சவுமியன் படைகளை இழந்தான். வசுமதியிடம் வந்து தன் நிலையை உரைத்தான். அவள், 'அரச! நீ ருத்ராக்ஷம் அணிந்து போர் செய்யின் வெற்றி பெறுவாய்' என்றனள். அங்ஙனமே சவுமியன் ருத்ராக்ஷம் புனைந்து, மனைவியே தேர்ச்சாரதியாகப், போருக்கெழுந்து சென்று போரில் வெற்றி கொண்டான்.

---

350. மற்கடகம்-குரங்கு.

### கணவன் மனைவியாய், மனைவி கணவனானது ("சகல கலை அறிந்தாள்" கதை)

பின்னர், சவுமியன் தனது குடிகளுக்கெல்லாம் ருத்ராக்ஷம் புனைவித்தான். வசுமதிக்கு—அனகன், அதிரதன், சகலகலை அறிந்தாள், சித்திராங்கனை—என மக்கள் நால்வர். இந்நால்வருக்கும் அக்கமணி புனைவித்தார்கள். கேரள தேசத்து அரசன் பிரமநாதனுடைய மைந்தன் கமலாக்ஷனுக்கு "சகலகலை யறிந்தாள்" மனைவியானாள். முதல் நாள் இரவு கமலாக்ஷனைப் பார்த்துச் சகலகலை "நீ ருத்ராக்ஷ மாலை அணியாமையால் என்னைத் தொட உனக்கு உரிமையில்லை" என்றாள். கமலாக்ஷன் 'எனது ரத்ன மாலையை விட உனது ருத்ராக்ஷம் சிறந்ததோ?' என வினவினான். "ருத்ராக்ஷம் புனையாதவன் பாதகன்; அவனோடு அணையில் இருந்தால் மா பாதகம்; அவனைத் தழுவினால் சொல்லொணாத கொடும் பாதகம். இதற்குப் புராணங்களே பிரமாணம்; முற்றும் உணர்ந்தவர் எவரையேனும் கேட்டறியலாம்" என்றாள் சகலகலை. அதற்குக் கமலாக்ஷன் "நீ சொன்னவண்ணம் எந்தப் புலவனேனும் உன் சொல்லின் உண்மையை உறுதிப்படுத்தினால் நான் உனக்கு மனைவியாகின்றேன்; நீ எனக்குக் கணவனாகுக" என்றான். சகலகலையும் நன்றெனக் கூறினள். மறுநாள் அரசசபையில் அவள் "அரசே! இங்கிருக்கும் மறையோர்களில் எவரையேனும் ருத்ராக்ஷ மணியின் மான்மியத்தைப்பற்றிக் கேள்" என்றாள். அரசன் நகைத்து "இந்தக் கலியாண மண்டபத்தில் உள்ள சித்திரச் சுவரில் எழுதப்பட்டுள்ள ஆதிசேடனிற் பள்ளி கொண்டுள்ள திருமால் அங்ஙனே எழுந்து 'ருத்ராக்ஷ மணி தரித்தால் பலனுண்டு' எனக் கூறினால் நீ சொன்னதெல்லாம் உண்மை என்பேன்"—என்றான். சகலகலையும் 'நன்று' எனக் கூறி கைதொழுது நின்று "துளப மாலைப் பெருமானே! ருத்ராக்ஷ மணிக்குப் பலன் உண்டென்றால், அதைத் தரிப்பவனது தீவினையும் நல்வினையாகுமென்றால், அதைத் தரியாதவன் செய்யும் புண்ணியச் செயலும் பாபச் செயலாம் என்றால், யான் வஞ்சமின்றி உரைத்தன எல்லாம் உண்மையாய் வேதவாக்குக்குப் பொருந்தியன என்றால், நீ அந்த ஆதிசேடன்மேல் எழுந்தருளி ருத்ராக்ஷத்தின் பெருமையை எடுத்துக் கூறுக" என்றாள். இம்மொழியைக் கேட்டவுடனே திருமால் அஞ்சி எழுந்து, "நங்காய்! நீ சொன்னதெல்லாம் உண்மை, உண்மை; வேதத்துக்குச் சம்மதமானது. ருத்ராக்ஷத்தின் பெருமையைச் சிவனே அறிவான்; பிறர் எள்ளளவும் அறியார்; எந்த வருணத்தாயினும், ருத்ராக்ஷம் தரித்தவன் பந்தபாசம் அகற்றினவனாவான்; நல்ல தவத்தினனாவான். அவனைக் கண்டால் நானும் உள்ளம் நடுங்குவேன்எனக் கூறி முன்போலச் சித்திரத்தில் அடங்கினர்.

இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்ட கமலாக்ஷன் அஞ்சினன். சகல கலையின் தோழியர் "மன்ன! உன் சொற்படி நீ ஆணுருவை விட்டு பெண் ஆகவேண்டியது தான்" எனக் கூறி நகைத்தனர். கமலாக்ஷன் "உங்கள் அரசி முதலில் ஆண் ஆகட்டும், நான் பின்னர் அவளுக்கு மனைவியாவேன்" எனறான். உடனே சகலகலை ஆணுரு அடைந்து "சகலகலா வல்லபன்' எனப் பெயர் பூண்டாள். கமலாக்ஷனும் பெண்ணுரு அடைந்து 'கமலாக்ஷி' எனப் பெயர் பூண்டு அக்கமணியின் பெருமையை உணர்ந்து அதனை நிறையப் பூண்டான். கமலாக்கன் தந்தை பிரமநாதன் சவுமியனைப் பார்த்து "என் மகன் மகளாய்விட்டான், உன் புதல்வி ஆணாய்விட்டாள். இவர்கள் சரித்திரமோ விபரீதமாய் முடிந்தது. என்னுடைய வேறொரு மகன் விபுதனுக்கு உனது மகள் சித்திராங்கனையை மணஞ்செய்து தருக" எனக் கேட்டான். சவுமியன் சம்மதிக்க, அங்ஙனமே விபுதனுக்கும் சித்திராங்கனைக்கும் திருமணம் நிகழ்ந்தது. இவ்விருவரும ருத்ராக்ஷம் பூண்டு சகல போகமும் துய்த்தனர். அப்படியே சவுமியனும் பிரமநாதனும் ருத்ராக்ஷமணிந்து போகங்களைத் துய்த்து ஈற்றில் திருக்கயிலையை அடைந்தார்கள்.

## அத்தியாயம் 14.

### உருத்திராக்க மான்மியம்-தொடர்ச்சி

#### புட்கரதேசத் தரசன் சவுமியன் கண்டிகை புனைந்து வெற்றிபெற்றது

அறுசீர் விருத்தம்

353. மங்குல் தவழ்கோ டபொன்னில்
வளரும் அருங்காழ் முடப் பலவின்
பொங்கு பருமுட் குடக்கனியம்
புலிக்கோ டுழவிண் டளிந்தசுளை
தங்கு நறவிற் குளப்படிகள்
தவறி வழுக்கி யுகள்குழக்கன்(று)
அங்கண் பிதிர்செந் தழலெனக்கண்
டகல்புட் கரதே யக்குரிசில். (1)

354. கன்னிக் கமுக மணிமிடற்றுக்
கணிகை யரையுள் ளூறுவேட்கை
மன்னித் தழுவு சவுமியன்தன்
மனையாள் எழில்கூர் வசுமதிகோன்
தன்னிற் பிரிந்த வருத்தத்தாற்
சரத மொழிகூர் புரோகிதன் இல்
உன்னித் தனது பதிசெயல்கள்
உரைத்து மடவாய்! அருடியென்றாள்; (2)

355. உலைவாய் அழல்கூர் முகம்பழுத்திட்
டொளிரா டகப்பொற் கேயூரம்
மலைவா குவில்தெண் திரையுலகு
வைத்தோன் தழுவும் வகையென்கொல்
சிலைவாள் நுதலாய்! புகறியெனச்
செப்பும் அவள்தன் முகநோக்கி
அலைவாய் எழுநஞ் சயில்மிடற்றோன்
அக்க மணிவேய்ந் திடுதியென்றாள். (3)

356. அக்க மணிவேய்ந் திடிற்பிணிகள்
அனைத்தும் அகலும் வசீகரமாம்
மிக்க கொடும்பா தகந்தவிர்க்கும்
மேலும் மேலும் உத்தமமாம்

---

353 அம்புலிக் கோடு-பிறையின் கோடு, பிதிர்-மகரந்தப்பொடிகள். 'மதிக் குழவி தவழ் சூலடிப் பலவின் முட்பொதி குடக்கனி'—மீனாக்ஷி-பிள்ளை-56.

354. கன்னிக் கமுகம்-இளங்கமுகு, வசுமதி-தனதுகோன்-தன்னைப் பிரிந்த, புரோகிதன் இல்-இல்-மனைவி; பதி-கணவன்.

355. கேயூரம்-தோளணி, மலைவாகு-மலை (போன்ற) தோள், வைத்தோன்-சவுமியன்.

356. புயங்கம்-பாம்பு, பாரிடம்-பூதம், கழுது-பேய், குணபம்-சுடுகாட்டில் உள்ள பிசாசு, இக்கு-கரும்பு.

கக்கு கனற்பா ரிடங்குணபங்
கழுது புயங்கக் கடிவருத்தா(து)
இக்கு மொழியாய்! எனவுரைத்தொன்
நீந்தாள் அக்க மாமணியே. (4)

357. மல்கு நிசிகால் இருட்பிழம்பு
வகிர்ந்து முடித்த குழற்கனிவாய்!
ஒல்கு மருங்குல் வசுமதிநூல்
உரவோன் மனைவி யக்கமணி
நல்கும் அதனைக் களமீது
நம்பி யணிந்தாள் அவ்விரவிற்
புல்க மகிழ்ந்து சவுமியனிற்
புகுந்தே யவட்சேர்ந் துகந்தனனே. (5)

358. அன்று முதலா யிப்படியே
யல்லும் பகலும் அவள்களபக்
குன்றம் அனைய முலைகள் தழீஇக்
கொண்டி ருந்தான் அவ்வேலை
வென்றி புனைமன் னவன்சேனை
வியந்து பரிப்போர் அற்றதனால்
துன்று திசைதோ றிருந்தவன்
தொல்லை நகர்மாற் றலன்வளைந்தான். (6)

359. குரிசில் உயிர்கள் அடங்கலுமுட்
குமட்டா தெடுத்து விழுங்கிலைவேல்
அரசன் பகைஞர் வெடிகுரற்கேட்
டகலா தொழிந்த சேனையுடன்
மருவி வெருவா தறைகூவி
மலைதல் புரிய எதிர்நடந்தான்
பொருவெம் படைகள் புறங்கொடுத்துப்
பொள்ளென் றகன்று போயினவே. (7)

360. நிருபன் ஒருவ னாகிநொந்து
நெடுமூச் செறிந்து தன்னகரம்
மருவி மனையா ளுடன்கடிதின்
வகைவெம் போரில் நிகழ்ந்ததெலாங்
கருதி யுரைத்து மனந்தளர்ந்து
கவலை யளக்க ரிடைமூழ்கிப்
பரவை யுலகிற் சிறிதுமுளம்
பற்றற் றொடுங்கி யிருந்தனனே. (8)

---

357. களம்-கழுத்து.
358. பரிப்போர்-புரப்பவர்.
359. குரிசில்-அரசன்-சவுமியன், படைகள்-சவுமியனது படை.
360. அளக்கர்-கடல்.

361. அந்த அமையந் தனில்மனைவி
அரந்தை யுறுமன் பனைப்பார்த்துச்
சிந்தை மகிழ வுரைக்கின்றாள்
திங்கள் மிலைச்சி யருள்கூடும்
எந்தை யருள்கண் டிகைமணிவேய்ந்
திருக்கில் விசயம் என்றுமுண்டாம்
சந்த யமுமற் றிலைமறையோன்
தன்னை விளித்து வினவுகென்றாள். (9)

362. மனைவி யுரைத்த மொழிகேளா
மறையோன் தன்னை விளித்துவெய்ய
வினைகள் அகற்றும் அக்கமணி
விதிகள் அனைத்தும் உடன்கேட்டுக்
கனைவெண் திரைபார் பரிக்குமிறை
கண்டி மணியா யிரந்தரித்தான்
அனைய படியே அக்கமணி
அவன்தன் மனையும் அணிந்தனளே. (10)

363. பின்னர் மனைதேர்ச் சாரதியாய்ப்
பிரிந்து சேனை யற்றதனால்
தன்னில் ஒருவ னாய்ப்படர்ந்து
தரிய லாரை யட்டதற்பின்
நன்னர் நெடுவால் வளைமுழக்கி
ஞால மனைத்தும் வசமாக்கிக்
கன்னல் மொழியில் லுடனகர்போய்க்
கண்டி மணிமான் மியமுணர்ந்தான். (11)

**கணவன் மனைவியாய், மனைவி கணவனான கதை.**

**(சித்திர உருவில் இருந்த பெருமாள் எழுந்து பேசினது).**

364. தனது தேயம் வதிந்திடுவோர்
தங்கட் கெல்லாம் அக்கமணி
புனைவித் தனனக் குரிசில்மனை
பூத்த மக்கள் நால்வர்பெயர்
அனகன் மைந்தார் அதிரதன்மற்
றவர்தம் பின்பு சிறுவியர்கள்
நினையுஞ் சகல கலையறிந்தாள்
நிகரில் சித்தி ராங்கனையே. (12)

---

361. அரந்தை-துக்கம்; சந்தயம்-சந்தேகம்.

363. மனைவியே சாரதியாக; தரியலார்-பகைவர்; கன்னல் மொழி இல்-கரும்பனைய மொழியளாம் மனைவி (வசுமதி)

364. மைந்து-வலிமை, மைந்து ஆர் அதிரதன். சிறுவியர்-சிறுமியர்; சகலகலை அறிந்தாள்-கலைஞானி.

365. அருள்சேர் மக்கள் நால்வருக்கும்
அக்க மணியே தரிப்பித்தான்
தருமே வியகே ரளதேயந்
தனில்வாழ் **பிரம நாதன்** மைந்தன்
கரிசேர் **கமலாக் கன்** சகல
கலையும் அறிந்தாள் தனைவேட்டங்(கு)
இருள்சேர் அறையில் இரவில்மனை
யிடையில் அவளோ டிருந்தனனே. (13)

366. அக்கா லையினிற் கமலாக்கன்
அணிபூண் கழற்றி மனைவிமலர்க்
கைக்கே கொடுத்திட் டவள்பூணுங்
கழற்றிப் பணிச்செப் பிருத்தியென்று
மிக்கோன் உரைத்து மோகவலை
வெள்ளம் பெருக்கா றெடுத்தோட
மைக்கா வியங்கண் தனிமனையை
வலிதின் அழைத்தான் மணந்திடவே. (14)

367. அந்த மனைவி யவ்வேலை
அவனை நோக்கிப் புகல்கின்றாள்
எந்தை மகிழ்கண் டிகைதரித்தா
யில்லை யிதனால் என்னுடன்நீ
புந்தி மகிழப் புல்குதற்குப்
பொருந்தா துரிமை யிலையென்னக்
கந்த மலராள் மொழிகேளாக்
கமலாக் கனும்பின் உரைக்கின்றான். (15)

368. எரியுந் தழற்பெய் உலைமுகத்தின்
இடமும் வலமுஞ் சுழன்றுபுடை
விரியுஞ் சுடர்கூர் முகம்பழுத்து
விளையும் பசும்பொ னிடைவெயில்கால்
சொரியும் பதும ராகாதி
துலங்கு நானா மணிகுயிற்றித்
திரியுஞ் சுடரே தழைபணிகள்
திப்பி யம்போல் வனைகின்றேன். (16)

---

366. பணிச் செப்பு-ஆபரணப் பெட்டி, இருத்தி-வை.
368. திப்பியம்போல்-சிறந்தனவாக.

369. அந்த மணிப்பூண் தன்னிலும்நின்
அக்க மணிக்கா திக்கமிக
வந்த தென்கொல் சொல்லென்றான்
மனைவி புகல்வாள் மாமோகப்
பந்த வினையால் யாதொருத்தன்
பரன்கண் டிகைபூண் டிடவில்லை
அந்தம் அறுபா தகனவனே
அதனுக் கையம் இல்லையம்மா. (17)

370. மற்ற தவனே டிருந்திடினும்
மாபா தகமாம் மலரணையில்
பற்றி யிவனைத் தழுவிலென்னும்
பகரொ ணாத கொடும்பாவம்
பெற்ற திதற்குப் புராணமதே
பிரமா ணமுமற் றையமில்லை
யுற்ற உனக்கெப் படியந்த
ஒளிர்பூ ணிடத்தில் உண்மையுண்டாம். (18)

371. முற்றும் உணர்ந்தோன் தனைவிளித்து
முன்னூற் சகல சாத்திரத்தில்
உற்ற பொருள்கேட் டிடுவோமென்
றுரைத்த மனைவி சொற்கேளாக்
கொற்றம் உறுமல் அலைத்தெழுதிண்
குவவுத் தடந்தோட் குரிசில்சொல்வான்
கற்ற புலவன் எவனெவனிக்
கதைநிச் சயித்தே யுரைத்தவனே. (19)

372. வரையொத் திறுகு மணித்தடந்தோள்
வலஞ்சேர் திகிரி திசையுருட்டித்
தரையத் தனையும் பொதுநீக்கித்
தனிவெண் குடைக்கீழ்ப் புரந்திடுநான்
புரையற் றுனது தனிமனையாய்ப்
போற்று கின்றேன் நீயெனக்குக்
கரையற் றுமிழ்தேன் பிலிற்றுதொடைக்
கணவ னுகக் கடவையென்றான். (20)

373. பின்னும் உரைப்பான் எழில்கனிந்து
பிதுங்கி யொழுகிப் பணைத்திறுகுந்
தென்னங் குரும்பைக் குவிமுலையாய் !
செப்பு வதற்கிங் கையமில்லை

என்னும் அவன்சொற் கேட்டுமகிழ்ந்
திகலவ் வாயே நல்லதென்று
கன்னல் மொழிச்சிற் றடிச்சகல
கலைவல் லபியுஞ் சம்மதித்தாள். (21)

374. அற்றை யிருள்போய் விடிந்தபின்னர்
அறிவு கூர எழுந்துவெயிற்
கற்றை யுமிழ்பூண் புணர்ந்திடுவோர்
கலியா ணங்கூ ரிருக்கையுற்றார்
பற்றை யகங்கை மனையையும்பூ
பால ரையுங்கண் ணுறவேண்டி
மற்றை யரசர் அநேகருடன்
மறையோர் யாரும் வந்தனரே. (22)

375. வந்த முதியோர் தமைநோக்கி
மணவா ளனைப்பார்த் துரைக்கின்றாள்
சிந்தை யுறுமன் னவரரசே!
செந்தீ வளர்ப்போர் எவரினுனக்(கு)
எந்த மறையோன் சம்மதஞ்சொல்
ஈசன் மணிமான் மியமும்,அதை
முந்தி யணிவோர் புண்ணியமும்
முற்றும் இவற்கேள் என்றுரைத்தாள். (23)

சித்திரச் சுவரில் இருந்த பெருமாள் எழுந்து பேசியது:

376. கெண்டை விழிசொற் கேட்டரசு
கெழும நகைத்துக் கலியாண
மண்ட பச்சித் திரச்சுவரின்
மரீஇய சேடன் மிசைப்பள்ளி
கொண்ட நெடுமால் எழுந்திருகை
கூப்பி அக்க மணிதரித்தால்
உண்டு பலனென் றுரைத்தனரேல்
உண்மை யாம்நீ யுரைத்ததென்றான். (24)

377. கொழுநன் உரைத்த மொழிகேட்டுக்
கொண்டப் படியே என்றிருகை
தொழுது கனக மணிச்சுவரில்
தோற்றி யிலங்கோ வியவுருவாம்

---

373. இகல் அவ்வாயே நல்லது-(வாதப்)போர்க்கு அந்த மொழியே நல்லது.
374. கலியாணங் கூர் இருக்கை.கலியாண மண்டபம், பற்றை-செங்காந்தள்.

மழைவண் ணனோக் குபுநறவு
வழிந்து பிலிற்றச் சிறைவரிவண்
டுழுத படலைப் பைந்துளவோய்!
உவந்து கேட்டி யென்றுரைத்தாள். (25)

378. பாவம் அகற்றும் அக்கமணி
பலமுண் டாமேல், தரிப்பவன்செய்
தீவி னையுநல் வினையாமேல்,
செய்ய அக்க மாமணியை
யாவன் ஒருவன் தரியாமல்
இருக்கின் றேன்புண் ணியமெல்லாம்
பாவ மாமேல், நானுரைத்த
படியே பொருளுண் டாயிடுமேல், (26)

379. வஞ்சம் இல்லா எனதுமொழி
வாய்மை யாகில், வேதாந்த
விஞ்சு பொருட்சம் மதமாகில்,
விருத்தம் இல்லா தொன்றுக்கும்
எஞ்சல் அறவுள் ளதுவாகி
யெங்கும் ஒத்த வெளியாகுங்
கஞ்ச மலர்க்கண் ணா!உனக்குக்
கருத்து மகிழ்சம் மதமாகில், (27)

380. கக்கு விடங்கூர் துளையெயிற்றுக்
கலுழிக் கடைவாய் மடையுடைத்து
நெக்கு பெருக்கா றெடுத்தொழுகி
நிருதர் உயிர்மாய்ந் திடவுயிர்த்தெண்
திக்கும் மருளா யிரம்பகுவாய்ச்
சேடன் மிசைநின் றெழுந்துவயி(று)
எக்கு பிறைவேய்ந் திடுசென்னி
யிறையா ணையினால் உரைத்தியென்றாள். (28)

381. வரிசிந் தியகண் கடைமதர்த்து
வள்ளைக் குழைதா வடிபொருது
திரிதந் திடநோக் குமடவாள்
செப்பு மொழிகேட் டோவியத்தில்
அரிசிந் தையுடன் வெருவியெழுந்
தறைகின் றனன்மட் டுமிழ்நறைமஞ்
சரிசங் கிலகு குவிமுலை! நீ
சாற்றல் உண்மை யுண்மையென்றான். (29)

378. 'யாவ னொருவன் அறியாமல்'—என்றும் பாடம்.
379. விருத்தம்-விரோதம்.
381. தாவடி-போர், பயணம்.

382. விண்டு மொழிவான் பின்னருமே
　　வேதாந் தத்திற் சம்மதமாம்
வண்டு பெடையோ டடைகிடந்து
　　மதுவுண் கடுக்கை புனைவள்ளல்
கண்டி விபுல மான்மியமக்
　　கடவுள் அறியும் மற்றவர்கள்
உண்டித் துணையென் றளவுபகுத்
　　துரைக்க அறியார் ஒண்ணுதலே! (30)

383. எந்த வருணத் துதித்தவனென்
　　இலகும் அக்க மணிதரித்துச்
சிந்தை மகிழும் அவனேயெண்
　　திக்கும் வழுத்த வரும்உரவோன்
பந்தம் அகற்றும் அவனேயொப்
　　பருநல் தவமும் உடையோனால்
நந்தல் இல்லா அவற்கண்டால்
　　நாளும் உள்ளம் நடுங்குவனால்; (31)

(வேறு)

384. முருந்தெ றிந்துவெண் ணிலவுமிழ் நித்தில
　　மூரலா யிழை! பல்கால்
வருந்தி யேயுரைத் தென்கொலக் கண்டிகை
　　மணிமகிழ்ந் தெல்லோரும்
பரிந்து வேய்ந்திடல் ஆகும்;ஐ யம்மிலை
　　பற்றுகென் றரிசொல்லித்
தெரிந்து முன்னர்போற் சித்திர வடிவதாய்ச்
　　செய்யகண் படைகொண்டான். (32)

385. அங்கண் உற்றவர் அனைவரும் இந்தநல்
　　அற்புதந் தனைநோக்கிப்
பொங்கு காதலால் அதிசயப் பட்டவட்
　　போற்றிநம் பினர்வாய்மை
மங்கை தன்கொழு நன்கம லாக்கனும்
　　மன்னனும் வியப்பெய்திப்
பங்கம் உற்றதன் சொல்லுளத் துன்னியே
　　பயந்துசிந் தனைசெய்தான்! (33)

---

382. கண்டி-ருத்ராக்ஷம்; விபுலம்-பெருமை.

283. உடையோனால், நடுங்குவனால்-ஆல்-ஆசை; நந்தல்-கெடுதல்.

385. அவட் போற்றி-அவளைப் போற்றி.

386. அந்த வேலைமற் றவனுயிர்ப் பாங்கியர்
அனைவரும் இவற்சூழ்ந்து
மந்த ராசல மணித்தடந் தோட்டுணை
மன்னா! நீ பொருக்கென்ன
இந்த ஆணுரு இகந்துமுன் உரைத்தசொல்
எண்ணிநற் கலைபூணல்
விந்தை கூர்சிறப் பெய்தியேந் திழையுரு
விரும்பியே புனைகென்றார். (34)

எழுசீர் விருத்தம்

387. அனையவர் பரிகா சத்துடன் குழுமி
யறைந்தபுன் மொழிதனைக் கேளா
மனனிடை வெள்கி மன்னவன் பாங்கி
வதனநோக் குபுமட வரல்! கேள்
புனையிழை கணவ னுகிலிப் பொழுது
பொருக்கென நானிவள் தனக்கு
மனைவியா யிருக்கின் றேனென உரைத்தான்
மற்றவள் கணவனு யினளே. (35)

அறுசீர் விருத்தம்

388. மல்லலந்தோட் கமலாக்க னைதெனவே
சிவனருளால் மனைவி யானன்
மெல்லியலப் பகன்முதலாய்க் **கமலாக்கி**
யென்றுபெயர் மேவி னள்தான்
ஒல்லையவள் கணவனென வுருவெடுத்தோன்
முரிதிரைநீர் உலகந் தன்னில்
எல்லையில்சீர்ச் **சகலகலா வல்லபனென்**
றேபெயரும் எய்தி னனல். (36)

389. வம்பிறுகப் பணைத்திடங்கொண் டடிகனத்துச்
செம்மாந்து மணிப்பூண் தாங்கு
கும்பமுலை மலர்க்குழற்சிற் றிடைக்கருமை
விழிநற்றீங் குதலைச் செவ்வாய்
விம்ப இத ழிவையுடன்கொள் கமலாக்கிக்
கொழுநன் அர விந்தப் பொற்றாள்
செம்பதுமக் கரமுழந்தாள் முன்முடிபூ
வுறவணங்கிச் செப்பு கின்றாள். (37)

---

388. ஐதெனவே-வியப்புறவே.

389. வம்பு-கச்சு; விம்பம்-கொவ்வை; 'விம்ப இதழ்க் கும்ப முலை' குறிஞ்சி-தல.

390. சகலவே தாந்தத்தின் உட்பொருளாய்ச்
சிவமயமாய்த் தரும மாகி
யகிலபா வங்களையும் போக்குகின்ற
கண்டிகைநீ அளித்தி யிந்தப்
புகரிலாத் தூயஅக்க மான்மியமற்
றெவராலும் புகலற் பாற்றோ
நிகரிலா தென்றவளப் பகலவனும்
அக்கமணி நிறையப் பூண்டாள். (38)

391. அன்னவர்மற் றிருவோரும் மனைவியுங்கேள்
வனுமாகி யகில போகம்
பொன்னகரில் உறைவோர்போல் அருந்தினரக்
கமலாக்கன் போற்று தந்தை
மன்னவனா கியபிரம நாதன்மலர்த்
தடங்கயல்வாய் வாளை பாய்ந்து
கன்னலுகு சாறுமள்ளர் மடையுடைத்து
வயல்பாய்புட் கரதே யத்தில், (39)

392. இனிதிருக்குஞ் சவுமியனைக் கண்ணுற்றென்
றுரைக்கின்றான் இறைவ! கேளென்
புனிதமகன் கமலாக்கன் பொம்மல்முலைக்
கன்னிகையாய்ப் போயி னான்;நின்
மனதுபுகழ் புதல்வியுமோ சகலகலா
வல்லவனாய் மருவப் பெற்றாள்
அனையரிரு வர்கள்செயலும் விபரிதமா
யின;இன்னும் அறைவல் கேட்டி. (40)

393. இன்னுமெனக் கொருபுதல்வன் விபுதனென
உண்டவனுக் கிறைவா உன்றன்
கன்னிசித்தி ராங்கினியாம் புதல்வியைநீ
தருதியென்று கட்டு ரைத்த
மன்னவனா கியபிரம நாதன்மொழி
சவுமியவான் மகிழ்ந்து கேளா
அன்னதுநன் றெனவிபுதற் களித்தனன்தன்
புதல்வியெனும் அணங்கை யம்மா. (41)

---

390. கண்டிகை-ருத்ராக்ஷம்; பகலவனும் அக்கமணி-(அக) இருள் நீக்கும் சூரியன் அனைய அக்கமணி.

394. மழவிடையிற் களிசிறப்ப வருவிபுதன்
இவளையவன் மறையின் வேட்டுத்
தொழுதகுகண் டிகைதரித்து மனைவியுடன்
மணவுருவந் துளங்கக் கூடி
விழவுசெறி கொடிமணிமா டந்திகழ்தன்
தேயத்தின் மேவி யங்கண்
குழல்மொழியோ டபரிமித கலவிநலந்
துய்த்துமகிழ் கொண்டி ருந்தான். (42)

395. சவுமியவா னும்பிரம நாதனுங்கண்
டிகைமணித்தார் தரித்துக் கொண்டு
சிவபுரா ணத்தினிசை தரித்திருமான்
மியங்களெலாந் தினமுஞ் சொல்லி
நவநவமா கியபோகம் அனைத்தையும்பன்
னாள்துய்த்து நாடும் அந்தத்(து)
உவகையுடன் தனயர்பவுத் திராதிகளு
டன்கயிலை யுற்று ளாரால். (43)

---

## அத்தியாயம் 15.

### ருத்ராக்ஷமான்மியம்-தொடர்ச்சி

#### கற்பக விருக்ஷத்தைப் பூனைக்குட்டி கொண்டுவந்த கதை

**சிந்து** தேசத்தில் **பூச்சக்கரம்** என்னும் நகரில் **சுப்பிரதீபன்** எனப் பெயரிய ஒரு மறையவர் இருந்தார். அவர் சிறந்த சிவபக்தர். கண்டிகை (ருத்ராக்ஷம்) பூண்டவர்க்கே அன்னம் அளிப்பார்; பிறருக்கு அன்னம் ஈயார். ஒருநாள் **ஏகாங்கன்** என்னும் துறவி (யோகீசர்) ஒருவர் சுப்பிரதீபருடைய இல்லத்துக்கு வந்து அன்னபிக்ஷை கேட்டார். துறவி ருத்ராக்ஷம் அணியாததால் அவர் அன்னம் பெறாது வெருட்டப் பட்டார். துறவி கோபித்து அந்நகர் அரசன் **சாலங்க**னிடம் சென்று நடந்த நிகழ்ச்சியைக் கூறினர். அரசன் சுப்பிரதீபரை வரவழைத்து 'யோகீசுரர் உமது இல்லத்துக்கு வந்து பிச்சை கேட்டால் நீர் அவருக்கு அன்னமிடாது என் வெருட்டிவிட்டீர்? இது பிராமண தருமமா?' என வினவினன். அதற்குச் சுப்பிரதீபர் 'அரச! எனக்கு ஒரு நியமம் உண்டு. ருத்ராக்ஷம் அணிந்தவர்க்குத்தான் நான் அன்னமிடுவேன். அவரையே சிவனென்று பூசிப்பேன். பிறர் யாராயினும் அன்னமிடேன். இவர் துறவியாயினும் மா நரகி என்பேன்' என்றார். இதைக் கேட்ட துறவி கோபங்கொண்டு 'ஏ! பிராமணு! ருத்ராக்ஷம் அணிவதால் என்ன லாபம்? இதோ என் யோக பலத்தால் நான் இப்போதே விண்ணுலகத்துக் கற்பகப் பூவை இங்கே கொணர்கின்றேன் பார்' எனக் கூறினர். இதைக்கேட்ட சுப்பிரதீபர் 'நீ அங்ஙனம் கொண்டுவந்தால் ருத்ராக்ஷ விசேடத்தால் என் வீட்டுப் பூனையைக் கொண்டு ஒரு கற்பக விருக்ஷத்தையே நான் வரவழைப்பேன்' என்றார். துறவி பின்னும் சினந்து 'நீ சொன்னபடி செய்தால் நான் உன்னை வணங்குவேன்; ருத்ராக்ஷம் அணிதலே மேலான தருமம் என உணர்வேன்' எனக் கூறி, உடனே யோகத்திருந்து கற்பகப் பூ ஒன்றைக் கொண்டுவந்து சேர்த்தார்.

---

394. மழவிடையில் வரு விபுதன்-'ஏறு போற் பீடு நடை'—திருக்குறள். 'விடையார் நடையொன்றுடையார்-தேவா-சம். (மீயச்சூர்)-II-62-5. 'விடை பொரு நடை'—கம்ப். ராமா-எழுச்சி-10.

கண்டவர்கள் அதிசயித்தார்கள். உடனே, சுப்பிரதீபர் தமது வீட்டில் ருத்ராக்ஷமணிக் திருந்த ஒரு பூனைக்குட்டியை வரவழைத்து 'நீ ருத்ராக்ஷ மகிமையால் விண்ணுலகம் சென்று கற்பக விருக்ஷம் ஒன்றைக் கொண்டு வருவாயாக' எனக் கூறி அப் பூனைக் குட்டியை ஆகாயத்தில் ஏறிந்தார். விண்ணுலகில் அப் பூனையைக் கண்ட இந்திரன் அதை எடுத்தணைத்து, உச்சிமோந்து, அதைத் தனது வெள்ளை யானையின்மேல் இருத்தி, தனது ரத்னாபரணங்களால் அலங்கரித்து உபசாரம் செய்தான். பின்பு, அதை ஒரு விமானத்தில் ஏற்றி, கற்பக விருக்ஷம் ஒன்றையும் அளித்துத், **தேவசித்தன்** என்னும் தேவ தூதனையும் உடன்கூட்டிச் சுப்பிரதீபரிடம் மண்ணுலகுக்கு அனுப்பி னான். விமானமும் அரசசபையை அணுகி நின்றது. பூனைக்குட்டி இறங்கிவந்து சுப்பிர தீபரை மூன்றுமுறை வலம்வந்து வணங்கிற்று. தேவசித்தனும் அப்படியே வலம்வந்து சுப்பிரதீபரைப் போற்றி, 'உங்கள் கருணையினால் பகையின்றி வாழ்கின்றேன்' எனத் தேவர்கோன் (இந்திரன்) தங்களிடம் சொல்லச் சொன்னான்' எனக்கூறி விண்ணுல குக்குச் சென்றான். கற்பக விருக்ஷமும் சுப்பிரதீபரை வலம்வந்து அங்ஙனே நின்றது.

## அத்தியாயம் 15.

### ருத்ராக்ஷ மான்மியம்-தொடர்ச்சி

#### கற்பக விருக்ஷத்தைப் பூனைக்குட்டி கொண்டு வந்த கதை

396. தவமனைத்தும் ஒருபுனித வடிவெடுத்த
சூதமுநி சாற்று கின்றான்
பவமகல வருமுநிவீர் அக்கமான்
மியமின்னும் பகர்வன் கேண்மின்
சிவணுமலர்ப் பொழில்கருவி முகில்படிந்து
கண்படுக்குஞ் **சிந்து**தேயம்
நவையகற்றி வளஞ் சுரக்கும் மணிமதில்சூழ்
**பூச்சக்ர நகரந்** தன்னில், (1)

397. **மருவியசுப் பிரதீபன்** எனுமறையோன்
அக்கமணி மாலை வேய்ந்து
பொருவிலுருத் திரனிடத்தில் மனமிருத்திச்
சிவனடிமை பூண்ட னன்பின்
வருபுதல்வ ரவர்சிறார் எல்லோரும்
அக்கமணி வனைந்து வாழ்வார்
இருநிலத்திப் படி மதிசுப்பிரதீப
னோர்நியமம் எய்தி நின்றான். (2)

398. கண்டிகைபூண் டவர்யாவர் எனினுமவர்க்
கன்னமிடக் கடவ னுள்ளங்
கொண்டவமுக் குடன்கூடிப் பாவிகளா
யிருப்போர்க்குக் கொடுப்ப தில்லை
திண்டிறலின் இருப்பனென வீற்றிருந்தான்
இவன்நியமந் தினமுங் கேளா
எண்டிசையெண் ணுந்துறவோன் **ஏகாங்கன்**
அந்நகர்பொள் ளெனவே வந்தான். (3)

396. கருவி-தொகுதி. 'கருவி மாமழை'—சிந்தா-2752. கண்படுக்கும்-துயிலும்.

399. அக்கமணி யணியாத அதிதியிவன்
என்றுளத்தில் அறிந்த வற்கு
மிக்கநிய மங்கூரச் சுப்பிரதீ
பன் பன்னாள் வீற்றிருந்தும்
தக்கபலி யுரைத்திலனா ராதனையுஞ்
செய்திலனத் தகைமை நோக்கிப்
பொக்கஅறி வுடனுரவோன் உடன்றுருத்தன்
னவன்வாயிற் புறத்து வந்தான். (4)

400. வந்ததுற வனைக்கண்டு மனையிலுளோர்
எல்லாரும் வழிப டாமற்
புந்தியினில் அறியார்போல் இருந்தார்சுப்
பிரதீபன் புறப்பட் டாங்கண்
வெந்திறல்கூர் சன்யாசி தனைநோக்கி
யெங்ஙனம்நீ மேவி னாய் சொல்
இந்தமனை தனிலுனக்குப் பிச்சையிலை
மற்றமனை யெய்து கென்றான். (5)

401. என்மனையிற் கண்டிகைபூண் டிடுவோர்க்கே
யன்னமற்றோர்க் கென்றும் இல்லை
தன்மவுரு வாயெவர்க்குந் தூய்மைபுரி
யக்கமணி தரித்தா யில்லை
வன்மைபுகல் உன்றனக்கிங் காகையாற்
பிச்சையிலை வாய்மை யென்ற
நன்மதிகூர் சுப்பிரதீ பன்மொழிகேட்
டுடன்றுரவோன் நவின்றான் மன்னோ. (6)

402. அவ்வளவிற் சுப்பிரதீ பன்புதல்வர்
யோகியுருத் தறைந்த சொற்கேட்(டு)
எவ்வமறக் கனன்றுதுற வோன்தண்டால்
அவற்றீண்டா தெற்றி விட்டார்
வெவ்வுரையாற் செயிர்த்துரவோன் அந்நகர்சா
லங்கனெனும் வேந்தன் பாற்சென்(று)
இவ்வகையெல் லாமுரைத்தான் அவ்விறைசா
லங்கனதை யியல்பாய்க் கேட்டான். (7)

---

399. பொக்கம்-பொய்; உடன்று உருத்து அன்னவன் வாயில்.

400. 'புந்தியினில் தியார் போல்' என்றும் பாடம்.

402. எவ்வம்-கபடம்.

403. கேட்டபின்னர் ஏவல்புரி யுழையோரை
விளித்துவிறற் கெழீஇய மானம்
ஈட்டியசுப் பிரதீபற் கொணர்மினென
விடுப்பவொல்லை யெய்தி யன்னோர்
வாட்டமில்சுப் பிரதீபன் தனைக்கொடுவந்
தெதிர்விடுப்ப மன்னன் நோக்கிக்
கோட்டமிலா யோகாங்கன் இவன்வாயில்
வரப்பிச்சை கொடுத்தி லாயால். (8)

404. சுப்பிரதீ பவ்வலியால் துறவோனைச்
சினந்தடித்துத் துரத்தி விட்டாய்
விப்பிரருக் கிதுதகுமோ வாவாநின்
புதல்வர்முநி வெகுண்டொல் லாத
வைப்பிரவ லன்னெனவே நிந்தைசெய்தா
ராமென்ற மன்ன வன்சொல்
துப்புரவி னற்கேளா நீதிகொள்சுப்
பிரதீபன் சொல்ல லுற்றான். (9)

405. தெண்டிரைநீர்ப் பரவைபடிந் தெழுமுகிலோட்
டியதடக்கைச் செல்வ! கேட்டி
கண்டிகைமா மணிமிலையா விடில்துறவாச்
சிரமமில கண்டி வேய்தல்
எண்டிசையொன் றாச்சிரமம் அனைத்தினுக்குந்
தலைமையன்றோ; என்றுந் தூய்மை
கொண்டுதிகழ் அக்கமணி வேய்ந்ததனால்
ஏழுகதி குறுகும் அம்மா. (10)

406. கேவலஞா னத்தினால் முத்தியிலை
யென்றுகிளக் கின்ற துண்மை
காவல்!மற் றெனக்கொருநல் நியமமுண்டவ்
வியல்கேண்மோ கண்டி வேய்ந்து
பாவமிகந் திடுவோற்கே அன்னமளிக்
கின்றனனப் பண்ண வன்தான்
யாவனெனி னும்மவனே யெளியேற்குத்
தினந்தொழப்பட் டிருக்கின் றோனால். (11)

---

404. வைப்பு இரவலன்-ஊர்ப் பிச்சைக்காரன், வைப்பு-ஊர்.

405. முகிலோட்டிய தடக்கை-(கொடையால்) மேகத்தை வென்ற பெருங் கை. "மலிழ தழீஇய கையாய்"—சிந்தா-2779. ஏழுகதி-ஏழு பிறப்பு, கதி-பிறப்பு, 7-(தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்).

407. அவனேயா ராதனைக்கும் உரியனவ
னே தரும அண்ணல் பின்னுஞ்
சிவனேயொப் பெனவிருப்போன் தானுமவ
னேயாகுஞ் சிந்தை கொள்ளாத்
தவநேயன் போற்கபடா சாரஞ்செய்
மற்றோர்க்குச் சாலி யன்னம்
நவநேயத் தளிப்பதிலை இவன்துறவோ
ஞகினுமா நரகி யம்மா! (12)

408. என்றுபுகல் சுப்பிரதீ பன்சொல்அற
வோன்கேளா இறையோன் முன்னங்
கன்றியொரு சொற்புகன்ருன் மறையோய்!கண்
டிகைதரித்தே கருமஞ் செய்கேன்
வென்றிகொள்கண் டிகைவிளங்கத் தரித்ததனல்
என்வருமிவ் வெல்லை ஏகி
நின்றுதுறக் கத்துறுகற் பகப்போது
கொணர்ந்தனனிந் நிலைமீள் கின்றேன் (13)

409. விழுத்தகுகண் டிகைதரித்த வரத்தால்நீ
யுந்துணரிவ் வேலை யாரும்
வழுத்த,அழைப் பித்தனையேல் நீசொன்ன
வாசகமும் வரமாம் என்று
முழுத்துறவோன் உரைத்தசொற் கேட்டுடன்மறையோன்
உரைக்கின்ருன் முன்னர் யோகில்
அழுத்தமுறு நீவானம் படர்ந்துகற்ப
கத்துணரை யழைப்பித் தாயேல், (14)

410. அக்கணமென் உறையுளக்கம் பூண்டிடுபூச்
சைக்குருளை யரசுண் டந்த
மிக்கபுனிற் றுக்குருளை விண்போய்புத்
தேளிருளம் வியந்து நோக்கித்
தக்க, அருச் சனைபுரியக் கண்டுமகிழ்ந்
தக்கமணி தகைமை தன்ருற்
கக்குநற வுமிழ்மலர்க்கற் பகத்தருவே
யழைப்பிக்குங் காண்டி யுண்மை. (15)

---

407. சாலி:நெல்; நவம்-நட்பு.

408. துறக்கம்-பொன்னுலகம்; போது-மலர்.

409. துணர்-பூங்கொத்து; இவ்வேலை-இப்பொழுது; வரம்-மேன்மை; படர்ந்து-சென்று.

410. உறையுள்-வீடு; பூச்சைக் குருளை-பூனைக்குட்டி; புனிற்றுக் குருளை-இளங்குட்டி.

411. என்னுமறை யோனுரைகேட் டறவோனுள்
திருகுசினம் எழுந்து பொங்கி
மின்னவிர்முந் நூன்மார்ப! நீயுரைத்த
திப்படியே மேவில் அப்போ(து)
உன்னரிய நீயுமென்னல் முன்னர்வணங்
கப்படுவாய் உண்மை அப்போ(து)
அன்னகண்டி கையவனை தல் தருமமனைத்
தினுநன்மை யாகும் அம்மா. (16)

412. என்றுரைத்தெதல் லோர்களுங்கண் ணுறவுடனேர்
நிறுத்திவல மிடையி ரண்டுந்
துன்றுவளி யுள்ளடக்கி யிந்தியஞ்செற்
றுட்டுளையாஞ் சுழுனை யூடு
சென்றிடுமூ லாதாரத் தீமதிமண்
டலத்தெழுப்பித் தெளிந்து சித்தம்
ஒன்றுபட நின்றுபிரா ணயாமம்
யோகினிற்செய் துயர்வான் உற்றான். (17)

413 பின்னர்துறக் கத்தடைந்து கற்பகநன்
மலர்கொணர்ந்து பீடு ருவேல்
மன்னனவை வந்திந்த மலர்நல்கி
னன்;சுடர்செய் வடிவேல் அண்ணல்
முன்னரவை யிருந்துள்ளோர் யாவருங்கண்
டதிசயித்தார் முந்நூல் மார்பன்
இன்னசெயல் கண்டுதன்மைந் தனைப்பூச்சைக்
குருளைகொண்டிங் கெய்து கென்றான்; (18)

414. தீங்கனியின் அமுதொழுகு மழலைமொழிக்
கிண்கிணிக்காற் சிறுவன் இல்லின்
பாங்கரடைந் தப்பூச்சைக் குருளைகொணர்ந்
தவைநடுவண் பரிந்து வைத்தான்
ஆங்கதனைச் சுப்பிரதீ பன்மலர்க்கை
யெடுத்தரச அறைவல் கேட்டி
ஓங்கும்அக்க மான்மியத்தாற் கற்பகங்கொண்
டிக்குருளை யொல்லை மீளும், (19)

---

411. உன்னரிய-உன்ன அரிய, நினைத்தற்கு அரிய.
412. இடை-இடப்பக்கம். 'எங்கள் பெம்மான் இடையாளை'—அபிரா. அந். 84.
413. பீடுறு-பீடு உற்று; பெருமை பெற்று...நல்கினன்.

415. என்றுரைத்துச் செங்கையினுன் ஆகாயத்
தெறிந்த னனவ் வெல்லை வானில்
நின்றுமவிர் ஒளிமணிவி மானமடைந்
ததுவதன்மேல் நேடி யேறி
வென்றிவெரு குக்குருளை கதுமெனப்புத்
தேளுலகம் எய்த அப்போ(து)
ஒன்றுமிடல் கெழுகுலிசப் படையோன்வெள்
வாரணத்தின் ஒல்லை யுற்றான். (20)

416. இடியுள்நடுக் குற,வயிரக் கொடுகாற்று
வலிமன்னு மிகலித் தோற்று
கடிதுபுறங் கொடுப்ப,நடந் தசுரர்நிசி
சரரணிகள் கலங்கி யோடக்
குடவளைவாய் நரலவிரு திரலைகுறித்
திடமுரசு குடமு ழாப்பொன்
துடியதிர வருமூரித் தானையுடன்
அமரேசன் தொழுது சென்றான். (21)

417. இலகுமணி வச்சிரக்கிம் புரிக்கோட்டுத்
தவள இபத் தெருத்தம் நீங்கி
யலகில்விருப் புடன்வெருகுக் குருளையரு
களைந்துபணிந் தம்பொன் மானத்(து)
உலகுபுகழ் புனிற்றிளம்பூச் சைக்குருளை
வந்ததைவெள் உவாவில் ஏற்றிப்
பலகருத்தால் அதன்வரவு குறித்ததனுச்
சியைமோந்து பரிந்து பின்னும், (22)

418. விழியிணையொற் றுபுதனது மணிக்கலனுல்
அலங்கரித்து விரும்பித் தண்டா
வழிபடலொப் பறப்புரிந்து கற்பகப்பூந்
தருவளித்து மகிழ்ந்து நோக்கி
கழிபெருங்கா தற்பெருக்கா றெடுப்ப,அத
னுக்கறைவான் கதுமெ னச்சென்(று)
ஒழிவறுசீர் சுப்பிரதீ பன்புடைசென்
றிருக்கவென உரைத்தான் மன்னே. (23)

---

415. ஏல்லை-பொழுது; வெருகு-பூனை; மிடல்-வலிமை.

416. காற்று வலி மன்-காற்றுகிய வலிய அரசன்; வளை-சங்கு; நரல-ஒலிக்க; இரலை-ஊதுகொம்பு; மூரி-வலிமை.

417. தவள இபம்-வெள்ளை யானை (ஐராவதம்); எருத்தம்-கழுத்து; மானம்-விமானம்; வெள் உவா-வெள்ளை யானை.

419. அரும்புமுறுக் கவிழ்ந்துமிழ்செந் தேனருவி
　　கொழிப்பமுரு கறாத தோட்டுச்
சுரும்புபெடை யுடன்முரலத் தழைகுழைக்குங்
　　கற்பகப்பூந் துருமத் தோடு
விரும்புதுறக் கத்துமகிழ் **தேவசித்தன்**
　　தனைக்கூட்டி விமான மீது
திரும்ப வெருகுப்பறழேற் றுபுஇறைஞ்சி
　　அனுப்பிநின்றான் தேவர் கோமான். (24)

420. மின்னகுவச் சிரப்படையோன் அனுப்பவிமா
　　னத்துவரும் வெருகு பார்ப்புப்
பொன்னுலகத் தினுங்கற்ப தாருவுடன்
　　அலங்காரம் புனைந்து பொள்ளென்(று)
இந்நகர்மா னத்திழிந்து மறையோனை
　　மூவலஞ்செய் திறைஞ்சிற் றக்கண்
பின்னர்வரு தேவசித்தன் அன்னதுசெய்
　　திந்திரன்சொற் பேசி னானால். (25)

421. நிற்கருணை யால்நினைவுள் அடுத்துறக்கப்
　　பகைதுறந்து நிற்கின் றேனென்(று)
ஒற்கமிலா துரைத்தனனிந் திரனெனுநன்
　　மொழிமுகம னோடுங் கூறி
எற்கதிர்போ லிருள்துரக்குஞ் சுப்பிரதீ
　　பனைவழிபட் டேவச் சென்றான்
கற்பகமுஞ் சுப்பிரதீ பனைவலஞ்செய்
　　தயல்நின்று கதித்த தம்மா. (26)

---

419. துருமம்-மரம்; தேவசித்தன்-இந்திரன் அனுப்பின ஒரு தேவன்; பறழ்-குட்டி.

420. பார்ப்பு-குட்டி.

421. ஒற்கம்-குறைவு, தளர்ச்சி; எல்-ஒளி. சுப்பிரதீபனை வழிபட்டு **அவன் ஏவச் சென்றான்.**

# அத்தியாயம் 16.

## ருத்ராக்ஷ மான்மியம்-தொடர்ச்சி

### பூனை கற்பகவிருக்ஷம் கொண்டுவந்த கதைத்தொடர்ச்சி

*இந்த அதிசயத்தைக் கண்ட அரசன், சுப்பிரதீபரை வணங்கிப், பூனைக்குட்டியைப் பார்த்து-'நீ எவ்வாறு விண்ணுலகு அடைந்தாய்? உன்னைக்கண்ட இந்திரன் யாது செய்தான்? விவரமெல்லாங் கூறுக' எனக் கேட்டான். சுப்பிரதீபரும் அரசனுக்கு விவரங்களைக் கூறுக எனக் கட்டளையிட்டனர். உடனே பூனை கூறுகின்றது:—*

*முதலில் விமானம் ஒன்றில் நான் விண்ணுலகடைந்தேன். என்னைக்கண்ட இந்திரன் வெள்ளையானையை விட்டு இறங்கி என்னை ஆபரணங்களால் அலங்கரித்தான். கற்பகவிருக்ஷம் ஒன்றையும் ஒரு தேவ தூதனையும் என்னோடு அனுப்பினான். அங்ஙனம் அனுப்பும்போது அயிராணி (இந்திரன் மனைவி) இந்திரனை நோக்கிப் 'பூனை பூசிக்கத் தக்கதா! என் இதற்கு இவ்வளவு உபசாரம் செய்கின்றீர்கள்'-என வினவ, இந்திரன் சொன்னதாவது :—*

### சாமித்திரன் கதை

*இந்தப் பூனை புனிதமான கண்டிகையை அணிந்துள்ளது; கண்டிகையின் பெருமையை உரைக்கின்றேன்; இந்த நிகழ்ச்சியைக் கேள் :—ஒருமுறை, இயமன் சிவபெருமானை வணங்கி 'சம்புவே! பாபிகளைத் தண்டிக்க என்னை நியமித்துள்ளாய். இன்று என் தூதர்களைப் புடைத்து இந்தப் பாவியை உனது கணங்கள் கயிலைக்குக் கொண்டு வந்துள்ளார்கள்'-என முறையிட்டான். அப்போது அங்கிருந்த பைரவர்-'பாபி என்றாயே! இவன் ஒரு புண்ணியமும் செய்யவில்லையா, உண்மையைக் கூறுக'-என்றார். இயமன் உத்தரவின்படி அங்கிருந்த சித்திரகுத்தன் அந்தப் பாவியின் கணக்கைப் பார்த்து இவன் பெயர்* **சாமித்திரன்.** *இவன் தாய் கற்பிழந்தாள். சோரக் கணவன் இட்ட மருந்தால் இறந்தான். இவன் காமம், களவு முதலிய பாதகங்களைச் செய்து தந்தையையும் கொன்றான். ஒரு புண்ணியச் செயலும் இவன் செய்யவில்லை'-என்றான். இதைக் கேட்ட பைரவர் "* **சக்ரவாகு** *என்னும் அரசனது மகள்* **சர்வாங்க சுந்தரி** *குளிக்கச் சென்றவள் ஒரு கொடி மல்லிகைச் செடியில் கண்டியும் (ருத்ராக்ஷமும்) முத்தும் கோத்துள்ள தன் மாலையைத் தொங்கவிட்டுப் பொய்கையிற் குளிக்கும்போது ஒரு காகம் அந்த மாலையை கௌவிப் பறந்தபோது மாலை நழுவி இடுகாட்டில் இவனது [பிண உடலின்] சிரத்தின் மேல் விழுந்தது. இயமனே! அந்த புண்ணியத்தால் இவன் கயிலைக்கு வரும பேறு பெற்றான். ருத்ராக்ஷத்தின் பெருமையைச் சிவனே அறிவான்"-என்றார். அப்போது நந்தியம்பெருமான்—'ஒருவன் இறந்த பின்னும் புண்ணியம் கைகூடும் என்பதற்கு இந்நிகழ்ச்சி பிரமாணம் ஆகின்றது. இதனால் தான் ஒருவன் இறந்தபின்பு அவனது எலும்பைக் கங்கையில் இடுவது' என்றார். இதைக்கேட்ட இயமனும் சித்திர குத்தனும் கண்டிகையின் மான்மியத்தை அறிந்து வணங்கிச் சென்றார்கள். அங்ஙனம் சென்றவர்களைச் சிவபிரான் மீள அழைத்துச் சொல்லுகிறார் :—*

*"யாவராயினும் அக்கமணி அணிந்தவரே எமது அடியார். அவரிருக்கும் திக்கை நோக்கி வணங்கி நெடுந்தூரம் விலகிச் செல்லுக. உன் தூதருக்கும் இதை நன்கு உணர்த்துக. திருநீறு-கண்டிகை அணிந்தவர்கள் ஞானிகள்; எமக்கு மிக வேண்டியவர்கள். அவர்கள் மீது உனக்கு அதிகாரம் இல்லை. இது உண்மை, உண்மை"—என உரைத்தார். இதைக்கேட்டு அவர்கள் வணங்கிச் சென்றார்கள்.*

*இந் நிகழ்ச்சியை அறிந்ததுமுதல் கண்டி யணிந்தவர்களைக் கண்டால் எனக்கு மிகப் பயம். அதனால் தான் இந்தப் பூனைக்கு பூசை செய்தேன்."—என இந்திரன் சொன்னதைக் கேட்டு இந்திராணி என்னை எடுத்து உச்சிமோந்து கண்ணில் ஒற்றிக் கொண்டு வழிவிட்டாள்.—என இங்ஙனம் பூனை தான் விண்ணுலகுக்குச் சென்று வந்த வரலாற்றைக் கூற அரசன் மிக பக்தி பூண்டு கூறுகின்றான் :—*

## அத்தியாயம் 16.

### ருத்ராக்ஷ மான்மியம்-தொடர்ச்சி

#### பூனை கற்பக விருக்ஷம் கொண்டுவந்த கதைத் தொடர்ச்சி

422. **க**னைகடற்பார் பொதுநீக்கித் தனிபுரக்குஞ்
செங்கோலான் கதுமெ னக்கண்
டினையஅதி சயமெனப்போற் றுபுவெழுந்து
பத்தியுடன் எழுதாக் கேள்வி
முனைவனைமும் முறைவணங்கிப் பயத்தொடுபூச்
சைக்குருனை முகம்பார்த் துள்ளம்
நினைவொடுகேட் கின்றனனெப் படிபுத்தேள்
உலகின்மிசை நீய டைந்தாய், (1)

423. **வி**ண்ணரசே தியற்றினன்எவ் வுரைபகர்ந்தான்
பகர்தியென்ற வேந்தன் சொற்கேட்(டு)
அண்ணலெனுஞ் சுப்பிரதீ பன்கடுக்கை
யீர்ஞ்சடையோன் அடிகள் போற்றிக்
கண்ணுதல்வா னவனருளால் மார்ச்சாரக்
குருளாய்!நீ கதுமென் றேபெற்(று)
உண்ணெகிழா தரவரசற் குத்தரங்கள்
உரைத்தியென வுரைக்கு மேல்வை, (2)

424. **பொ**றியுடல்வள் ளுகிர்ப்பூசைக் குருளையெழுந்
திருகரங்கூப் புபுநின் றேத்தி
யறிவொடுரைத் ததுசுடர்மா னத்தேறிப்
பொன்னுலகத் தடைந்தேன் என்னை
வெறிமலர்த்தார் இந்திரன்கண் டிபமிழிந்து
தழீஇக்கொ டுச்சி விரும்பி மோந்தே
எறிமதமால் வரையெருத்தத் திருத்துபுநற்
கலனணியெற் கெடுத்த ணிந்தான், (3)

425. **வி**ண்ணுலகத் திவ்வகையெ லாமுணர்ந்தா
கண்டலன்தேன் விசிறுஞ் செவ்வித்
தண்ணறுங்கற் பகமலர்ப்பைந் தருவையுமோர்
தேவையுமென் றன்பாற் கூட்டிப்
பண்ணவரெல் லாம்வியப்பப் பந்தியிற்பூ
சித்தனுப்பிப் பரிந்தான் அங்கண்
நண்ணுமமை யத்துமக வானையயி
ராணிகண்டு நவிற்று கின்றாள், (4)

---

422. எழுதாக் கேள்வி முனைவன்-மறை முதல்வன் (சுப்பிரதீபன்)
423. மார்ச்சாரம்-பூனை; உள் நெகிழ் ஆதரவு அரசற்கு-உள்ளம் நெகிழ்ந்த அன்புடைய அரசனுக்கு.
424. மானம்-விமானம்; இபம்-யானை; மதமால்வரை-யானை. நனி-மிக.
425. ஆகண்டலன்-இந்திரன்; மகவான்-இந்திரன்; அயிராணி-இந்திரன் மனைவி,

426. **பு**த்தேளிர் பெருமானிப் புனிற்றிளம்பூ
    சைக்குருளை பூச னைக்குச்
சத்தோமற் றிதுவெத்தே யத்தனுவ
    துக்காவந் ததுசொல் லென்று
முத்தாரந் துயல்வருபூண் முகிண்முலையாள்
    சொற்கேட்டு முகிலி னூர்தி
செய்த்தார்பைங் குழற்குரைப்பன் இப்பூசை
    மான்மியந்தான் நிகழ்த்தற் பாற்றோ? (5)

427. **த**ருமமாங் கண்டிகைவேய்ந் ததுசகல
    சுரராலுந் தரையோ ராலும்
பொருவிலருச் சனைபுரியப் படுமஃது,
    யாவையெனப் புனித அக்கங்
கருதிவனை கின்றனமற் றவையுயர்ந்த
    உண்மையிது காதன் மாதே!
பெருமையக்க மான்மியநீ யறிகிலையோ
    வுரைக்கின்றேன் பெட்பின் கேட்டி. (6)

**சாமித்திரன் கதை**

428. **ப**னைவகிர்கூன் முகப்பிணர்க் கோட் டிந்திரநீ
    லக்குளப்புப் பரூஉக்காற் செங்கட்
கனைகுரற்போர்க் கருமகிடப் பகடுதைத்து
    வருஞ்செங்கோற் கடவுள் தூதர்
அனைவரொடும் அரனகர்சென் றற்போய்ச்சங்
    கரற்பணிந்தே யங்கை கூப்பி
நினைவொடுநின் றனனெங்கோன் நீவரலென்
    னெனக்காலன் நிகழ்த்து கின்றான். (7)

429. **வா**ழிசம்பு வே!தேவ தேவே!பத்
    தரைக்காக்கும் வள்ள லே!யிப்
பாழிவிசு வம்புரக்கும் ஈசனே!
    யடியேற்கிப் பதமுற் காலத்(து)
ஊழிநெடு நாட்புரந்தாய் நின்னடியார்ப்
    பரவுகின்றேன் ஓவில் தோற்ற
ஆழிதனக் குப் புணையாம் நிற்கருதிப்
    பாவியரை யடுகின் றேனல். (8)

---

426. துயல்வரு-அசையும்; முகிலின் ஊர்தி-இந்திரன்.
427. யாவையென-எவையாயினும்; வனைகின்றன-வனைந்தவை.
428. பனை வகிர்ந்தது போன்ற; இந்திர நீலக் குளம்பு-கரிய குளம்பு..."எரிகட் பணைத்த பட ரெருமைப் பகட்டின் மிசை யமனேறவே"—**தக்கயாக. 463.**
429. பாழி-பெருமை; விசுவம்-அகிலம்; புரந்தாய்-கொடுத்தாய்; புரவு-கொடை. 'புரவலர் புரத்தலும் இரவலர் இரத்தலும்'—**திருவாரூர்-நான்மணி. 9.**
ஓவில் தோற்ற ஆழி-முடிவிலாத பிறவிக்கடல்.

430. **வேந்தேயோ** வறத்தருமா தருமமிரண்
டையும் வகுத்த விதிவ ழாமல்
ஆய்ந்தேகூர் சுகதுக்கம் அவ்வகைக்கு
நல்கிவிண்ணு மண்ணு மாக
ஈந்தேதென் திசை புரப்பான் எளியேனை
யிருத்தினைமற் றெனது தூதர்
காய்ந்தேயிக் கொடும்பாவி தனைநரகத்
தடுகின்ற காலை யம்மா, (9)

431. எந்தாய்நின் தூதர்கண்டு திப்பியமா
னத்திவனை யேற்றிச் செய்ய
கொந்தார்பைந் தொடைமணிப்பூண் குறைகாட்டா
தலங்கரித்துக் கொண்டென் தூதர்
நொந்தோடப் புடைத்துமணிக் கயிலாயங்
கொடுவந்தார் நுவலற் பாற்றோ
அந்தோஎன் றுண்ணடுங்கிக் கூற்றுரைக்கும்
போதுபெம்மான் அவையின் முன்னர், (10)

432. **கஞ்சுகனேக்** கழுத்தமுடன் உரைக்கின்றான்
மணிச்செங்கோற் கடவுள்! கேட்டி
யெஞ்சுமிவற் கிப்பவத்தில் நற்றருமம்
ஒன்றேனும் இலையோ பெம்மான்
அஞ்சலெனுஞ் சந்நிதிமுன் வாய்மைபெற
வுரைத்தியென அந்த கன்கேட்(டு)
இன்சொலுடன் அயலிருக்குஞ் **சித்திரகுத்**
**தனைக்**கண்ணால் இயம்பு கென்றான். (11)

433. சித்திரகுத் தன்மகிழ்ந்து தேவைமுறை
யேபணிந்து செங்கை கூப்பி
முத்தலைவேற் கடவுள்வயி ரவதேவ!
தேவேச! மொழிவல் பூகக்
கொத்துவிரி பாளைமகிழ் **கலிங்கதே**
**யத்**தின்மலர்க் குவளை வாவி
நத்துலவு வீதி**வியாக் கிரபுரத்**தில்
மாபாவி நன்கு தீர்ந்தோன். (12)

---

432. கஞ்சுகன்-பைரவர்; ஏக்கழுத்தம்-தலையெடுப்பு, பெருமை; செங்கோற் கடவுள்-யமன்.

434. மல்லலந்தோட் பணைகெழுசா மித்திரனுற்
றனனன்னோன் மாதா கற்பின்
எல்லையிகந் தவள்சோரக் கொழுநனிடு
மருந்ததினல் இறந்தாள் ஈட்டுந்
தொல்லைநெடு நாட்டொடர்பா தகனுமிச்
சிறுவன்மகிழ் சோரத் தந்தை
யல்லலறப் புரந்திடவே வளர்ந்துசின்னாட்
கழிந்தபின் கட்டழகு பெற்றான். (13)

435. கழிபெருங்கா தற்கடன்மீ தூரவரும்
எவ்வனத்தாற் காம மேற்கொண்(டு)
ஒழிவறவே தோழருடன் திருடிநிதி
யற்றதனல் ஓர்நாள் தீய
பழிபடவே தந்தையைக்கொன் றனனிறைச்சி
தேறல்துய்த்துப் பாரிற் காவல்
இழிகுலத்தோர் களவினில்வீக் கிப்புறங்காட்
டினில்தடிய இறந்து ளோனல். (14)

436. ஐயர்இக் கொடும்பாவிக் குற்பவத்திற்
புண்ணியமோர் அணுவ தேனும்
மெய்யாக இல்லையிவன் நரகத்தில்
நான்குநாள் மெலிந்தென் தூதர்
கையாரப் புடைபட்டுக் கொண்டிருந்தான்
நின்தூதர் கனன்று சீறிப்
பொய்யாஎன் தூதரையே புடைத்திவற்கொண்
டிக்கயிலைப் பொருப்பிற் சென்றார். (15)

437. என்றேவந் தித்திருக்குஞ் சித்திரகுத்
தனைநோக்கி யிரங்கு ஞாளிக்
குன்றேறுந் தனிவடுகக் கடவுளுரைக்
கின்றனன்மற் குவவுத் திண்டோள்
துன்றுருஞ் சக்கிரவா குக்குரிசில்
தனையைமணிச் சுடர்வி ரிக்குங்
கன்றேறுந் துணைமலர்க்கைச் சருவாங்க
சுந்தரிபொய் கையின்பா லுற்றாள். (16)

---

434. சாமித்திரன்-பாவியின் பெயர்.

435. எவ்வனம்-இளமை. 'மூப்பினைக் கவர்ந்து எவ்வனந்தனை வழங்கிட' (நல். பாரத. யயாதி.100).

436. பொய்யா-பொய்யாத.

437. ஞாளி-நாய்; தனையை-மகள்; கன்று-கைவளை. 'கன்றணி கரம்' (சோளந். புரா).

438. மதியகடு புடையுரிஞ்சி நிழல்புரப்பத்
தழைகுழைத்து வானோர் உள்ளம்
அதிசயப்பட் டுணத்தேறல் அருண்மலர்ச்சந்
தனப்பரா ரையில்வெண் டோட்டுப்
பொதியவிழப் பெடையொடுபூம் பொறிவண்டு
குடைந்துமிழ்தண் புதல்நறாச்செல்
கதிமறந்துண் டுறங்குகொடி மல்லிகையிற்
கண்டிமுத்துக் கண்ணி சேர்த்தாள். (17)

439. தண்டரள மணிவரன்றிக் கொழித்தெறியுங்
கல்லோலத் தடங்குடைந்து
வண்டுபெடை யோடரற்ற இவள்படியு
மெல்கையெஃகின் வளைந்த கூர்வாய்த்
துண்டவொரு மணிவிழிக்கா கங்கண்டி
சேர்முத்துத் தொடையை வானிற்
கொண்டுசெல்போ தறவோன்சென் னியில்வீழ்ந்தோர்
கண்டிபுண்ணீர் குளித்த தம்மா. (18)

440. தென்றிசைவேந் தே!அந்த புண்ணியத்தி
னாற்கயிலை சேர்ந்தான் கண்டி
வென்றிமணி மான்மியமென் னாலுரைக்க
அரிதடியார் வினைகள் தீர்க்குங்
கொன்றையந்தார்க் குழகனறி குவனோமற்
றறிகிலனோ கூற வொண்ணா(து)
என்றவமை யத்துநந்தி கேசனாரோ
மாஞ்சமுடன் இயம்புகின்றான். (19)

441. உத்தமமாங் கண்டியெவன் மேலிருந்த
தவனாதற்கண் உம்பர் கோன்தன்
பத்தனுறை கயிலையடை குவனென்ப
தற்புதமோ பண்டு வீந்தோர்
அத்திமயி ராதிபன்னாட் கழித்தபின்கங்
கையில்வீழி லவர்கள் ஐதின்
வித்தகன்வாழ் கயிலையடை குவரென்றால்
அவனடைதல் வியப்போ அம்மா! (20)

---

438. புதல்-அரும்பு; 'முல்லைப்புதல்'—(பதிற்று. 66-16). நறா-தேன்; கண்டி-ருத்ராக்ஷம்.

439. கல்லோலம்-அலை.

442. என்றுநந்தி கேசனுரைத் திடுங்கண்டி
மான்மியத்தின் இயல்பு தன்னைத்
தென்றிசைவேந் தனும்எழுது சித்திரகுத்
தனுங்கேட்டுத் திகைத்தே அஞ்சி
வென்றிநுதற் கட்பெருமான் தனைமுறைவந்
தனைபுரிந்து விடைகொண் டாணை
தன்றலைமேற் கொண்டுகண்டி மான்மியஞ்சிந்
தித்தவையத் தணந்து சென்றார். (21)

443. அங்கணகன் றிடுவோரை மீளவுஞ் செம்
பவளவிழு தனைய வேணி
கங்கைநதி யுவட்டெடுக்கும் புனலிடைசை
வலங்குமிழி கடுக்கும் வில்லத்
தொங்கலயன் வெண்டலைபாய் கல்லோலங்
கொழித்தெறிந்து சுழிக்க மன்றிற்
செங்கமல மலர்ச்சரண நடித்தருள்பெம்
மானழைத்துச் செப்புகின்றான். (22)

444 அக்கமணி யெவரேனும் அணியவரே
யெம்மடியார் அவரிருக்குந்
திக்கதனை யின்றுமுதல் நள்ளிடையி
னிற்சிறிது தெரிசித் தாலும்
நெக்குமுளத் தாற்பணிந்து நடுநடுங்கிப்
பயத்தொடுபோய் நெடுந்தூ ரத்திற்
பக்கமகன் றிடுதிநின்தூ தருக்குமவ
தானமாய்ப் பகர்தி யின்னும். (23)

445. மல்குமிருட் குறும்பெறியும் வெண்ணீறு
கண்டிமணி வனைந்தோர் ஞானம்
மல்குமெம துயிரினுக்கும் அதிகரவர்
ஆகையினால் அனைத்தோர் உள்ளம்
ஒல்கஅடைந் திடவுனக்கிங் கதிகாரம்
இல்லையிவை யுண்மை யுண்மை
யல்கியசிற் றறிவுடையோய்! என்றுபெம்மான்
உரைத்தமொழி யறிந்து கொண்டான். (24)

---

443. "பவளக் குழை தழைத்தா லொக்கும் பல்சடை"—அப்பர் IV-113.1. வில்லம்-வில்வம்.

444. அவதானம்-கவனம், ஞாபகம்.

445. அல்கும்-தங்கும்; நிலைத்துநிற்கும்; அல்கிய சிற்றறிவு-அல்கிய-அழிக்க "தொழுவார் வினை அல்குமே" (அப்பர்-V-23.10-நின்றியூர்)

446. உளநெகிழக் கசிந்துகசிந் துரைகுன்ற
மயிர்பொடிப்ப உருகிக் கண்ணீர்
அளவிலிமை யுடையிலிற்ற நறுமலர்தூய்
முறைவணங்கி யகன்று நொந்து
வளமலிதன் பதிகுறித்துப் புறப்பட்டான்
இவையனைத்தும் மகிழ்ந்து நென்னல்
இளமதிவேய்ந் திடுசடிலக் கடவுளவை
தனிற்புடைபோய் எய்தி நோக்கி.

447. கண்டியணி வோர்க்குறித்துத் தமியேற்குப்
பயமுளத்திற் கதித்த தாற்சிற்
றுண்டியெனி னும்பூசைக் கருச்சனையே
செயப்பட்ட துண்மை யென்றே
எண்டிசையும் புகழ்குலிசப் படையோன்சொற்
கேட்டுவியந் திந்தி ராணி
யண்டியெனை யெடுத்துச்சி மோந்துவிழி
யொற்றிமகிழ்ந் தனுப்பி னளால். (25)

(26)

448 என்றுவரி யுடற்பூசைக் குருவையுரைத்
திடுமொழிகேட் டிலகு செம்பொன்
வென்றிமணி முடிதரித்து வலஞ்சேர்பொற்
றிகிரிதிசை மீது ருட்டி
மன்றல்கமழ் பொலந்தார்க்கோ மகன்துறக்க
இயல்பெல்லாம் வாய்மை யென்று
நன்றிபெற இதனிடத்திற் பத்தியடைந்
தேயரசன் நவில லுற்றான், (27)

---

## அத்தியாயம் 17.

### ருத்ராக்ஷ மான்மியம்-தொடர்ச்சி

#### சுப்ரதீபர் கதைத்தொடர்ச்சி

*அரசன் சாலங்கன் சுப்ரதீபரை வணங்கி "யான் தரித்து உய்ய ருத்ராக்ஷ மணி கொடுத்தருளுக" எனப் பணிக்து நின்றான். துறவியும் அன்பொடு சுப்பிரதீபரை வணங்கிப் 'பெரியோய்! ருத்ராக்ஷத்தைப்புனைந்து நீயே ருத்திரனாய் விளங்கு கின்றாய்! யான் செய்த அபசாரத்தைப்பொறுத்தருளுக' என வேண்டினர். அப்போது சுப்பிரதீபர் அவர்கள் இருவர்க்கும் பின்வரும் சரித்திரத்தைக் கூறுகின்றார்.*

---

447. 'பூசைக்கு அருச்சனையே செயப்பட்டது'—சிலேடை-பூசை-பூனை; வழிபாடு.

## சாந்திகன் (ஏழைமறைச் சிறுவன்) கதை

மகர தேசத்தில் மகர நகரத்தில் சுருத்தன் என்னும் மறையோனுக்கு ஐவர் பிள்ளைகள் இருந்தனர். அந்த ஐவரிற் கடையவன் சாந்திகன். அவன் ஒரு நாள் தெருவில் விளையாடும்போது ஒரு ருத்ராக்ஷமணியைக்கண்டெடுத்து அதைத்தன் கழுத்திற் கட்டிக் கொண்டான். மிக்க ஏழைமை நிலையிலிருந்தும் சாந்திகன் ஒரு வீட்டுக்காவது சென்று இரந்து பிச்சை யெடுப்பதில்லை. தாய் தந்தையர் உடன் பிறந்தார் சொல்லைக் கேட்பது மில்லை. அவர்கள் இரந்து கொண்டு வரும் உணவை உண்டிருந்தான். வர வர வறுமையாற் சோறிலாத கஞ்சியைக் குடிக்க வேண்டி வந்தது. இவனது சோம்பலைக் கண்ட பெற்றோர் உற்றோர் இவனை வைது வந்தனர். அப்படியிருக்க, ஒரு நாள் கேரள தேசத்து அரசன் ஒருவன், வருடந்தோறும் பத்திரகாளிக்கு நரபலி கொடுப்பவன், நரபலிக்குத் தனது தேசத்தில் விலை கொடுத்து வாங்க ஒருவரும் கிடைக்காமையால், நிரம்பப் பொருள் கொடுத்துத் தனது ஏவலாளரை அனுப்ப அவர்கள் சாந்திகன் பிதாவைக் கண்டு தங்கள் கருத்தைத் தெரிவித்தார்கள். அவர்களிடம் நிரம்பப் பொருளைப் பெற்று சாந்திகனை அவன் பெற்றோரும் உடன் பி றந் தோ ரு ம் விற்றுவிட்டார்கள். அவர்கள் சாந்திகனைக் கேரள தேசத்துக்குக் கொண்டு சென்று புரோகிதனிடம் ஒப்புவித்தார்கள். நரபலியிடும் தினத்தன்று அரசன் கோயிலுக்கு வந்தான். சாந்திகனும் நீராட்டப் பெற்று, ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, சந்தனம் முதலிய வாசனைகள் பூசப்பட்டு காளியின் சந்நிதானத்துக்குப் புரோகிதனால் கொண்டு வரப்பட்டான். காளிக்குத் தூபதீப ஆராதனைகள் நடந்தன. அப்போது காளிதேவி சாந்திகன் கழுத்திற் கண்டியிருப்பதைக் கண்டாள்; மெய் நடுங்கினாள், இடியுண்ட அரவனெப் பயந்தாள், சாந்திகனை வணங்கினாள்; விரைவிற் சென்று புரோகிதனை வதைத்து அவன் ரத்தத்தைப் பருகினாள். பருகினபின், சாந்திகனை நோக்கிப் "பண்டிதனே! கலைஞனே! கண்டி வேய்ந்த தருமனே! உனக்கு இணையார்? நீயே உருத்திரமூர்த்தி! இது மெய். நீ தேவராலும் பூசிக்கப் படுவாய் ; உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்; தருகின்றேன்' என்றாள். சாந்திகனும் 'தாயே! அடியேன் பொருட்டு இனி நீ நரபலியை விட்டொழிதி, இந்த அரசன் விரும்பும் வரங்களைத் தந்தருளுதி' என்றான். காளி அங்ஙனமே வரங்களைக் கொடுத்து, அரசனை நோக்கி, 'மன்னா! கண்டிகை தரித்த இவனை வழிபடுவாயாக. இவன் சொல்லை ருத்ரமூர்த்தியின் சொல்லென மதிப்பாயாக. உன் மகளை இவனுக்குத் திருமணம் புரிதி; அதனால் உன் செல்வம் பெருகும்; இவனை பலிக்குக் கொடுக்க வந்தவனை இன்று கொன்றுவிட்டேன். அவன் மனைவியும் புதல்வரும் இறந்துபட்டனர். அவர்கள் வீடு தீக்கு இரையாய்விட்டது; சாந்திகனைப் பகைத்திருந்த தாய்தந்தையர் உடன்பிறந்தார் யாவரும் இருந்த பொருளைப் பறிகொடுத்துக், குட்டமாதிய பிணிவாய்ப்பட்டுப் பசிதாகத்தால் நித்தமும் துயருற்று ஊர் ஊராய் அலைகின்றனர். சாந்திகனை வழிபடுவோர் தேவராவர்'—எனக் கூறி மறைந்தாள். இதைக்கேட்ட அரசனும் அங்ஙனமே தன் மகளை சாந்திகனுக்கு மணம் புரிவித்து, அவனுக்கு மாளிகை ஒன்று கட்டுவித்துக் கொடுத்துச், சாந்திகனைச் சிவனாகப் பாவித்துப் போற்றிவந்தான். சாந்திகனும் ஒரு கண்டிக்கு இவ்வளவு பலன் கிடைத்ததைக் கண்டு, தனது முடி, கழுத்து, காது, புயமாகிய இடங்களில் ஆயிரத்துக்கு மேலான கண்டிகளை அணிந்து, ரதியும்-மன்மதனும் போலவும், சசியும்-இந்திரனும் போலவும் இன்பம் துய்த்தான். இவனது வாழ்வின் ஆக்கநிலையைக் கேட்ட இவன் தாய்தந்தையர் உடன்பிறந்தோர் இவனிடம் வந்தார்கள். சாந்திகன் அவர்களை அன்புடன் அழைத்து, இருக்க இடம் தந்து, நீராட்டியும், சந்தனாதிகள் பூசுவித்தும், ஆடையாபரணங்கள் தந்தும், அவர்களுக்கு ருத்ராக்ஷமாலை அணிவித்தான். ருத்ராக்ஷத்தின் மகிமையால் அவர்கள் நோய் நீங்கி, இன்பங்கள் பலவற்றையும் அனுபவித்து ஈற்றில் சாந்திகனோடும் பார்வதிபாகர் வீற்றிருக்கும் திருக்கயிலையிற் சேர்ந்தார்கள்.

கண்டியின் பெருமையை அறியாது புனைந்துகொண்ட ஒருவர்க்கு இவ்வாறு நற்பலன்கள் கிட்டின. கண்டி எவர் புனைந்தாலும் அவர்தம் பாவம் போம். அவர்கள் அடையும் நற்பலனை அரன், உமை, விநாயகர் இவர்கள் தவிர வேறு யார் அறிவார்? இது உண்மை.

## அத்தியாயம் 17.

### ருத்ராக்ஷ மான்மியம் தொடர்ச்சி

அறுசீர் விருத்தம்.

449. பின்னர் மழையோட் டியதடக்கைப்
பெருமான் புகழ்சா லங்கனெனும்
மன்னன் அருள்சுப் பிரதீப
மறையோன் அடித்தா மரைவணங்கி
நன்னர் அருளிற் றரிக்கமணி
நல்கு கென்றான் சரணடைந்த
என்னை யபரா தம்பொறுத்திட்
டினியா ளுதியென் றியம்பினனால். (1)

450. மறையோய்! நினது தரிசனத்தால்
வாய்மை புகன்ற வசனத்தால்
இறையோன் அடித்தா மரைவணங்கி
எய்துங் கதிபெற் றேனென்று
முறையே புரிசெங் கோல்நடத்து
முதல்வன் உரைத்த பகல்துறவோன்
குறையா விருப்பால் எழுந்து தொழு
குலத்தோன் தனைவந் தித்துரைப்பான். (2)

451. மிக்கோய் அக்க மணிதரித்த
மேன்மை யதனாற் பாவம்போய்
எக்கா லமுநீ யுருத்திரனு
யிருந்தாய் ஐயா! எளியேன்செய்
பொக்கார் கர்ம அபராதம்
பொறுத்தி யதுசெய் தவனிடத்துந்
தக்கார் வெகுளார் என்றேத்தித்
தாழ்ந்து நின்றார் இருவருமே. (3)

வேறு

சாந்திகன் கதை (சுப்பிரதீபன் சொல்வது)

452. அருமைகூர் சுப்தரதீ பன்தொழுவோர்
தமையிருமென் றறைந்து நீவிர்
ஒருகதைகேண் மின்மகர தேயத்தின்
மகரநகர் ஒன்றுண் டங்கண்

---

449. மழை யோட்டிய தடக்கை—"மழை தழீஇய கையாய்" சிந்தா 2779.

451. பொக்கு-குற்றம்.

வருமறையோன் சுகுந்தனருள் மதலையர்ஐ
வரிலிளைய மைந்தன் சாந்தி
தெருவிலெழு புழுதிவிளை யாடிபகர்
கண்டிகண்டந் தெரிந்து வேய்ந்தான். (4)

453. தந்தைமொழி யன்னைமொழி யுடன்பிறந்தார்
நால்வர்மொழி தட்டி வந்து
முந்தைவினை பிடர்பிடித்து நல்குரவால்
தள்ளவுமோர் முற்றந் தான்போய்ச்
சிந்தையுடன் இரவான்முன் னுடன்பிறந்தார்
நால்வரொடுந் தேடி வந்து
புந்திமகிழ் தந்தைபயந் தாளுடனுண்
டிருந்துபன்னாள் போக்கி னானல். (5)

454. பின்னவனா கியசாந்தி மனைவிடவோ
ரிடஞ்சற்றும் பெயர்ந் திடாமல்
மின்னவிர்செஞ் சடையீசன் கண்டிதரித்
தனைதந்தை வீணில் வாக்கும்
அன்னமகல் கஞ்சியகட் டழல்வருத்த
வேபருகி யங்க னுற்றான்
தன்னையுடன் பிறந்தோர்வெஞ் சினத்தாற்கோ
பிக்கஇவன் தளரும் எல்வை. (6)

455. காலையிளங் கதிர்நுழையா வனஞ்சூழ்கே
ளதேயங் காவல் பூண்டோன்
மாலைகிடந் தொளிர்குவவுத் திண்டோள்வை
வேற்குரிசில் வருடந் தோறும்
பாலையடு குதலைமொழிப் பத்திரகா
ளிக்குநர பலிகொ டுப்பான்
ஓலைவிடுத் தகத்தேயத் தெங்கும்விலைக்
குத்தேடி ஒருவற் காணான். (7)

456. அந்தஅமை யத்திலளப் பருநிதியந்
தனதேவ லாள ராக
வந்தவுழை யோரிடத்திற் கொடுத்தேநீர்
பலிக்குநல்ல மனித னைக்கொண்(டு)

---

453. மொழிகளைத் தட்டி; முற்றம்-வீட்டுவாயில்.

454. கண்டிதரித்தனை தந்தை-கண்டி தரித்து, அன்னை தந்தை. வாக்கும்-ஊற்றுகின்ற; அன்னம் அகல் கஞ்சி-சோறிலாத கஞ்சி. அகடு-வயிறு.

455. அகத் தேயத்து-உள்நாட்டில், சொந்த தேசத்தில்.

இந்த இடந் தனில்வருதிர் என்றேகே
ளதேயத் தேவி விட்டான்
புந்திமகிழ்ந் தவர்தேயம் எங்கணும்போய்
அம்மறையோன் புடையிற் சேர்ந்தார். (8)

457. தாங்கள்வந்த வரவுரைத்தா ரவர்மொழிகேட்
டிவர்களந்தத் தனங்கள் எல்லாம்
வாங்கிமகிழ் அன்னை தந்தை யுடன்பிறந்தார்
சாந்திகனை வலிய விற்றார்
ஆங்கவனும் அவர்களனு மதியாலின்
புற்றவரோ டடைந்து விஞ்சை
ஓங்கியகே ளதேயத் திறைநகரிற்
புரோகிதனி லுற்றிருந்தான். (9)

458. பின்னர்பலி யிடுமேல்வை சாந்திகன்மூழ்
கிக்கலன்கள் பெரிது பூண்டு
பொன்னவிர்மெய் யனைத்துநறுங் குறடுரிஞ்சு
தேய்வைவிதம் பூசி முந்நூல்
மின்னுபுரோ கிதன்மொழிகேட் டுவந்தவனோ
டரசன் முனைமேவி னன்பின்
மன்னனிவற் கொண்டுபலி யிடக்காளி
கோட்டத்தில் வதிந்தான் மன்னோ. (10)

459. கதழெரிவெவ் வடவையென மேல்நோக்கி
யுளருமயிர்க் கற்றைச் சென்னி
மதிநுதற்கட் கனகமணிக் குழைக்காது
பிறையெயிற்று வடங்கள் தாங்குந்
திதலையழ கொழுகுபொம்மல் இணைமுலைப்பத்
திரகாளி திருமுன் மேவி
மதுமழைப்பைந் தொடைதூப தீபமிறைச்
சிகள்கொடுத்து வழிபட் டன்னோன், (11)

460. அங்கண்மகிழ் சாந்திகனை வைத்துநின்றான்
காளிகண்டி யணிந்த வற்கண்
டெங்கணுமெய்ந் நடுநடுங்க யுருமுவிழ
அழுங்கும்அர வெனப்ப யந்து
செங்கமல மலரிதயத் தைதெனத்தெண்
டன்புரிந்து திருகு சீற்றம்
பொங்கியெழ விரைந்துபுரோ கிதனைவதைத்
தவனிரத்தம் போத வுண்டாள். (12)

---

457. புரோகிதனில்-புரோகிதன் இல் (வீட்டில்). இல்-வீடு. சாந்திகன்-சாந்தி.
458. ஏல்வை-பொழுது, நாள்; நறுங்குறடு-சந்தனம் முதலிய வாசனைக் கட்டைகள். முனை-முன்னர்; வதிந்தான்-தங்கினன்.
460. உருமு-இடி. ஐதென-வியப்பென.

461. சாந்திகனை நோக்குபு,பண் டிதா!திடஞ்சேர்
சித்தசிர சாத்ர கண்டி
வேய்ந்திடுநற் றருமநிற்கார் இணை! இலய
உருத்திரன்நீ! மெய்ம்மை வானோர்
பூந்துணரால் வழிபாடு செயப்படுவோய்!
வேண்டுவரம் புகறி நிற்கே
ஈந்திடுகே னெனத்,தமியேற் காகநர
பலிதவிர்தி யென்று ரைத்தான். (13)

462. பின்னுமுரைப் பான்,அரசன் வேண்டுவவெல்
லாமருடி பேணி யென்னப்
பொன்னவிர்துத் திக்கவின்வார்ந் தொழுகுபொம்மல்
முலைக்காளி பூசு ரன்றான்
சொன்னபடி வரங்கொடுத்து மன்னு!கண்
டிகைதரித்த தொழுகு லத்தோன்
தன்னைவழி பாடுபுரி யுருத்திரன்சொல்
லெனவிவன்சொல் தனைக்கொள் வாயே. (14)

463. நின்றனைய னைத்தழல்முன் விதிப்படிநல்
குதியவைகள் நீசெய் தாயேல்
வென்றிவிப வம்பெறுவை பலிக்கிவனை
நின்முன்னர் விட்டோன் தன்னைக்
கொன்றனன்யான் இக்கொடியன் மனைவிபுதல்
வியரிறந்தார் கூன்ர வெந்த(து)
அன்றியுமற் றிவன்றனையே பகைத்திருந்த
தந்தையொக்க லானோ ரெல்லாம், (15)

464. கள்ளர்தம்பாற் பறிகொடுத்துக் குட்டமுத
லானபிணி களுற்ற நொந்து
கொள்ளைகொள வருபசிதா கத்தால்நித்
தியந்துயர்மீக் கொண்டூண் இன்றித்
தள்ளவிழுந் துறையுளும்அற் றிடர்க்கடல்மூழ்
கித்தேயத் தலைகள் தோறும்
உள்ளநடுங் குறத்திரிகின் றாரிவனை
வழிபடுவோர் உம்பர் போல்வார். (16)

---

461. சிரசாத்ர - மேலான சாத்திரங்களை அறிந்தவனே! சிர சாத்ர கண்டி-மேலான சாத்திரங்களிற் கூறப்பட்ட கண்டி (ருத்ராக்ஷம்)-எனவும்கொள்ளலாம்.
நிற்கு ஆர் இணை-உனக்கு இணை ஆர்.
இலய உருத்திரன்-சங்கார ருத்ரமூர்த்தி.
463. தன்யள்-மகள். விபவம்-வாழ்வு, செல்வம். ஒக்கல்-சுற்றத்தார்.
464. தலை-இடம்.

465. என்றுரைத்த காளிமொழி யெறிதிகிரி
திசையுருட்டும் ஏந்தல் கேளா
நன்றெனவுட் கொண்டுமகிழ் தன்தனையை
தனைவிதியி னல்கிச் செம்பொன்
குன்றனைய மணிமாட கூடசிக
ரமுங்கட்டிக் கொடுத்துப் போற்றி
என்றுமிவ னைக்குழவி மதிச்சடிலன்
எனவழிபட் டிறைஞ்சி நின்றான். (17)

466. சாந்திகனும் ஒருகண்டி தரித்ததனால்
இப்பலன்வந் ததனைக் கண்டே
ஆய்ந்துமுடி களங்காது புயங்கையில்
ஆயிரத்தில் அதிகக் கண்டி
வேய்ந்திரதி மதனும்அயி ராணியும்இந்
திரனுமென மேன்மேல் இன்பம்
மாந்தினன்மற் றிவன்செயல்கேட் டன்னைதந்தை
யுடன்பிறந்தோர் வந்த டைந்தார். (18)

467. மறைவிதியின் செயல்பிழைத்து மெய்ம்முழுதும்
புண்ணளிய வந்தோர் தம்மைக்
குறைவறவே பொழிகருணை கொடுத்திடநோக்
குபுமகிழ்ந்து குரும ணிப்பொன்
உறையுள்கொடு போய்நறுஞ்சந் தனத்தைலம்
இடுவித்தே உதகம் ஆட்டி
யறுவைகொடுத் தக்கமணி மாலையினால்
அலங்கரிப்பித் தருளி னானால். (19)

468. அன்னவரும் அக்கமணி மான்மியத்தாற்
குட்டாதி யருநோய் விட்டுப்
பொன்னவிர்கூர் திப்பியமாம் பைங்கதிர்மா
மணிக்கலன்கள் புனைந்து நித்தம்
உன்னரிய பெரும்போகம் பலதுய்த்துச்
சாந்திகனொ டுவந்தே ஓங்கற்
கன்னியொரு பாகன்மகிழ் தன்னிகராம்
வளங்கெழுமாக் கயிலை சேர்ந்தார். (20)

---

467. உதகம்-நீர், அறுவை-ஆடை.

469. 'மாதவத்தோய்! கண்டிமரு ளாற்றரித்தோர்க்
இப்பலன்கள் வந்த தாலிப்
போதிறைவற் கணியாகி யிருமைநல்கு
கண்டியெவர் புனைகின் றூர்கள்
பாதகந்தீ ரன்னேர்கள் பலனையர
னுமையொற்றைப் பணையோன் அன்றி
'யிதெனவே யாரறியப் போகின்றூர்
உண்மையால் இயம்பி னேனல். (21)

---

## அத்தியாயம் 18.

### ருத்ராக்ஷ மான்மியம்-தொடர்ச்சி

இங்ஙனம் சுப்பிரதீபர் சொன்ன வரலாற்றைக் கேட்ட துறவி, தாமும் ருத்ராக்ஷம் அணிந்து, கர்மயோகத்தைவிட்டு, சிவயோகியாகிச் சிவகதி அடைந்தார். அரசனும் அன்றுமுதல் கண்டிபூண்டு, போகமெலாம் துய்த்துச் சிவகதி கூடினன். சுப்பிரதீபரும் சகல செல்வத்துடன் வாழ்ந்து உச்சயினி மாகாளேசருக்கு ஆபரணம் மாலைகள் தந்து, தேவதுந்துபி முழங்க, இந்திரன் கொடுத்தனுப்பின கற்பக விருக்ஷத்துடன் விண்ணுலகம் அடைந்து, அங்கே போகங்கள் துய்த்துப் பூவையுடன் சிவலோகஞ் சேர்ந்து சிவன் சேவடியடைந்தார்.

### விபூதி ஒன்று போதாதா? கண்டிகையும் ஏன் புனைதல்வேண்டும்?

சூத முனிவரை நோக்கி, முனிவர்கள் 'எந்தையே! விபூதி ஒன்றே சகல போகமும் தருமென்றூல் ஏன் ருத்ராக்ஷம் அணிதல்வேண்டும்? எங்கள் ஐயத்தைத் தீர்த்தருள வேண்டும்'—எனக்கேட்டனர். சூதமுனிவர் கூறுகின்றூர்:—திருநீறு வேர்வையாலும், நீராலும், பிறவற்றூலும் அழிந்துபோய்விடும். பூதங்கள், பிசாசுகள், பிரேதங்கள், பிதுருக்கள், அசுரர்கள், பாம்புகள், கள்வர்கள், புலி சிங்கமாகிய மிருகங்கள், பகைவர்கள் திருநீறு இலாத சமயத்தில் இடர் விளைப்பதற்குக் காரணமாகும். திருநீறும், கண்டிகையும், கழுத்து, காது, கைகளில் எப்போதும் தரிக்கத்தக்கன. கண்டிகைமணி நீரில் மூழ்கினும் அழியாது. அன்புடன் திருநீற்றையும் கண்டிகையையும் அணிபவர்களைப் பூத பிசாசுகள் அணுகா. ருத்ராக்ஷ மணிகளைப் பொன், வெள்ளி, செம்பு கம்பிகளிற் கோத்துக் காது, கழுத்து ஆகிய இடங்களில் தரித்தல்வேண்டும். ஒரு கண்டிகையை பூணூலில் அணியவேண்டும். திருநீற்றையும் கண்டிகையையும் தரித்தவன் பகைவர்களுக்கு அஞ்சமாட்டான். இதை விளக்க ஒரு கதை கூறுகிறேன்.

### சிந்துசேனன் கதை

சவிதிரு தேயத்தில் சூரியபுரம் என்னும் ஊரில் சிந்துசேனன் என்னும் அரசன் விந்தியதேசத்து காகளநகர்க்கு அரசனுன சிங்கனைச் செயித்து அவனைக் காட்டுக்கு ஓட்டினன். சிங்கன் திருமாலை வழிபட்டுப் பூசிக்க அவர் அவனுக்கு வெற்றிதரும் சக்ராயுதத்தைக் கொடுத்தார். சிங்கன் சிந்துசேனனேடு போர்செய்து சக்கரத்தை ஏவ, அது சிந்துசேனனைத் தவிர அவனுடைய படைகள் யாவற்றையும் அழித்தது. சிந்துசேனன் காட்டுக்குள் ஓடி, வசிட்டராதிய முனிவர்களைப் பணிந்து, நான் போரில் தோல்வியுற்று உங்களிடம் வந்துள்ளேன். யான் வெற்றிபெறக்கூடிய வழியைக் கூறுங்கள்' என வேண்டினன். அதற்கு முனிவர்கள், "நீயும் உன் சேனையும் திருநீறு கண்டிகை தரித்துப் போர்செய்தால் பகைவர்களை வெல்வீர்கள்; அவை யிலாமையால் உன் படை சக்ராயுதத்தால் அழிவுற்றது; நீ மாத்திரம் பிழைத்தாய்' என்றூர்கள், இதைக்கேட்ட அரசன், 'முனிவீர்! என்னை மாத்திரம் சக்கரப் படை ஏன் அழிக்கவில்லை;

---

469. மருள்-அறியாமை; ஒற்றைப்பணையோன்-ஒற்றைக்கொம்பன்-விநாயகர்.

சொல்லுங்கள்' என, முனிவர்கள் 'நீ கண்டிகை தரித்ததனால் பிழைத்தனை' என்றார்கள். அரசன் 'நான் போர் செய்தபோது முத்துமாலை மாத்திரந்தானே தரித்திருந்தேன். கண்டிகை புனைந்திருக்கவில்லையே' என்றான். முனிவர்கள் 'உன் முத்துமாலையைச் சோதித்துப்பார்' என்றார்கள். அங்ஙனமே பார்க்க அதில் ஒரு கண்டிகை மணி இருக்கக் கண்டார்கள். இம்மணி அந்த முத்துமாலையில் எப்படி வந்ததென முனிவர்கள் கேட்க, அரசன் 'நான் போருக்குப் புறப்பட்டபோது ஒரு வியாபாரி இம் முத்துமாலையை எனக்குக் காணிக்கையாக வைத்துப்போனான். நானும் மாலையை ஆராயாது அணிந்து சென்றேன்' என்றான். முனிவர்கள் வியந்து, 'நன்று! இம்மணிதான் உன் உயிரைப் புரந்தது; நீயும் உன் படைகளும் வெண்ணீற்றையும் கண்டிகையையும் தரித்துப் போர் செய்யின் வெற்றி உனக்கே' என்றார்கள். அரசனும் அவ்வாறே நீற்றையும் கண்டிகையையும் தானும் தன் படைகளும் அணிந்து போருக்குச் சென்று சிங்கனொடு பொருதான். அப்பொழுது சிங்கன் சக்கரத்தை ஏவினன். ஆர்த்துவந்த சக்கரம் சிந்துசேனனையும் அவன் படையையும் வலம்வந்து வணங்கிச் சிங்கனிடம் திரும்பிச் சேர்ந்தது. சிங்கன் போரில் தோல்வியுற்று ஓடிக், காட்டுள் நுழைந்த சிந்துசேனன் திருநீற்றின் பெருமையால் வெற்றியடைந்தான் என அறிந்து, வருணனை நோக்கித் தவஞ்செய்ய, வருணன் எதிர்தோன்ற, சிங்கன் 'அண்ணலே! நான் சிந்துசேனனுடன் போர் செய்யப்போகின்றேன்; அப்போது நீங்கள் மழை பெய்விக்கவேண்டும்' என வரங் கேட்டான். வருணனும் கேட்ட வரத்தைத் தந்து மறைந்துபோனான். சிங்கன் மறுநாள் சிந்துசேனனைத் திடீரெனப் போருக்கழைத்துப் போர்செய்ய, அச்சமயத்தில் சிங்கன் வருணனைத் தியானிக்க நல்ல மழை பெய்து இருதிறத்துச் சேனைகளும் மழையில் நனைந்தன. சிந்துசேனன் சேனைகள் அணிந்திருந்த திருநீறு மழைநீரில் அழிந்துபோயிற்று; திடீரெனப் போருக்கு வந்ததால் சிந்துசேனன் படைகளிற் சிலர் கண்டியணியாதிருந்தனர். அப்போது சிங்கன் சக்கரத்தை ஏவ, சக்கரம் சிந்துசேனன் சேனையில் கண்டிகை புனையாதார் யாவரையும் அழித்துச் சென்றது. சிந்துசேனன் உடனே வசிட்டாதிய முனிவர்களிடம் இதைத் கூற அவர்கள் "நீறு, கண்டிகை யார் தரித்திருந்தாலும் அவரை வச்ராயுதம், சூலம், மழு, வில், வாள் முதலிய படைகள் ஊறு செய்யா. இது உண்மை" என்றார்கள்.

## அத்தியாயம் 18.

### ருத்ராக்ஷ மான்மியம்-தொடர்ச்சி

அறுசீர் விருத்தம்

470. சீரெதிர் வியந்து சுப்ர
தீபன்வார்த் தையினைக் கேட்டு
வாரெதிர் பொருதி றுக்கும்
வனமுலை பாகன் பூணும்
ஏருறு கண்டி வேய்ந்தே
யெண்ணில்பா தகமி ரித்துப்
பாரினிற் றனது கன்மம்
பயிலியோ கந்த ணந்து. (1)

471. விரைவினிற் சிவயோ கத்தை
மேவிமால் முதலோர் போற்றும்
அரனனுக் கிரகத் தாலே
யருங்கதி யடைந்தான் வெற்றிப்

புரவலன் அந்நாள் தொட்டுப்
புனிதமாங் கண்டி வேய்ந்தே
மருவலர்ச் செயித்துப் பன்னாள்
வையகம் எலாம்பு ரந்து.,

472. இம்மையிற் போகம் எல்லாம்
எய்திமைந் தர்க ளிடத்திற்
செம்மைசேர் உலகி ருத்திச்
சிவகதி சேர்ந்தான் என்று
மும்மைதேர் முனிவீர்! வேத
முனிவனுஞ் சுப்ர தீபன்
மெய்ம்மைசேர் பயனுற் கண்டி
விதியுரைத் துவந்தான் மன்னோ. (3)

473. தனதுபொன் மணிமா டம்போய்த்
தனயரா தியபல் கேளிர்
அனையரோ டநேக போகம்
அருந்திமை விழிவேற் கொவ்வைக்
கனியிதழ் அரம்பை மார்தங்
கணத்தினில் அலங்கா ரஞ்சேர்
புனைநறு மலர்வி மானம்
பொற்புற ஏறிப் பின்னர். (4)

474. தேவதுந் துபிக றங்கத்
தேறல்வாய் முருகு யிர்க்கும்
பூவிறை மாரி பெய்யப்
புத்தேளிர் பேரின் பத்துள்
ஓவறத் துளைந்து தம்மை
யுணரிரு டிகள்தற் சூழத்
தாவிலிந் திரன்கொ டுத்த
தருவொடா பரணங் கொண்டு, (5)

(வேறு)

475. கருங்கயலலள் ளற்பழனக் கமலமலர்ப்
பொகுட்டேறிக் கண்ப டுக்கும்
மருங்குதிகழ் உச்சைனி மாகாளே
சன் றனக்கு மணிபூண் தாரும்
இருங்கதிபெற் றிடவுதவி யிப்பூசை
யுடன்சிவலோ கத்தின் எய்தி
யொருங்குசில நாட்கழிய ஓங்கொளியீ
சன்மலர்த்தா ளுற்றா னன்றே. (6)

**விபூதி ஒன்று போதாதா கண்டிகையும் ஏன் வேண்டும் என்பது**

**( வேறு )**

476. ஆற்ற ருந்தவக் கிழமைசால் சூதரை
        யளப்பரும் முனிவோர்கள்
போற்றி யெந்தைநீ பூதிகண் டிகைமணிப்
        பொருவின்மான் மியமெல்லாஞ்
சாற்றி யாண்டனை பூதிதா ரணத்தினாற்
        சகலபோ கமுமுண்டேல்
வேற்றொர் கண்டிகை யிலைவதே துக்கென
        வியப்புடை யேமேமால்; (7)

477. தொல்லை யம்பெரும் புராணமூ வாறின்மெய்த்
        துறைபடிந் ததன்பார
எல்லை யித்துணை யென்றள விடுகுவோய்!
        எந்தை! நிற் கிணையாரும்
இல்லை யெங்களைப் போல்பவர் கேட்குனர்
        இடங்களில் மறைப்புண்ட
சொல்லை யும்புகல் வார்களே;எம்முளந்
        தோற்றையந் தவிரென்றார். (8)

478. அனையர் சொற்றநன் மொழிதனைச் சூதன்கேட்
        டளவிலா விருப்பங்கூர்
நினைவு மிக்கபுன் மூரலோ டுரைப்பன்மால்
        நீக்கும்அந் தணிர்!கேண்மின்
வனையு நீறுநீ ரால்வெயர் வாற்பொழி
        மழையினால் முழுக்காலொப்
பனையி னல்வரு காற்செறி வால்துடை
        படுமெனப் பயமுண்டாம். (9)

479. பிறையெ யிற்றெறி சிந்துகட் பாரிடம்
        பேய்பிரே தஞ்சீற்றத்(து)
அறைகு றற்பிதுர் அசுரன்அம் மாசுணம்
        ஆறலை செயுங்கள்வர்
கறைவ ரிப்புலி முடங்குளை மருவலர்
        கனன்றுகண் டிகைநீறு
முறைத ரித்திடாக் காலநோக் குபுபகை
        முடித்திட வருவாரால். (10)

---

478. ஒப்பனை-அலங்காரம். காற் செறிவு-காற்றின்மிகுதி. துடைபடும்-அழிந்துபோம்.

479. பிதுர்-இறந்த பெற்றோர் முதலியோரின் உயிர்.

480. தருக்கு லங்களிற் பதனழி சருகுகள்
தமைநெறி படர்காலைச்
செருக்க தின்றிமுன் உதவுழிக் கொணர்ந்துணுந்
தினந்தெரிந் தணிலூண் போற்
பெருக்க வுண்டிட லன்றியோர் பகல்நுகர்
பின்னலஞ் சடையீர்!சீர்
இருக்கு நீறுகண் டிகைகளங் காதுகை
யென்றும்வேய்ந் திடலாமே. (11)

481. மூக்கண் எந்தைகண் டிகைமணி புனலிடை
மூழ்கினும் அழியாது
கக்கு வெம்பொறி சிதறுகட் பாரிடங்
களேபரங் கழுதண்டா
கொக்க ரித்திடும் அசுரர்கொல் லார்கள் கா
கோதரங் கடியாது
அக்க நீறுடன் ஆதரத் தொடுபல்கால்
அணிந்தவர் தமையம்மா. (12)

482. தீதெ றிந்திடு முனிவிர்!பொன் வெள்ளியாற்
செம்பினா லிடைசேர்த்துக்
காது கண்டமா தியதலந் தரிக்கவோர்
கண்டிமுப் புரிநூலின்
மீத ணிந்திட வேண்டும்நீ றக்கமே
மிலைந்தவன் பகைவர்க்கோர்
போதும் அஞ்சிடான் இதுநிமித் தங்கதை
புகல்வன் அன் பொடுகேண்மின். (13)

சிந்து சேனன் கதை.

483. கடுத்தெ றுங்கயற் கருவிழிக் கடைசியர்
கரவிர லிடைசேர்த்தி
யெடுத்தி டுங்குர வையின்முழக் கார்ப்பினால்
எழுந்துகள் நெடுவாளைத்
தடுத்த தெங்கினிற் குடக்கனி சிதறிவான்
தடவியிந் திரசாபந்
தொடுத்த தென்னவீழ் சிந்து தேயமார்
தூரிய புரமீதில். (14)

---

480. அணில் ஊண்-சிற்றளவினது. பின்னல், அம்-சடை.
481. களேபரம்-பிரேதம்; கழுது-பேய்; காகோதரம்-பாம்பு,
483. கடு-விஷம்; தெறுதல்-கொட்டுதல், சுடுதல்; கடுத்தெறும் விழி, கயல்விழி, கருவிழி:

484. சிந்து சேனனுங் கோமகன் விந்திய
 தேயமீ தினில்வாசக்
கொந்து லாமடற் பூகமார் காகளக்
 குலநகர் இறையாகி
வந்து போர்செய்சிங் காதிபற் செயித்துநீள்
 வனத்திலோட் டினன்; அன்னோன்
நொந்து பன்னெடு நாளிருந் தரிதனை
 நோக்கியே தவஞ்செய்தான். (15)

485. களங்க னிப்புறம் வெளுப்புற இருண்டமெய்க்
 கண்ணன்முன் வெளிப்பட்டுத்
துளங்கு சக்கரம் இவற்களித் தரசநின்
 துன்னலார் தமையட்டே
விளங்கும் இப்படை தொலைத்தபின் எமதிடம்
 மேவுமென் றுரைத்தேகே
உளங்க ளித்திட மறைந்தனன் இவன்திசை
 யுருட்டுசக் கரங்கொண்டான். (16)

486. திசைம ருட்டிருட் கரனெரீஇத் திகழ்படை
 சிந்துசே னனைக்காலின்
விசைகெ டத்தொடர்ந் துடன்வளைத் தெறிவளை
 விடுத்தன னதுபோரில்
இசைத ரித்திடு குரிசிலைத் தவிரவீ
 றிகற்பெரும் படையெல்லாம்
வசையி னிற்படத் தொலைத்திவன் மலர்க்கரம்
 மலர்ந்திருந் ததுமீள. (17)

487. மூக்கு றும்பெறிந் தைம்புலன் அடக்கிய
 முநிவர் !வெண் குடைநீழல்
திக்க டங்கலும் புரந்தருள் குரிசிலாஞ்
 சிந்துசே னனுநொந்து
தொக்க சேனைவிட் டடவியிற் புகுந்துபின்
 தொல்லைநூல் துறைதேர்ந்த
மிக்க மாதவ வசிட்டனுச் சிரமமு
 மேவியவ் விடமீதில். (18)

---

486. வளை-சக்கரம்:

488. கண்டி வேய்ந்திடு வசிட்டரைக் கோதமர்
 கவுசிகர் தமைவீணை
கொண்ட நாரதர் முதலிய முநிவரர்
 குழுக்களைப் பணிந்தேத்தித்
தொண்டி ளேடுரைக் கின்றனன் முநிவிர்!யான்
 தொல்லுல கிறைதன்னால்
மண்டு போரினால் உடைந்துநுஞ் சரணென
 வந்தடைந் தனன்மாதோ. (19)

489. செற்ற லார்தமை யெத்திறத் தாலியான்
 செயிப்பனத் திறமீதென்(று)
உற்ற தாகவே சொல்குதிர் எனஅவன்
 உறுதிசேர்ந் திடும்வண்ணங்
கற்றை யஞ்சடை முநிவரர் தவமெனக்
 கருத்துறு திடஞ்சொல்வார்
பற்று சேனையும் நீயும்நன் னீற்றுடன்
 பலித்தகண் டிகைவேய்ந்தால், (20)

490. திருகு வெஞ்சினப் பகைஞரைச் சமரிடைச்
 செயித்துமெய்த் திறல்வாகை
பெருகு மாலிகை புனைவதை யமதிலைப்
 பிறங்குநின் படைமுன்னுள்
உருகு காதலிற் கண்டிகை நீறணிந்
 துருக்குறை யதனாலுன்
பருகு சக்கரந் தடிந்திடக் குறைந்தது
 பகைசெம்மாப் புறமன்னா! (21)

491. உடைதி ரைப்புவி பரித்திடு மன்ன!நீ
 யொருவனைப் படர்ந்தாயென்
றடைவு றச்சொலு முநிவர்சொற் கேட்டுளத்
 தையமுற் றிறைபின்னுஞ்
சடைமு டித்துற வோரைநோக் குபுபெருந்
 தகுதிகூ றொழுக்கத்தாற்
தொடைபெ றச்சொல்வான் அருந்தவக் கிழமைசால்
 துறவிர்!என் மொழிகேண்மின், (22)

492. கறுத்து டன்றுபற் றலர்விடு சக்கரங்
 கடற்பெரும் படையெல்லாம்
அறுத்து வெண்பொடி கண்டிகை மாமணி
 யணிந்திடா எனைவிட்டு

---

490. புனைவது-ஐயமது இல்லை. செம்மாப்பு-களிப்பு.

வெறுத்த கன்றதென் றுரைத்தனிர் கண்டிகை
மேலிலாப் பெருஞ்சேனை
செறுத்த ரிங்கெதனை விட்டதெவ் வாறது
செப்புமின் உளத்தோர்ந்தே. (23)

493\. என்று ரைத்தகோ மகன்மொழி கேட்டுளத்
தெண்ணியோர் மொழிசொல்வார்
வென்றி யைத்தரு கண்டிகை மாமணி
யிலைந்தனை யதனாலே
யுன்ற னைக்கொலா தெறிதிகி ரிப்படை
யோடிய திதற்கையம்
என்றும் அற்றது சேனைமன் னவ!வென
இசைத்தனர் அவ்வேலை; (24)

வேறு

494\. இழைசுமந் தகன்ற அல்குல்
இன்னகைத் துவர்வாய் மாதர்
மழைமதர் விழிக வர்ந்த
மணித்தடப் புயனு ரைக்குங்
குழைமலர் கடுக்கை வேய்ந்த
குழகன்வெண் ணீறு கண்டி
விழைவுடன் அணிந்தி டாமல்
வெஞ்சமர் இழைத்திட் டேனல். (25)

495\. குங்கும நரந்தஞ் சந்தக்
குறடக டுரிஞ்சு தேய்வை
பங்கமெய் திமிர்ந்து நீலம்
பணிக்கதிர் உமிழ்வெண் முத்தத்
தொங்கல்வேய்ந் தமரி ழைத்தேன்
சொல்லில்வே றில்லை நேமி
வெங்கடற் படைதொ லைத்தென்
மேல்விழா தகன்ற தம்மா. (26)

496\. என்றுரைத் திடுமவ் வேந்தன்
இனியசொற் கேளா மிக்கோர்
நன்றெனா அதிச யித்து
நாடியே தேர்ந்து செம்பொற்
குன்றுறழ் புயனைப் பார்த்துக்
கூறுகின் றார்கள் மன்னா!
இன்றுபன் மணித்தார் சோதித்
திடுதியென் றுடன்சோ தித்தார். (27)

495\. நரந்தம்-கஸ்தூரி, வாசனை.; பங்கம்.கலவைச் சேறு.

497. அதனிலோர் கண்டி காட்டி
யருளினார்க் கரசன் கண்டு
பதனழிந் துளந டுங்கிப்
பயந்தனன் அவனை நோக்கி
மதனுடை முனிவர் கேட்பார்
மன்னஎத் திசைகொ ணர்ந்தே
யிதனைவேய்ந் தனைமெய் யாக
இயம்புதி யென்ற போது. (28)

498. கன்னலஞ் சிலைவே ளன்னான்
கட்டுரைப் பான்ச மர்க்குப்
பன்னெடுஞ் சேனை யோடு
படர்ந்தனன் அப்போ தெண்ணில்
பொன்னுடை நாய்கன் வந்து
பொருவில்கா ணிக்கை யாக
மின்னவிர் மணித்தார் ஈந்தான்
விசாரியா தணிந்து சென்றேன். (29)

499. உண்மையீ தென்ற சொற்கேட்
டொலிமுத லியஅ டக்குந்
திண்மைமா தவர்வி யந்து
செப்புகின் றார்கள் கண்டி
வண்மைமான் மியத்தால் நேமி
வந்தடல் புரியச் சேனை
தண்மையால் மடிந்த தால்நீ
சஞ்சலந் தவிர வந்தாய். (30)

500. திரைக்கடற் படைகள் எல்லாஞ்
செய்யவெண் ணீறு கண்டி
தரிக்கில்வெஞ் சமரின் மிக்க
சயம்பெறும் ஐயம் இன்றால்
உரைக்கரும் பூதி கண்டி
யொழியவே றுபாயம் இல்லை
கருத்தினால் உணர்தி யென்றார்
காவலன் அவர்சொற் கேட்டான். (31)

---

497. 'மதன்-மடமை 'மதனுடை நோன்தாள்'. திருமுரு.

498. நாய்கன்-வியாபாரி "மதலையிற்றுழி நாய்கர் போல் துயர்க்கடல் மறிகின்றார்" (கந்த புரா-மோனநீங்-2.)

499. தண்மை-அறிவின்மை.

501. பின்னரப் படியே நீறு
பிறங்குகண் டிகைத்தார் வேய்ந்து
தன்னிகர் இன்றி வெங்கான்
தணந்துதான் ஒருவ னாக
நன்னெறி வெளிப்ப டர்ந்தான்
நயப்புடன் சிறிது சேனை
முன்னர்வெம் படைகள் ஏந்தி
முகமிக மலர்ந்த டைந்தார். (32)

502. அன்னவர்க் கிருள்சீத் தெங்கும்
அவிரொளி பரப்பு நீறு
மின்னவிர் கண்டி நல்கி
விறற்படை யோடுங் கூடி
மன்னமன் னர்கள்பு ரத்தை
வளைந்தனன் சிங்கன் சேனை
தன்னுடன் புறப்பட் டார்த்துச்
சக்கரந் தன்னை விட்டான். (33)

வேறு

503. விருது குறித்தாருயிரனைத்தும்
மேய்ந்து காத்தா னிரையறுத்துக்
குருதி பருகித் தேக்கெறிந்து
குமட்டி வடவை யெதிரெடுத்துப்
பருகி யனந்த கோடியொளி
பரப்பி யொலிவிண் செவிடுபடப்
பொருது திரியுந் திகிரிபடை
வலஞ்செய் திறையிற் போயினதே. (34)

504. சிங்கன் கரத்தின் மீளவுமத்
திகிரிப் படைவந் ததைக்கண்டுள்
அங்கண் வெருவி நடுநடுங்கி
யவனும் முறிந்து விரைவிற்போய்ப்
பொங்கு பருமுட் கானகத்திற்
புகுந்த அரசன் செயல்கேட்டுத்
துங்க வருணன் தனைநோக்கித்
தொழுது வரங்கூர் தவமிழைத்தான். (35)

---

503. காத்து-தடுத்து. இறை-விரைவில், அற்பநேரத்தில்.‘புரம் இறையின் மாத்திரையில் எரியூட்டினன்-சம்.தேவா. III-45-3.

505. வருணக் கடவுள் கடற்கிறையாம்
 வண்மை தவிரா துலகத்துங்
கருணைக் கடலி னுடன்தோன் றக்
 கசிவாற் சிங்கன் வருணனைவி(று)
அருணக் கிரண முடியரசே!
 அடியேற் கருளும் வரமறவேல்
பொருணிச் சயமாய் வேண்டுபகல்
 புயல்பெய் திடுதற் கருளென்றான். (36)

506. அன்ன வரமீந் தெழுசலதிக்
 கரசன் மறைந்தான் சிங்கனெனும்
மன்னன் மகிழ்ந்து பொருஞ்சமர்க்கு
 மறுநாட் சிந்து சேனனைப்பார்த்(து)
என்னோ டெழுகென் றறைகூவ
 எதிர்ந்தான் சிந்து சேனனப்போ(து)
உன்ன அரிய சிங்கன்விரைந்
 துளத்தில் வருணன் தனைநினைந்தான்; (37)

507. பிறைவாள் எயிற்று மகரமிசை
 பிறங்கு வருணன் வந்துமழை
யுறைவா ரியெனப் பெய்யமன்னர்
 உபய தளமு நனைந்ததப்போ(து)
இறையாஞ் சிந்து சேனனிடத்
 திலகு நீறு நரித்தவர்மெய்
குறையா யழித்த துடன்சிங்கன்
 கோதில் சிந்து சேனனையே, (38)

508. கருதி யெறிசக் கரம்விடுத்தான்
 கதுமென் றதுவந் தவன்சேனை
பொருது வளைந்து நீறுகண்டி
 புனையார் தமைச்செற் றிவையணிந்து
பெரிது மகிழ்ந்த மன்னனையும்
 பெருஞ்சே னையையும் விட்டொளிகூர்
பருதி நிகர்சக் கரஞ்சிங்கன்
 பால்வந் தடைந்து விளங்கியதே. (39)

506. சலதிக் கரசன்-வருணன்

509. தெரியல் அணிந்து சிலைத்தழும்பார்
  திண்தோள் சிந்து சேனனயர்ந்(து)
அரிய கண்டி புனைந்தசில
  அணிகத் துடன்வெவ் இருள்துரந்த(கு)
உரிய வசிட்டர் முதலாக
  வுள்ள முனிவர் அடிபணிந்து
பரிவி னொடுகண் டிகைநீறு
  பதாதிக் கணிந்தே யமரிழைத்தேன். (40)

510. பகையாஞ் சிங்கன் எறிதிகிரிப்
  படையென் சேனை மிசைவிடலும்
மிகையா யடைந்தென் சேனையெலாம்
  வீட்டிச் சிலரென் னுடன்விட்ட
வகையா னதுவுந் திரும்பியவன்
  மருங்கிற் படைசென் றடைந்ததுவுந்
தொகையால் உரைப்பீர் என்னஅவன்
  சொல்ல முனிவர் சூழ்ந்துரைப்பார். (41)

511. மடங்கல் அனையாய்! அனவரதம்
  மல்கும் இருள்சீத் தொளிபரப்பி
யி[டங்கள் இலக] நீறுகண்டி
  யாரா யினுமே தரிக்கின்றார்.
தடங்கொள் திகிரி வச்சிரமுத்
  தலைவேற் பரசு சிலைகணைவாள்
தொடங்கும் இவையா தியபடையால்
  தொலையார் அவர்ஈ துண்மையென்றார். (42)

---

511. [டங்கள் இலக]-இது ஏட்டில் இல்லை.

## அத்தியாயம் 19.

### ருத்ராக்ஷமான்மியம்-தொடர்ச்சி

*அரசே! மழையினால் திருநீறு அழிந்துபோகச் சேனைகள் சக்கரத்தால் அழிபட்டன. எவரெவர் கண்டிகை தரித்திருந்தார்களோ அவரவரே உன்னுடன் உய்ந்தனர். ஏனையோர் இறந்தனர். திரிபுரம் அழிபட்ட அத்தினத்தில்கூட நீறு கண்டிகை இரண்டும் தரித்தவர் உய்ந்தனர். அபிசார வேள்வியில் எழுந்த பூதங்களும் நீறு, கண்டிகை புனைந்தவர்களை அணுக அஞ்சின. ஆதலால், திருநீறு, கண்டிகை இரண்டையும் உன் சேனைக்குத் தவறாது புனைவித்துப் பின்னர் போருக்குச் செல்லுக". என்றார்கள். இதைக்கேட்ட சிந்துசேனன் தன் சேனையில் எல்லாருக்கும் நீறு, கண்டிகை இரண்டையும் புனைவித்துச் சிங்கனைப் போருக்கு அழைத்தான். சிங்கன் வந்ததும் சக்கரத்தை ஏவினான். சக்கரம் சிந்துசேனனது சேனையைப் பணிந்து மும்முறை வலஞ்செய்து சென்றது. சிங்கன் உடனே வருணனைத் தியானித்தான். பெருமழை பெய்ய இருவர் சேனையும் மழையில் நனைந்தது. மழையால் திருநீறெலாம் அழிந்துபோயிற்று. அதைக்கண்ட சிங்கன் சக்கரத்தை மறுமுறை ஏவினன். அப்போதும் சக்கரம் சிந்துசேனன் சேனைகள் கண்டிகையணிந்திருப்பதைக் கண்டு அஞ்சி ஓடியது. சக்கரம் ஓடினதைக்கண்ட சிங்கன் பயந்து காட்டுக்குள் ஓடி மறைந்தான். சிந்துசேனன் இங்ஙனம் வெற்றிகொண்டு காகள நகரத்தை அடைந்து விந்திய தேசம் முழுதும் தன் கைக்கொண்டான். தனது தேசத்தில் உள்ளோர் எல்லாருக்கும் நீறும் கண்டிகையும் புனைவித்தான், நெடுநாள் போகமுடன் வாழ்ந்து, தன் பிரஜைகள் யாவருடனும் மணிவிமானம் ஏறிக் கயிலையை அடைந்தான். ஈற்றில் முத்தியும் அடைந்தான். சிங்கன் பின்பு விருப்பு வெறுப்பு அற்றவனாய்த் தானும் நீறும் கண்டிகையும் புனைந்து ஈற்றில் முத்தியடைந்தான்.*

*சிவபிரான் திரிபுரத்தைச் சிரித்து எரித்தபொழுது ஒரு மூவரை (அசுரர்கள் பிழைக்கும் வண்ணம்) அவர் பார்த்த சமயத்தில் அவர் விழியினின்றும் விழுந்த அமுத விந்தின் துளி குருமரமாயிற்று. அதன் வித்தே முகங்கள் கொண்ட ருத்ராக்ஷமாயிற்று.*

*நற்கதி பெற விரும்புவோர் நீறும் கண்டிகையும் புனைதல் வேண்டும். ருத்ராக்ஷம் அணிந்தவனை அண்ணல் விரும்புவார். அவன் ருத்ர மூர்த்தியாவன். ருத்ராக்ஷ மான்மியம் படிப்போர், கேட்போர், கேட்பிப்போர் முக்கண் கொண்ட அரனே ஆவர். அவர் சீர் உரைத்தலரிது. அவர் மனைவி மக்களுடனும், பேரன்மாருடனும், சுற்றத்தாருடனும் பெருஞ்செல்வமொடு வாழ்ந்து பரமன் திருவடி சேருவர்.*

## அத்தியாயம் 19.

### ருத்ராக்ஷ மான்மியம்-தொடர்ச்சி

#### அறுசீர் விருத்தம்

512. *எறிதெண் டிரைமா யிருஞாலம்*
*என்றும் பொதுநீக் கிப்புரந்தே*
*அறிவின் திகிரிப் படைசெலுத்தும்*
*அரசே! கமழ்வெண் திருநீறு*
*செறிதண் துளிவான் மழைபொழியச்*
*சேர அழிந்த தெல்லோரும்*
*பொறியந் திரநூ லற்றதெனப்*
*பொள்ளென் றிறந்து போயினரே,* (1)

513. கொன்றை கமழ்செம் பவளவல்லிக்
 கோடீ ரஞ்சேர் குழகன்மகிழ்
வென்றி மணிக்கண் டிகைதரித்தோர்
 வேந்தே! நின்னே டியந்தனர்முன்
சென்று குழுமு திரிபுரத்தில்
 திருநீ றக்கம் புனையசுரர்
துன்ற விறற்றே வதையாலுந்
 துயரம் ஒருசற் றடைந்திலரால். (2)

514. ஓவின் மறையோர் நீலமணி
 யுருவத் தோதி யவரிழைத்த
ஆவி சார ஓமத்தில்
 அழல்வாய் வருபூ தங்கள் தமை
ஏவி னர்கள் அப்பூதம்
 இலகு நீறக் கந்தரித்த
தாவில் அசுரர் தமைக்கண்டு
 தளர்ந்து பயந்து திரும்பியவே. (3)

515. பொறிகள் சிதறு விழியசுரர்
 பூதி அக்கந் தரியாமற்
பிறிதோர் உபாயஞ் செய்துமலர்ப்
 பிரமன் நெடுமா லாதியர்கள்
மறிவெம் பரசு தரித்தாரும்
 வள்ளல் தனைக்கொண் டோர்கணத்திற்
செறியும் அசுரர் திரிபுரஞ்செந்
 தீயில் எரிய நகைப்பித்தார். (4)

516. அரசே! நீயுங் கண்டிவெண்ணீ
 றணிந்த அனிகத் துடன்கூடிக்
கரைசேர் வறியாப் பயந்தணந்து
 கருத லாரைக் கோறல்புரி
விரைசேர் வெண்ணீ றுடன்கண்டி
 மிலைதல் வேண்டும்; நீறுகில்
திரைசேர் மழைவேர் முதலியதில்
 நீங்குங் கண்டி யழியாதால். (5)

---

513. கோடீரம்-சடை; விறற்றேவதை-வீர லக்ஷ்மி.
514. ஆவிசார ஓமம்-அபிசார வேள்வி; அக்கம்-ருத்ராக்ஷம்.
515. தரித்து ஆரும்-தரித்து விளங்கும்.

517\. பொருவெஞ் சமரில் முன்னிறந்தோர்
    பூதி யொன்று மேதரித்துப்
பெருகுங் கமஞ்சூல் மாமழைகள்
    பெய்யத் திருநீ றழிந்ததனால்
திருகு சினம்விட் டிறந்தனர்சந்
    தேக மிலைசத் தியமுரைத்தாம்
கருமஞ் சிதையா துணர்தியென்று
    கழறு முனிவர் மொழிகேட்டான். (6)

518\. கண்டி திருநீ றணிந்த கனை
    கழகாற் சேனை யுடன்கூடிக்
கொண்டு வலிசேர் அரசனறை
    கூவுஞ் சிங்கன் தனைவிளித்துத்
துண்ட எயிற்று நரமடங்கல்
    தொடர்ந்த சரபம் போற்புறப்பட்(டு)
எண்டி சையுந்தான் நடுநடுங்க
    இகல்வெம் போருக் கழைத்ததனால். (7)

519\. அந்த அமையந் தனிற்சிங்கன்
    அவிரா ழிப்பொற் படைதரித்து
வந்து களத்தில் அணிவகுத்து
    மலைந்து திகிரிப் படைவிடலுஞ்
சிந்து சேன னுடன்கண்டி
    திருநீ றணிந்த சேனைகண்டு
முந்தி வருசக் கரம்பணிந்து
    மூன்று வலஞ்செய் ததன்றதுவே. (8)

520\. சிங்கன் உடன்று துயரகற்றுந்
    தெண்ணீர்க் கடவுள் தனைநினைந்தான்
அங்கண் இருவர் சேனையினும்
    அருமா மழைகள் பொழிந்ததனாற்
பொங்கு திருநீ றழியஎதிர்
    பொருவெஞ் சிங்கன் திகிரிவிட்டான்
தங்கு படைகண் டிகைநோக்கிச்
    சலித்தோ டியது சக்கரமே. (9)

521\. திகிரிப் படையோ டியதுகண்டு
    சிங்கன் வெருவிச் சேனையுடன்
மகரச் சலதி யெனவிரைந்து
    வனத்திற் புகுந்து மறைந்ததனால்

சிகரத் தனமெல் லியர்மதனைஞ்
சிந்து சேனன் காகளமா
நகரத் தொடுவிந் தியதேச
ஞாலம் அனைத்துங் கைக்கொண்டான். (10)

522. தனது தேயத் திருக்கின்றோர்
தங்கட் கெல்லாம் நீறு கண்டி
புனைவித் தவன்மான் மியமினைத்துப்
போக நெடுநாள் துய்த்தொக்கல்
அனைவ ரொடுந்தன் தேயத்தில்
அடைந்த சகல சனத்தோடுங்
கனக மணிமா னத்தேறிக்
கயிலா யத்தை யடைந்தனனால். (11)

523. முனிவீர்! அடைவில் அவன்மீளா
முத்தி யடைந்தான் சிங்கன்பின்
நனிசேர் வயிராக் கியந்தன்னால்
நட்பும் வெறுப்பும் விட்டமலன்
தனிமா மணியாங் கண்டிபொடி
தரித்துச் சீவன் முத்தனென
இனிதா நெடுநாள் இருந்துயிர்விட்
டெங்கோன் முத்தி யெய்தினனே. (12)

524. இருளும் ஒதுங்க அசுரரெயில்
மூன்றுந் தர்ப்ப ணத்திலுழுந்(து)
உருளும் அளவில் எரியநகைத்
தொருமூ வர்க்கா உருத்திரன்பார்த்(து)
அருளும் அமயம் விழிதுளிக்கும்
அமுது விந்து குருமரமாந்
தெருளும் பதத்தில் இவ்விதைவத்
திரஞ்சேர் உருத்தி ராக்கமெனும். (13)

---

522. மானம்-விமானம்.

523. பொடி-திருநீறு.

524. தர்ப்பணம்-கண்ணாடி.

"எயில் மூன்றும் தர்ப்பணத்தில் உழுந்துருளும் அளவில் எரிய நகைத்து"—
"புரமூன்றும் எழிற்க(ண்)ணாடி உழுந்துருளும் அளவையின் ஒள்ளெரி கொள"—
சம். தேவா. I. 132-3, வத்திரம்-முகம்.

525. பரவை புடைசூழ் இருநிலத்திற்
பன்னாள் நெடுங்காற் கயிற்றாசல்
விரவு சகடை கறங்கெனவே
மென்மே லேழு வகைப்பிறப்பில்
வரவை யொழித்தே நாற்பொருளும்
மணந்து கதியே பெற்றிட,ஆ
தரவை யுடையோன் நீறுகண்டி
தரிக்க வேண்டுஞ் சத்தியமே. (14)

526. அக்க மணிவேய்ந் தவனிடத்தில்
அண்ணல் கருணை யுண்டாமெண்
திக்கும் இறைஞ்சும் அவனும்உருத்
திரனே யாவன் ஐயமிலை
மிக்க மணிமான் மியம்படிப்போர்
விரும்பிக் கேட்டோர் கேட்பிப்போர்
முக்கண் அரனே யாகுமவர்
முதல்வர் பெருஞ்சீர் உரைப்பரிதே. (15)

527. பின்னும் அவரே மழலைமொழி
பிறங்கு சதங்கை கிண்கிணிக்கால்
மன்னு குமார பௌத்திரர்நன்
மனைவி கிளைஞர் பெருஞ்சேனை
துன்னு நகரம் பலதேயஞ்
சூழுஞ் செல்வம் மிகப்பெற்றுப்
பன்னு நெடுநாள் வீற்றிருந்து
பரமன் மலர்த்தாள் சேர்குவரே. (16)

---

525. சகடை (சகடு)-வண்டியின் சக்கரம்; சகடை கறங்கெனவே, பிறப்பில் வரவு—"கறங்குஞ் சகடமும் போற் சென்மித் துழல"—கந். கலி. கறங்கு-காற்றாடி 'ஆடுங் கறங்குந் திரிகையும் போல அலைந்தலைந்து (தாயுமா)'

*

## அத்தியாயம் 20.

## சிவநாம (பஞ்சாக்கர) மான்மியம்

*சூதமுநிவர் சௌனகாதி முநிவர் குழாத்தை நோக்கிக் கூறுகின்றார்:— இனி, சிவ நாமத்தின் பெருமையைக் கூறுவேன். சிவன் பெயர் பல; அவற்றுள் ஒன்றையோ பலவற்றையோ செபிக்கின்றவனே சிவன்; அவன் பல போகங்களையும் அநுபவிப்பான்; அவனை வானவர் வணங்குவர்; அவன் கயிலை சார்வான்; ஈற்றில் முத்தி அடைவான். இது உண்மை. சிவ நாமங்களுள் பஞ்சாக்ஷரம் பஞ்சமா பாதகங்களைப் போக்கும். அதைக் குருவின் உபதேசப்படி முறையாகச் செபிப்பவர் பிறவிக்கடலை ஒழிப்பர். சிவனடி கூடுவர்.*

### கலாவதி கதை

*உயிர்களின் மரண இளைப்பைத் தவிர்க்க, உமையம்மை தனது உத்தரியத்தால் வீச இறைவன் பிரணவத்தை உபதேசம் செய்யும் பெருமை வாய்ந்த* **காசிமா** *நகரில்* **வஜ்ரவாகு** *என்னும் அரசனுடைய தவப் புதல்வி, கலை நிரம்பியவள், கற்பிற் சிறந்தவள், ஐந்தெழுத்தை நியமந்தோறும் ஜெபிப்பவள், அழகுநிறைந்தவள்* **கலாவதி** *என்பாள். அவள் பாண்டியராஜன்* **தாசாதனை** *மணந்தாள். தாசரதன் மண அறையிற் கலாவதியிடம் காதல் பொங்கப் பேசி நெருங்க, கலாவதி 'அன்பரே! நீர் பஞ்சாக்ஷரம் ஜெபிக்கின்றதும் இல்லை! நன்னெறி படர்தலும் இல்லை; ஆதலால் என்னைத் தொடலாகாது என்றாள். 'உன்னை மணந்து தழுவ வேண்டும் என்று நான் எவ்வளவோ தவஞ் செய்தேன்; நீ இணங்காவிடில் என் உயிர் இராது' என்று அரசன் இரங்கிக் கூறியும் கலாவதி விருப்பின்றி நிற்க, அரசன் அவளை வலிதில் தழுவினான். அப்போது அவள் உடல் தீக்கனல் போல அவனைச் சுட்டிட, அவன் 'ஆ' என்று அலறி வீழ்ந்து 'மாதே! உன் உடலில் இப் பெரு நெருப்பு ஏது? என வினவினன். கலாவதி 'அன்பரே! பாவங்களை ஒழிக்க வல்ல வித்தை கதிதரும் ஐந்தெழுத்தே. அதை நீர் செபிக்கின்றீர் இல்லை. ஆதலால் மெய்ஞ்ஞானம் உள்ள குருவினிடம் நீர் ஐந்தெழுத்தை உபதேசம் பெற்ற பின் என்னைத் தழுவுவீராக! அங்ஙனம் செய்யாவிடில் என் உடல் உமக்குச் சுடும்' என்றாள். இதைக் கேட்ட அரசன் மறுநாள் நீராடி அலங்கரித்துக் கொண்டு தன் சேனையுடன் புறப்பட்டுச் சென்று, கலை ஞானம், தெளிவு, வாய்மை, புலனடக்கம், பொறை, அன்பு, தூய்மை, ஒழுக்கம், தவம், சடாமுடி, கண்டிகை, திருநீறு-இவையாவும் பொலியும்* **கர்க்க** *முநிவரை அடைந்து, பணிந்து, தான் வந்த வரலாற்றைக் கூறி "ஐந்தெழுத்தை உபதேசித் தருளுக" என வேண்டினன். அங்ஙனமே அவரும் உபதேசிக்க, அரசனைப் பற்றிய பாவங்கள் அவன் உடலினின்றும் காகங்களாய்ப் பறந்து எழுந்து எரிந்து வீழ்ந்தன. அரசனும் முநிவர் பிரானுக்கு நன்றி கூறிக் கூடலுக்கு (மதுரைக்கு) வந்து அன்று முதல் தன் மனைவியுடன் மகிழ்ந்து பெரும்போகம் துய்த்தான்.*

## அத்தியாயம் 20.

## சிவநாம (பஞ்சாக்கர) மான்மியம்

### எழுசீர் விருத்தம்

528. உருகும் பசும்பொன் மணிசேர் கிரீடம்
ஒளிர்குண் டலங்கை வளைபூண்
வருகுங் குமம்பெய் புழுகங்க ராக
வகையுந் தணந்து கருணை
பெருகங் கணன்கண் வருகண்டி நீறு
பெறுகின்ற சூத முநிவன்
திருகுஞ் சினங்கள் தவிர்சௌன காதி
திர(ள்நோ)க்கு பைதின் மொழியும், (1)

---

528. நோக்குப-ஐதின்; ஐதின்-அழகாக.

529. ஒலியாதி வென்ற துறவீர்கள்! கேண்மின்
ஒளிநீறு கண்டி வகையின்
மலிமான் மியங்கள் தமையோதின் நன்பொன்
வரைசேர் பினாக தரன்ஆண்
அலிமா தகன்ற வடவீசன் எந்தை
யருள்நாமம் என்ற பெயரே
பொலிமான் மியங்கள் தமையார் வமோடு
புகல்வேன் அறிந்த படியே. (2)

அறுசீர் விருத்தம்

530. சிவனுருத் திரன்அ ரன்சந் திரசேக ரன்ம கேசன்
பவன்விரு பாக்கன் ஈசன் பசுபதி நீல கண்டன்
நவனுமா பதிமி ருத்யுஞ்ச யன்சம்பு மாதே வன்கா
னவனெனுஞ் சங்க ரன்தன் நாமமிப் படிய நேகம். (3)

531. அவைகளில் ஒருநா மந்தான் அநேகநா மந்தான் பல்கால்
நவையறச் செபிக்கின் ருனேல் நன்மைசால் சீலன் அன்னோன்
சுவைமுத லியபோ கந்தான் துய்த்துவா னவர்வ ணங்கச்
சிவபதி கயிலை பன்னாட் சேர்ந்துவீ டடைவன் மாதோ. (4)

532. அங்கண்மா ஞாலம் போற்றும் ஆற்றருந் தவத்தீர் வாய்மை
யுங்களுக் குரைத்தேன் இன்னும் உரைப்பல்பஞ் சாக்க ரந்தான்
துங்கமந் திரமே யாருந் தொடரும்பா தகங்கள் ஐந்தும்
பொங்கனற் பஞ்சும் போலப் போக்குமீ துண்மை யம்மா. (5)

எழுசீர் விருத்தம்

533. இறையைந் தெழுத்தடைவு பெறுமந் திரச்சொன்முதல்
இடையந்த மற்றபர மதனையே
மறையந்தம் உற்றபொருள் கரைகண்ட திற்றெளிவு
வரநின்ற சற்குருவின் அருளினல்
அறைசங்கை மிக்கசுரம் வருணங் குணித்தஅள
வதிகங் குறைச்சலற மருவியே
முறையின் செபித்தவனின் மலனென் றவற்குறுகின்
முழுதும் பவச்சலதி யொழியுமே. (6)

---

529. வடவீசன்-வடம்-ஆலமரம்-ஆலன்-சிவன். 'ஆலன் நீலக்குடி யுறை நின்மலன்'. (தேவா. அப்-V 72-4)

530. கானவன்-" கானவன் காண் "—தேவா. அப்-VI 87-1.

532. பாதகங்கள் ஐந்து-பஞ்சமா பாதகம், கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குரு நிந்தை.

533. சங்கை-கணக்கு; குணித்த அளவு.

534. வருணவுரு வங்கடவுள் திருவுறையுள் சந்தமிதில்
வருமிருடி நின்ற திசைகூர்
பிரமமடு வெம்படைகள் கலைகுணமொ ரங்கமொளி
பெறுகரணம் ஒன்றி வருகால்
அருளினறி விந்தியநல் விடையமிவை வந்தமுறை
யடைவிலெணி ரண்டு வகைதேர்
குருவருளின் ஐம்பதமும் உணரில்விப வம்பெறுவர்
குறுகுவர் சிவன்பதமுமே (7)

அறுசீர் விருத்தம்

535. வாவி யெழுங்கயல் மேதி யடர்ந்தடு
வாளை கடந்தயல்சேர்
தூவி யனம்பெடை யோடி ரியும்படி
சோலை யிளங்கமுகே
தாவி யறைந்திள நீர்சித றும்படி
சாடி யதன்துளிவீழ்
காவி மலர்ந்துமிழ் தேனில் அளைந்துகள்
காசி வளம்பதியே. (8)

வேறு

536. துவளக் களிறு பொருதடர்கொங்
கையர்வண் டலிற்பந் தடித்திடைமெய்
துவளக் குரவை குனித்துவள்ளை
சொல்வண் டிரங்கச் செவ்வழியாழ்
தவளக் குடைவெள் வளைமுழங்கத்
தண்டா மரைப்பொற் பொகுட்டிலனம்
பவளக் கொடிகை விளக்கெனக்கண்
படுக்குங் காசிப் பட்டினமே. (9)

537. ஒற்றை நுதற்கண் அரனிடங்கொள்
உமைகொங் கையினுத் தரியமுதித்(து)
அற்றை நரந்தப் பரிமளத்தால்
அணலங் குடிலை யுபதேசம்
மற்றை யவனிற் பெறுமுயிர்தம்
மரண இளைப்புத் தவிர்க்கவளை
பற்றை மலர்க்கை விசிற அருள்
பதியாங் காசிப் பட்டினமே. (10)

---

534. எண்இரண்டுவகை-பதினாறு வகை. (வருணம், உருவம், கடவுள், திரு, உறையுள், சந்தம், இருடி, திசை, படைகள், கலை, குணம், அங்கம், கரணம, அறிவு, இந்தியம், விடயம்.)

536. அனம்-அன்னம்.

537. அணல்-அண்ணல்; பற்றை-செங்காந்தள்:
"தூசினால் அம்மை வீசித் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சும்
ஆசிலா உயிர்கட்கெல்லாம் அஞ்செழுத் தியல்புகூறி"—என வரும் கந்தபுராணச் செய்யுளை ஒப்பிடுக.

கலாவதி கதை.

538. அக்கா லையில்வச் சிரவாகு
    அரசன் தவத்தின் றருள்தனையை
மிக்காம் அகிலக் கலைத்துறைபோய்
    வீடாக் கற்பு]மரீஇயுளத்தில்
நெக்கார் வமொடைந் தெழுத்தையுநன்
    னியமத் தோடு செபித்துணரும்
மைக்கா வியங்கட் கிள்ளைகலா
    வதியென் றுறுபேர் மங்கையளே. (11)

539. வாளை யெறிந்து கடைசிவந்து
    மதர்த்த விழியார் கருப்பூரத்
தூளை யொருவர்க் கொருவர்நறுஞ்
    சுண்ணத் தொடுகொங் கையிலெறியும்
வேளை தவழ்ந்த இளந்தென்றல்
    வீச மடல்விண் டவிழ்க்கமுகம்
பாளை கமழ்பாண் டியதேயம்
    பரிக்குந் தாச ரதற்களித்தான். (12)

540. பாந்தள் மணிச்சூட் டுலகுபுயம்
    பரித்தோன் தனயை சூடகக்கைக்
காந்தள் மருகன் முகிற்கரச்செங்
    கமல மலர்மேல் அமர்ந்ததெனச்
சாந்த நறுநீ ருடன்கொடுத்தான்
    தாச ரதனவ் வுதகமும்பெற்(று)
ஆய்ந்த மறையின் விதிப்படியே
    அழல்முன் புரிந்து கைப்பிடித்தான். (13)

541. குண்டம் அடங்காக் கதழெரிச்செங்
    கொழுந்து வலஞ்சூழ் குறியுளத்திற்
கண்டு கரங்கள் நிறைந்தபொரி
    கனலின் நாவிற் சொரிந்துவலங்
கொண்டு மடமான் அலத்தகச்செங்
    குழம்பு தோய்சிற் றடிசிவப்ப
மண்டு வியப்பால் அம்மியிசை
    வைத்து வடமீன் காட்டினனால். (14)

---

540. சூடகம்-கைவளை.

541. அலத்தகம்-செம்பஞ்சுக் குழம்பு.

542. மற்றும் உளபல் விதியிழைத்து
மழைக்கண் திருவைத் தன்னகரிற்
கொற்ற மொடுபின் கொடுபோகிக்
கொடிமா நகரின் மணஅறையிற்
சுற்றும் எழினி புடைவிரித்துத்
தூமங் கமழ்மெல் அணையிலெங்கோன்
பற்று மறவா தைந்தெழுத்து
பரிந்து செபிப்பாள் தனையிரந்தே, (15)

(வேறு)

543. கஞ்சமா மனையி தழ்ப்பொற்
கதவெலாந் திறந்து வந்தும்
வஞ்சமாய் நின்றீர் உள்ளம்
மரங்கொலோ இரும்பு கொல்லோ
நெஞ்சமார் விழிவேல் விட்டென்
நினைவெலாங் கொள்ளை கொண்டீர்
தஞ்சமார் தமியேற் காவி
தன்னைவிட் டருள்செய் வீரே. (16)

544. கண்டுமாம் பழமுந் தேனுங்
கலந்துபா குடன் பொதிந்த
தொண்டைவாய் இதழ்சு வைக்குந்
தொறுந்தொறும் அமுத வாரி
யுண்டுநான் களித்துச் செம்மாப்
புற்றிடக் கருணை செய்தாட்
கொண்டுநீர் இடைவி டாமற்
குற்றேவல் கொள்ளு வீரே. (17)

545. என்றுகா தலித்துக் கூறி
இரந்துபின் னின்று தென்றற்
கன்றுகா மத்தீ மூட்டிக்
கனுற்ற வெண் நிலவு காய
அன்றிகா ளத்தால் வாட்ட
ஐங்கணை மதவேள் தொட்ட
மன்றல்வா ளிகள்வ ருத்த
மனந்தளர்ந் துருகி நின்றான். (18)

---

542. எழினி-திரை.

544. செய்துஆட்கொண்டு.

545. காளம்.குயிலாகிய காளம்.

546\. அன்னவன் தன்னை நோக்கி
மையங்கண்ணை மலரும் பூட்டுங்
கன்னல்வெஞ் சிலையும் இல்லாக்
காமனே! கருதார் ஏறே!
நின்னுள மீதிற் பாவம்
நீக்கும்ஐந் தெழுத்து மில்லை
நன்னெறி யொழுக்கம் இல்லை
ஞானமோ சிறிதும் இல்லை; (19)

547\. நிந்தைசேர் தேறல் துய்த்து
நினைக்கொணாத் தசைய ருந்திக்
கொந்துலா மலர்க்கு ழற்பைங்
கொடியிடைப் பரத்தை மாதர்
மந்தரா சலமு லைக்கண்
மருவியே போகந் துய்த்தாய்
பந்தபா சந்தீர்ந் தென்னைப்
பரிசிக்க லாகா தென்றாள். (20)

548\. வாட்டடங் கருங்கண் மாதிவ்
வாறுரைத் ததனைக் கேளாப்
பூட்டுவெஞ் சிலைவேள் அன்னான்
புகலுவான் அளிக்கண் மாதே!
வேட்டபின் உனையெப் போதும்
விரும்பியான் தழீஇக்கொள் வேனென்(று)
ஈட்டுநல் தவஞ்செய் தேனை
யிகழ்ந்திடில் உயிரி ராதே. (21)

549\. ஆகையால் முலைத ழீஇக்கொண்
டாருயி ரளித்தி யென்றே
ஓகையால் உரைக்க வுஞ்சற்
றுளத்திலோர் விருப்பம் இல்லாத்
தோகையா னவளைப் பற்றித்
துணைப்புயம் நெருங்க வெற்றி
வாகைவேல் வலஞ்சேர் மன்னன்
வலிதினில் தழுவிக் கொண்டான். (22)

---

547\. தீர்ந்து-முதிர்ந்து; பந்தபாசம் தீர்ந்து போகந்துய்த்தாய்; என்னைப் பரிசிக்கலாகாது அல்லது பந்தபாசம் தீர்ந்த (ஒழிந்த) என்னை.

548\. அளி-வண்டு.

550. அங்கவள் உடலில் நின்றே
அனற்சிகை யெழுந்து தாவித்
துங்கவேல் வலஞ்சேர் வோன்மெய்
சுட்டிட ஆவா என்று
செங்கைநீட் டுபுகூப் பிட்டுச்
சேண்விழுந் தரற்றி, மாதே!
சங்கைநீர் உனது மெய்யில்
தழலென்கொல் சாற்று கென்றான். (23)

551. கருங்கயல் எறிம தர்க்கட்
கலாவதி யுரைப்பாள் வேந்தே!
நெருங்குவெம் பாவம் எல்லாம்
நீக்கும்அஞ் செழுத்தின் வித்தை
யிருங்கதி பெறுஞ்செ பந்தான்
இலையுனக் கினிமெய்ஞ் ஞானம்
வருங்குரு அருளாற் பெற்றேன்
மாமுலை தழீஇக்கொள் வாயே. (24)

552. அன்றியேல் அரசே! எந்தை
யஞ்செழுத் துணர்ந்தெந் நாளும்
வென்றிசேர் எனது மெய்யை
வீக்கிடிற் சுடுமு னக்கே
யென்றவள் மொழியைக் கேளா
எறும்வலி மடங்க லன்னான்
நன்றெனை உளத்திற் கொண்டு
நள்ளிருட் கங்குல் நீத்தான். (25)

553. பாயிருள் அகல வான்மீன்
பரந்தொளி மழுங்க மிக்கோர்
தூயநற் கடன்கள் ஆற்றச்
சுரும்புபுட் குலங்கள் ஆர்ப்ப
மாயிருங் கமலம் எல்லாம்
மலர்ந்திட உதய வெற்பில்
ஆயிரங் கரங்கள் ஓச்சி
யருக்கன்வந் துதயஞ் செய்தான். (26)

---

550. ஆவா-ஐயோ! அவலக் குறிப்பு. சங்கை-ஐயம்:

552. வீக்குதல்-கட்டுதல் (தழுவுதல்)

553. மிக்கோர்-பெரியோர்.

554. சங்கமு முளைங் துயிர்த்த
 தரளமும் புளினக் குன்றில்
திங்களும் உடுவுங் காட்டத்
 தெண்டிரை கொழிக்கும் **வைகை**
பொங்குநீர் மணிக்கு டத்திற்
 புகர்முகத் தெருத்தங் கொண்டே
யங்கண்வங் துழையோர் ஆட்ட
 வாசநீர் ஆடி னுைல். (27)

555. **க**ன்னல்வெஞ் சிலேவே ளன்னுன்
 காலையிற் கடன்க ழித்து
மின்னவிர் மணிக்கி ரீடம்
 மிலேந்துகுண் டலங்கே யூரப்
பொன்னரி மாலே வீரப்
 பொலங்கழல் அணிந்தி யார்க்கும்
பன்னரும் புழுகு சாந்தம்
 பாளிதம் புயந்தி மிர்ந்தான். (28)

**எழுசீர் விருத்தம்**

556. **சொ**ரிநுரைக் கலுழிப் படிகவெள் வரையில்
 துலங்கிய விலாழிநீர் திரட்ட
விரிகதிர் மணிப்பொற் கலினவாய் அதுக்கி
 விண்படர் கொய்யுளைப் புரவி
பிரிவற இருபத் தெட்டுநாற் புறத்திற்
 பிணித்தபொன் கொடிஞ்சியந் தேரின்
வரிசிலே மதவேள் அனையதா சரதன்
 வருதினி புடைசெலப் படர்ந்தான். (29)

557. **செ**ன்றபின் அருளுங் கலேயுணர் அறிவுந்
 தெளிவும்வாய் மையுங்கொடு புலன்கள்
வென்றிடு வலியும் பொறையுமா தரமும்
 விழுப்பமும் ஒழுக்கமுந் தவமுந்
துன்றிருஞ் சடையுங் கண்டியும் புடையுத்
 தூளன வடிவுமா யெவர்க்கும்
நன்றருள் புரியுங் **கர்கர்**பால் அடைந்து
 நளினமா மலர்ப்பதம் பணிந்தான். (80)

---

554. புளினம்-மணற் குன்று, சங்கம் திங்களுக்கும். தரளம் (முத்து) உடு-நக்ஷத்திரங் களுக்கும் உவமை. புகர் முகம்-யானே; எருத்தம்-கழுத்து, 'யானே எருத்தம் பொலிய'-நாலடி-3.

556. விலாழி-குதிரையின் வாய்நுரை; கலினம்-கடிவாளம்; வருதினி-சேனே.

558. முனிவனும் மகிழ்ந்து நின்வர வென்சொல்
மொழிகென எந்தைநின் அருளால்
துனிவரும் பிறவிப் பவக்கடல் ஒழிப்பான்
துலங்குமஞ் செழுத்துப தேசம்
நனிபெற அடைந்தேன் என்ன, அத் தன்மை
நாடரு முனியுகந் தருளப்
பனியிரு விசும்பிற் பறந்தெரிந் தனமெய்
பற்றுபா தகக்கொடி யினமே. (31)

559. எந்தைநின் அருளாற் புனிதனு யினன்; என்
றேத்திமூ வலஞ்செய்து மலர்தூய்
வந்தனை புரிந்து சுற்கர்பே ரருளால்
மகிழ்விடை கொண்டுதேர் ஏறிச்
சந்தன இளங்கா நின்றுலாந் தென்றல்
தமிழ்மணம் வீசுதென் கூடல்
வந்துதன் மனையில் அற்றைநாள் முதலாய்
மஞ்சமேல் மனைவியை மணந்தான். (32)

560. புரிகுழல் சரிய நுதல்குறு வெயர்வு
பொடித்திடக் குழைபொரு திடறும்
வரிவிழ புரள மணியிட றிரங்க
மலைமுலை வள்ளல்மார் பாடச்
சரிவளை நெருங்க நுணுகிடை துவளச்
சரோருகச் சிற்றடிச் சதங்கை
பரிபுரம் மிழற்ற இதழமு தருந்திப்
பண்ணபோ னகமென மகிழ்ந்தாள். (33)

---

558. கொடியினம்-காக்கைக் கூட்டம்

560. பண்ண போனகம்-பண்ணவர் போனகம்-அமுது.

## அத்தியாயம் 21

### சிவநாம (பஞ்சாக்கர) மான்மியம்-தொடர்ச்சி

#### தருமன் கதை

ஆடவ தேயத்தில் மாலிய நகரில் சுபுத்தன் என்ற அந்தணனுக்கு உத்தம புதல்வன் தருமன் என்பவன். அந்நகரில் பிறிதொரு மறையவன் விபுலன் என்பவனது பிள்ளைகள் சந்திரசேனன், சத்தியமிருது என்பவர்கள். இவர்களுள் சந்திரசேனனும் தருமனும் ஒத்த வயதினர். இவர்கள் இருவரும் உபநயனமானவுடன் பிரமசரிய நிலையில் நின்று துறவி வித்தியாநந்தர் என்னும் குருவினிடம் பணி புரிந்து வந்தனர். குரு இவர்களைப் பார்த்து மகிழ்ந்து "பிள்ளைகளே! நீங்கள் பிரமசரிய நிலையில் நின்றபடியே முத்தியை உதவ வல்ல துறவறத்தை மேற்கொள்ளுங்கள்" என உபதேசித்தார். அவர்கள் இருவரும் தத்தம் தந்தையை வணங்கிக் குரு உரைத்ததைத் தெரிவித்தார்கள். விபுலன் இதைக்கேட்டு ஞானமுள்ள பிள்ளையைப் பெற்றோமே என மகிழ்ந்து 'நீ விரும்பியபடி செய்க' என்று சந்த்ரசேனனுக்கு அநுமதிதர அவனும் மகிழ்ந்து குருவின் சொற்படி துறவியின் கோலம் பூண்டு, காமக் குரோதாதிகளை வென்று, புலன்களை அடக்கி, காய், கனி-கிழங்குகளையே உணவாகக் கொண்டு கானகத்தே இருந்தான். தருமனுடைய தந்தை 'மைந்த! எனது குலத்துக்கு நீ ஒரே பிள்ளை. நீ அறிவாளி; நீ இப்போது துறவு கொள்ளவேண்டாம்; நீ மணம் புரிந்து புதல்வரைப் பெற்று உன் மூப்புப் பருவத்திற் புதல்வர்பால் உன் மனைவியை ஒப்புவித்த பின்னர் துறவு கொள்ளலாம். இந்த இள வயதில் துறவு கொள்ளுதல் தகாது; கெடுதல் வரும்' என்றனர். தருமன் இதைக் கேட்டு மனம் நொந்து கவலை மனத்துடன் இருந்தான். அப்போது பிருகு முனிவர் சுபுத்தனிடம் வர, சுபுத்தன் அவரை வணங்கித் தருமன் 'துறவு பூணுதல் வேண்டும்' என ஒரே சிந்தனையா யிருக்கின்றான். இவனன்றி எனக்கு வேறு மகவு இல்லை; இவன் அறிஞன்; எனது தவப்புதல்வன்; தாங்கள் தான் இவனுக்குப் புத்தி கூறவேண்டும்' எனப், பிருகு தருமனைப் பார்த்துத் 'தருமா! நீ மணஞ் செய்துகொள். இல்லறத்திலும் மேம்பட்ட ஆச்சிரமம் இல்லை. அதனால் நீ யாவருக்கும் பயன்படுவாய்; அழகுங் கற்பும் நிறைந்த கன்னியை மணந்து, இல்லற தருமம் புரிந்து உன் தந்தையின் சொற்படி நடப்பதே உத்தமம்' என்றார். தருமன் 'சுவாமி! எனக்குத் தோழன், என் வயதினன், நற்குணத்தவன் சந்திரசேனன் துறவு பூண்டுள்ளதனால் எனக்கும் இச்சை அவ்வாறே செல்கின்றது; அதனால், துறவே எனக்கு அருளுக' என்றான். பிருகு 'தரும! நீ உத்தம மனைவியை அடைந்து குருவின் அருளால் ஐந்தெழுத்தை நியமத்தொடு செபித்துவந்தால் சந்திரசேனனுக்குக் கூடிவரும் நலன்களிலும் அதிக நலன் உனக்குக் கூடும்; உனது பாதகங்கள் ஒழிந்து போம்' எனக் கூறி ஐந்தெழுத்தை உபதேசித்துத் தருமனுக்கு மணஞ் செய்வித்துச் சென்றார். தருமனும் மைந்தர்களைப் பெற்றுச் சுகமாய் வாழ்ந்து வந்தான். அப்போது ஒருநாள் துறவியான சந்திரசேனன் தருமனைப் பார்க்க வந்து, பழைய நட்பின் உரிமையால், "தரும! நீ துறவு கொள்ளாது இல்லறத்தில் உழன்று என்ன நன்மை பெற்றாய்! இல்லறம் கொடியது. துறவறத்துக்கு இணையாகாது; நான் துறவுபூண்டதனால் பிறவித்துயர் நீங்கிச் சுத்தனாகி, இந்திரனையும் இங்கு வரவழைக்கும் ஆற்றல் அடைந்துள்ளேன்' என்றான். இதைக்கேட்ட தருமன் 'நான் இல்லறத்தில் இருந்தும் யாதொரு குறையும் இல்லாதிருக்கின்றேன்; இந்திராதி தேவர் என் மொழிக்கும் இணங்குவர்; இது உண்மை' என்றான். சந்திரசேனன் 'இதோ பார், இந்திரனை இந்த க்ஷணமே நான் அழைக்கின்றேன்' எனக் கூறி இந்திரனை நினைத்தான். இந்திரனும் சிறிதுபொழுதில் எதிர்தோன்ற அவனைச் சந்திர

*சேனன் அருச்சித்து அனுப்பினான். இதைக்கண்ட தருமன் ஐந்தெழுத்தைச் செபித்து இந்திரனை நினைக்க, இந்திரன் ஒரு நொடியில் வந்து தருமனை ஐந்துமுறை வலம்வந்து போற்றத் தருமன் அவனை அனுப்பினான். அதைக் கண்ட துறவி 'நீ பிரமனை இங்கு அழைத்தால் நானும் அங்ஙனம் அழைப்பேன்' என, தருமன் பிரமனை நினைக்கப் பிரமன் வந்து தருமனை மும்முறை வலம்வந்து துதித்துத் தன்னுலகெய்தினன். தருமன் சந்திரசேனனைப் பார்த்து "நீயும் உன் தவவலிமையாற் பிரமனை அழைப்பாயாக" என்றனன். சந்திரசேனன் அங்ஙனமே பிரமனை நினைக்கப் பிரமன் வரவில்லை. இதைக் கண்டவர்கள் எல்லாரும் தருமனை 'இந்த மாதவன் சிவனேயாவன்' என்று அருச்சித்தார்கள். இதைக் கண்ட சந்திரசேனன் உளம் நடுங்கித் தருமனை வணங்கி 'உனக்கு இந்த மேன்மை எங்ஙனம் வந்தது, சொல்லுக' எனத் தருமன் மகிழ்ந்து 'நிகரிலாத ஐந்தெழுத்தின் பெருமையே இந்த ஆற்றலை எனக்குத் தந்தது; ஐந்தெழுத்துக்கு நிகரான வேறொரு மந்திரம் இல்லை; இது உண்மை; ஐந்தெழுத்தின் பெருமையைச் சிவனே அறிவான்' என்றான். சந்திரசேனன் வியந்து தருமனை வணங்கித் தொண்டு செய்து, அவன்பால் ஐந்தெழுத்துபதேசம் பெற்று, உலகில் இன்புற்று, ஜீவன்முத்தனாயிருந்து, தருமனோடு சிவன் திருவடியைக் கூடினன்.*

## அத்தியாயம் 21.

### பஞ்சாக்ஷர மான்மியம்-தொடர்ச்சி

**எழுசீர் விருத்தம்**

561. **ம**ந்திநின் றுகளித் தெழுந்திளங் கமுகின்
மடலவிழ் பாளைசூழ் பவளஞ்
செந்தழல் எனக்கண் டயன்முடத் தெங்கிற்
செவ்விள நீர்க்குலை சிதறிக்
குந்திநின் றெட்டி நோக்குறா வருக்கைக்
கொழுஞ்சுளை மகவுடன் சுவைத்துச்
சந்திறால் பருகும் **ஆடவ தேயத்**
தலங்கெழு **மாலிய** நகருள். (1)

562. **மு**த்தழல் வளர்க்கும் அந்தணன் **சுபுத்தன்**
முற்செய்நல் தவத்தினால் உதித்த
உத்தம தனயன் **தருமனும்** பெயரோன்
ஓங்குமந் நகரின்மற் றொருவன்
வித்தக மறையோன் **விபுல**னற் சிறுவர்
மேம்படு **சந்திர சேனன்**
**சத்திய ம்ருதுவு** மென்றிரு வர்களில்
தருமனுஞ் சந்த்ரசே னனுமே. (2)

563. இருவரும் ஒத்த வயதின ராகி
ஏத்துப நயனமும் பெற்றுக்
கருதரு பிரம சரியமே யிழைத்துக்
கல்விகள் அநுதினம் பயின்று
பொருவறு பிறவி **வித்தியா னந்தன்**
புகன்றிடும் ஏவல்கேட் டிருந்தார்
மருவிரு வரையுந் துறவிபார்த் திரங்கி
மகிழ்ந்தொரு வாசகம் புகன்றான். (3)

564. மைந்தர்காள்! பிரம சரியமே யிழைத்தீர்
மருவரு முத்தியை யுதவு
விந்தைசேர் துறவு புரிமினென் றுரைத்தான்
மேலவன் உரைத்தசொற் கேளாப்
புந்திகூர் இருவர் அவரவர் தந்தை
பொற்பதம் வணங்கியித் துறவோன்
சிந்தைகூர் கருணை பெருகவே யுரைத்த
திறனெலாங் கட்டுரைத் தனரால். (4)

565. அன்னவன் மொழியை விபுலனுங் கேளா
அருமகப் பெற்றனம் என்று
தன்னுறு தனயற் கனுமதி புரிந்தான்
சந்திர சேனனும் மகிழ்ந்தே
உன்னருந் தந்தை யனுமதி யுடனே
ஓங்கருள் வித்தியா னந்தன்
என்னுநற் றுறவி யருளினால் துறவை
யெய்தியாச் சிரமமே யினனால். (5)

566 சன்னியா சஞ்சேர் ஆச்சிர மத்தில்
தருமமத் தனையுமே யிழைத்து
உன்னருங் காமக் குரோதமா திகளை
யொரீஇவிரைந் தேகுமிந் தியங்கள்
என்னுமிக் கதிசேர் கொய்யுளைப் புரவி
யிழுத்துடன் தன்வசம் நிறுத்தித்
துன்னுகாய் கனிகள் சாகமூ லாதி
துய்த்தருங் கானடைந் திருந்தான். (6)

567. தருமனும் பிதாவின் அருகணைந் தெனக்குச்
சகலசாத் திரங்களும் உணருங்
குரவனுந் துறவி வித்தியா னந்தன்
கொடுத்தருள் கருணையால் துறவு

வருகவேண் டிடுமென் றனன்மகன் உரைத்த
வாசகம் அதனையே கேளாக்
கருணைசேர் சுபுத்தன் அருளுடன் புதல்வற்
கண்டொரு வாசகம் புகல்வான். (7)

568. மைந்த! நீ கேட்டி யெங்குலத் தினுக்கோர்
மதலைநீ யுளதுபின் வேறு
புந்திகூர் புதல்வர் இல்லைநீ மதிமான்
புவிமிசை யாகையால் துறவும்
இந்தநாள் புரிதல் தவிர்திபுத் திரரை
யீன்றபின் புதல்வர்கள் தம்பாற்
பைந்தொடி மதர்க்கண் மனைவியை யிருத்திப்
பன்னரு முதுமைநாள் புரிவாய். (8)

569. அன்றியேல் துறவு புரிந்திடிற் கெடுவர்
ஐயமோ இல்லையா கையினால்
இன்றுநீ துறவாச் சிரமமே தவத்தால்
இழைத்திடத் தகாதெனுந் தந்தை
குன்றிட வுரைத்த மொழிதனைக் கேளாக்
குலைந்துளம் நடுங்கிநொந் திருந்தான்
மன்றல்கூர் பிருகு முனிவன்மா ணவர்கள்
வழிபட அப்பதி யடைந்தான். (9)

570. தொழுதகு முனியைச் சுபுத்தனும் வணங்கிச்
சொற்றனன் எந்தை!கேள் தருமன்
பழுதிலாப் பிரம சாரியா யிருந்து
பன்னருந் துறவுகொள் வேனென்(று)
அழுதழு துரைத்தான் விலக்கினேன் இவனை
யன்றியோர் மகவிலை யிவனே
முழுதுணர் மதிமான் பன்னெடு நாட்கோர்
முதல்வன்முற் செய்தவத் தடைந்தான். (10)

571. இந்தநன் மதலைக் கேற்பபுத் திகளை
யியம்புதி யென்றுரைத் தருளும்
அந்தணன் சுபுத்தன் உரைத்தசொற் கேட்டே
யகமகிழ் பிருகுமா முனிவன்
வந்தனை புரிமா ணவகனாந் தருமன்
வதனநோக் குபுபுகல் கின்றான்
விந்தைசேர் தருமா! மணம்புரி யிதற்கு
மிக்கஆச் சிரமமற் றிலையே; (11)

572. அன்னதால் எவரும் உய்ந்திட வேண்டும்
அழுகுகற் புக்குணங் குலஞ்சேர்
கன்னியை விதியில் தழல்முனம் மணந்து
கைப்பிடித் தில்லறம் புரிந்தே
யுன்னருந் தந்தை வசனமே கேட்கில்
உத்தமம் ஆகுமென் றுரைத்த
மின்னவிர் சடிலப் பிருகுசொற் கேளா
விரும்பிய தருமனின் றுரைப்பான். (12)

573. முநிவனே! எனக்குத் தோழனாய் வயது
முறைமையில் ஒத்திருந் துளத்தில்
துனியறு சந்த்ர சேனனுந் தமமாந்
துறவுபூண் டனனெனக் கதனால்
நனிபெறு துறவில் இச்சையா யினது
நல்குதி யென்றிடுந் தருமன்
இனியசொற் கேட்டுப் பிருகுமா முநிவன்
இயற்றரு மனைவிளித் துரைக்கும்; (13)

574. தருமா!நீ கேட்டி யுத்தம மாகுந்
தையலோ டித்திறம் புரிந்து
குருவின்நல் லருளால் எந்தையைந் தெழுத்துங்
கூறிய நியமமோ டடைந்து
மருவிய தருமத் தொடுதினஞ் செபித்தால்
மற்றுமச் சந்த்ரசே னன்சேர்
பெருமையில் அதிக பலனுனக் குண்டாம்
பெருகுபா தகங்களுந் தவிர்க்கும். (14)

575. என்றுநற் றருமன் தனக்குரைத் தோரைந்
தெழுத்துப தேசமும் புரிந்து
மன்றல்கூர் கன்னி மணம்புரி வித்து
மகிழ்ந்துதன் னாச்சிர மத்தில்
துன்றுபே ரருளாற் பிருகுவும் அடைந்தான்
தூயநன் மதியுணர் தருமன்
மன்றல்செய் தொளிரைந் தெழுத்தடைந் தவள்பால்
மைந்தர்பெற் றநேகநாள் இருந்தான். (15)

576. தொல்லுல கினிற்பின் சந்திர சேனத்
துறவியும் அப்பதி யடைந்து
மல்லலஞ் செல்வத் தருமனைக் கண்டு
வாலிப நட்பினால் ஒருசொல்

ஒல்லையில் உரைத்தான் தருமா!நீ துக்கம்
ஒழிந்திடுந் துறவைவிட் டந்தோ
மெல்லியல் தனைவேட் டெப்பயன் அடைந்தாய்
வெய்துறும் என்றும், இல் லறமே. (16)

577. கண்ணகன் உலகம் இந்த இல் லறமே
கருதருந் துறவினுக் கிணையன் (று)
எண்ணரும் பந்தம் அனைத்துமோ வில்லா
ஏத்தருந் துறவுநான் அடைந்து
துண்ணெனும் அரந்தைப் பவக்கடல் கடந்து
சுத்தமா யிருந்தனன் அதனல்
விண்ணர சினனு தியஅம ரரையும்
விளித்தழைப் பிப்பனென் றுரைத்தான். (17)

578. அம்மொழி யதனைத் தருமனுங் கேளா
அறைகுவன் எனக்குமில் லிடத்திற்
கொம்மைவெம் முலையைத் தழீஇயிருக் கினுமோர்
குற்றமும் இல்லையிந் திராதி
மெய்ம்மைவா னவரும் என்மொழி கேட்பார்
விளம்பிய துண்மையென் றுரைத்துத்
தம்மையே வியந்த தருமனை நோக்கிச்
சந்திர சேனனும் உரைப்பான். (18)

579. விரிசுடர் வயிரப் படைவலன் ஏந்தும்
விண்ணர சினைத்தவ வலியாற்
பரிவிலிக் கணமே யழைக்கிறேன் என்று
பகர்ந்துள மீதினில் நினைந்தான்
தெரிவரும் அந்த வேலையிந் திரனுஞ்
சிறுவரை யிவனயல் அடைந்தான்
அரிதினெய் தினனென் றெழுந்தருச் சித்தே
யனுப்பினன் விண்ணின்மீ ளவுமே. (19)

580. பின்னர்தன் மனும்ஐந் தெழுத்தையே செபித்துப்
பெய்முகில் ஊர்தியை நினைத்தான்
அன்னபோ தினிலந் தெழுந்தின்நல் வலியால்
அமரர்கோன் கதுமென அடைந்தான்
பொன்னுல கிறையை வலம்புரிந் திறைஞ்சிப்
போற்றவே அனுப்பினன்; துறவி
தன்னுளத் தறிந்து வியந்துநான் முகனைத்
தன்னுறு பதத்திலே யழைத்தால், (20)

---

579. சிறுவரை-சிறிது நேரத்தில்.
580. தன்மனும்-தருமனும்; முகிலூர்தி-இந்திரன். கதுமென-விரைவில், ஐவலம்புரிந்து-ஐந்து முறை வலம் வந்து.

581. அன்னது புரிவேன் என்னநற் றருமன்
அயனையும் நினைத்தனன் அப்போ(து)
உன்னரும் பிரமன் வந்துபூ சுரனை
யுவந்துமூ வலஞ்செய்து துதித்துத்
தன்னுறு பதத்தில் எய்தினன் தருமன்
சந்திர சேனனை நோக்கிப்
பன்னரு நீயுந் தவத்தினல் அயனைப்
படிமிசை யழையெனப் பகர்ந்தான். (21)

582. சந்திர சேனன் சதுமுகக் கடவுள்
தனையுளத் துன்னினன்; நினைக்கும்
அந்தவே லையினில் விரிஞ்சனும் அங்கண்
அடைந்திலன்; அதனையெல் லோரும்
புந்தியில் நினைந்து தருமனை யுருகும்
பொன்னவிர் கடுக்கையஞ் சடையோன்
இந்த மாதவனென் றருச்சனை புரிந்தார்
இதனையத் துறவியு முணர்ந்தான். (22)

583. சிந்தையில் நடுங்கித் தருமனை யிறைஞ்சிச்
செப்புக இந்தமேன் மைகள்தாம்
வந்ததிங் குனக்கெங் கிலுமென வுரைத்த
வாசகங் கேட்டவ னுடனே
புந்தியுள் மகிழ்ந்து தருமனும் உரைப்பான்
பொருவில்அஞ் செழுத்துமான் மியத்தால்
வந்ததேயிதற்கு நிகர் சொலில் வேறோர்
மந்திரம் இல்லையீ துண்மை. (23)

584. அளப்பரும் இதனின் மான்மியஞ் சிவனே
யறிகுவன் என்றிடும் அவன்சொல்
உளத்தினில் வியந்து யோகியாந் துறவோன்
உண்மைசேர் தருமன்நல் தாளில்
துளக்கற வணங்கி ஐந்தெழுத் தவன்பால்
தொண்டுசெய் திறைஞ்சியே பெற்று
வளத்தினை மருவு தருமனோ டுலகின்
மகிழ்ந்துயிர் முத்தனு யிருந்தான். (24)

583. எங்கிலுமென-எங்கிருந்து என்ன.

585. கங்கையும் பிறையும் அறுகும்வெள் ளெருக்குங்
கட்செவிப் பாந்தளும் அணிந்த
சங்கரன் உலகை யடைந்தரும் போகந்
தன்னிகர் இன்றியே யருந்திப்
பொங்குநல் லுணர்வாற் சிறிதுநா ளிருந்து
போற்றருந் கருமமொ டுவந்து
மங்கையோர் பாகன் அடியவர்க் கிரங்கி
மகிழ்ந்தருள் மலர்ப்பதம் அடைந்தான். (25)

---

## அத்தியாயம் 22.

### சிவநாம (பஞ்சாக்கர மான்மியம்) தொடர்ச்சி

#### சூரிய சன்மா கதை: கல் இடபம் புல் உண்டது.

சூதமுநிவர் உரைக்கின்றார். ஐந்தெழுத்தைப் பற்றிய பிறிதொரு கதை உளது, உரைக்கின்றேன்: **கௌசிக தேசத்தில் விக்ரம நகரில்** வஞ்சகம் பொருந்திய **மானதன்** என்றொரு மறையவன் இருந்தான். அவன் தவநிலையில் இருந்த **சூரிய சன்மா** என்னும் அந்தணரை வஞ்சனையால் ஜெயிக்கவேண்டும் என எண்ணங்கொண்டு அவரிடம் வந்து வணங்கித் "தவத்தீர்! தமியேனுக்குத் தாங்களே கதி! தாங்கள் இட்ட வேலைப் புரிய விரும்பும் அடிமை நான்" என்ன, சூரிய சன்மா மகிழ்ந்து அவனை ஏற்றுக்கொண்டார். சமயம் பார்த்திருந்த மானதன் ஒருநாள் சூரிய சன்மாவிடம் வந்து "பெரியீர்! நடுநிசி எல்லாம் நான் தனியே வெளிப்புறத்திருந்து மிருகங்கள், திருடர்கள் வாராதவண்ணம் காவல் புரிவேன். பக்கத்தில் காடு இருப்பதனால் புலி வரக்கூடும்; தவச்செல்வராகிய நீங்கள் வீட்டின் உட்புறத்தில் தூங்காமல் இருங்கள்" எனக்கூறி, அவரை உள்ளே இருக்கச்செய்து அன்றிரவு, வீட்டுப் பசுவை வெளிப்புறங் கொண்டுவந்து, அதன்மேல் புலித்தோலை நன்றாகப் போர்த்து அதன் உடலை மறைத்து "ஐயோ! முற்றத்தில் புலி வந்துவிட்டதே!" எனக் கூவிச் சூரிய சன்மாவை அழைத்து அவரிடம் வில்லையும் அம்பையும் கொடுத்துப் "புலியைக் கொல்லுங்கள், கொல்லுங்கள்" எனக் கூறிப் புலியைக் காட்டிவிட்டுத் தான் வீட்டுக்குள் புகுந்தான். சூரிய சன்மா அப்புலியை அம்பெய்திக் கொன்றார்.

வீட்டுக்குள் நுழைந்த மானதன் சூரிய சன்மாவின் மனைவியிடம் போய் "அம்மா! கள்வர் பயம் அதிகமாயிருக்கிறது. நீங்கள் உங்கள் வீட்டைவிட்டு உங்கள் மகனார் வீட்டில் போய்த் தூங்காதிருங்கள். உங்கள் மகனும் மருமகளும் உங்கள் வீட்டில் வந்திருக்கட்டும்" எனக் கூறி, அங்ஙனமே அவர்களை இருக்கச்செய்து, சூரியசன்மாவின் மகனை நோக்கி "மகனே! யாராவது அழைத்தால் நீயும் உன் மனைவியும் மௌனமாயிருக்கவேண்டும்" எனச் சொல்லிவைத்தான். அதன்பின் மானதன் சூரிய சன்மாவிடம் போய் 'வேத பாரகரே! உங்கள் மனைவி சோர புருஷனுடன் லீலை செய்து கொண்டிருக்கின்றாள்; தாங்கள் நண்பராயிற்றே எனக் கூறினேன். இது சத்தியம். நீங்கள் போய்ப் பார்த்துத் தக்க தண்டனை விதியுங்கள் என்று கூறி வாள் ஒன்றை அவர் கையிற் கொடுத்தனுப்பினான். சூரிய சன்மா தன் மனைவியைக் கூப்பிட உள்ளே இருந்த மகனும் மருமகளும் மானதன் சொற்படி மௌனமாயிருந்தார்கள். சூரிய சன்மா கோபமுற்று வீட்டின் மேற் கூரையைப் பிடுங்கி உள்ளே குதித்து இருட்டிலிருந்த தன் மகனையும் மருமகளையும் வாளாற் கொன்று வீழ்த்தான்.

அடுத்த நாள் காலை வெளி வாசலுக்கு வரும் போது அடுத்த வீட்டிலிருந்து தன் மனைவி வரக் கண்ட சூரிய சன்மா அற்புதம் உற்று வீட்டுக்குள் ஓடிப் பார்க்க வாளால் மாய்ந்து கிடந்த மகனையும் மருமகளையும் கண்டார், ஓ வென்றலறினார், அம்பு பட்ட மானெனத் துடித்தார், முன் செய்த வினையோ என்று ஏங்கினார். பின்னர், உள்ளந் தெளிந்து ஐந்தெழுத்தைச் செபித்தார். அதன் பின், வெளியே முற்றத்துக்கு வர, அங்கு இறந்து கிடந்த பசுவைக் கண்டு பின்னும் துடி துடித்து 'என் செய்கேன்' எனப் பெருந்துயர் கொண்டு துயரெலாம் ஒழிக்கும் ஐந்தெழுத்தைப் பின்னும் ஜெபித்தார். இதற்குள் மானதன் ஊரிலுள்ள மறையோர் சபையிடைச் சென்று "சூரிய சன்மா நேற்றிரவு பசு வதை புரிந்து, தன் மகனையும் மருமகளையும் கோபத்தால் வாள் கொண்டு கொன்று பெரும் பாதகங்களுக்கு ஆளானான். அவனை ஊரை விட்டு அகல ஓட்டுமின்" என்றான். மறையவர் சூரிய சன்மாவை வரவழைத்து "இந்தப் பெரும் பாதகங்களை நீ இழைத்தமையால் இந்த க்ஷணமே ஊரை விட்டு ஏகுக; ஏகாவிடில் உனக்குத் தண்டனை விதிப்போம்" என்றனர். இதைக் கேட்ட சூரிய சன்மா 'மறையோர்களே! கேளுங்கள். யான் புத்திபூர்வமாகச் செய்த கொலைகள் அல்ல இவை; அறியாமையால் நிகழ்ந்தவை; பொழுது விடிந்த பின்பு தான் உண்மையை உணர்ந்தேன். உணர்ந்தவுடனே சிவன் ஐந்தெழுத்தைச் செபித்தேன், அதனால் ஒருசிறிது பாவமும் எனை அணுகாது' என்று சொல்ல, மறையோர்கள் 'உன்னைப் பாவஞ் சூழாதது உண்மையாயின் நீ கொடுக்கும் புல்லை ஒரு ரிஷபம் உண்ணட்டும்; உன்னிடம் புண்ணிய நிலையே உளது என்று நாங்கள் தெரிந்து கொள்ளுகின்றோம்' என்றார்கள். இங்ஙனம் சொல்லக் கேட்ட சூரிய சன்மா 'அந்தணர்களே! உயிருள்ள ஏறு புல் உண்டால் நான் செய்த பாவத்துக்குச் சுத்தியில்லை. கேதார நாதர் திருக்கோயிலின் மதில் மீதுள்ள கல் இடபங்கள் யான் கொடுக்கும் புல்லைத் தின்றால் என்னிடம் பாதகம் ஒன்றும் சேர இல்லை என்று அறிந்து கொள்ளுங்கள்' என்றார். இதைக் கேட்ட அந்தணர்கள் மகிழ்ந்து 'இது மெய்யான சோதனை தான்' என்று கூறி அங்ஙனமே செய்க என்றார்கள். சூரிய சன்மா புல்லைக் கொண்டுவரச்சொல்லிக், கேதார நாதர் சந்நிதியின் முன் வைத்து, இரண்டு கைகளையும் கூப்பி நின்று, ஐந்தெழுத்தைச் செபித்து, "மதில் மேல் உள்ள இடபங்களே! சித்திர ரூபமாயுள்ள இடபங்களே! கோபுர சிகரத்தில் உள்ள இடபங்களே! ஐந்தெழுத்தின் தியானத்தையே பூண்டு, உரை உணர்வற்று, மவுன நிலையில் நின்று, சிவத்தை உளத்திலிருத்தும் நீங்கள் என்னிடம் பிரமகத்தியாதிய பாதகம் இல்லையாயின், ஐந்தெழுத்தின் பெருமையால், விரைவில் வந்து நான் தரும் புல்லை எல்லாம் நீங்கள் அருந்துங்கள்" என்று கூறிப் பின்னும் ஐந்தெழுத்தைச் செபித்தார். உடனே அங்கிருந்த சிலை உருவில் இருந்த இடபங்களும், சித்திர உருவில் இருந்த இடபங்களும், அவரருகே வந்து அவர் கொடுத்த புல்லை எல்லாம் அருந்தி, சாணம் இட்டும், முக்காரம் போட்டு ஆர்த்தும், அங்கிருந்த மறையோர்களை மோந்தும், பார்த்தும், வலம வந்தும் தத்தம் இடங்களிற் போய்ப் பழையபடி மறைந்து வீற்றிருந்தன. இந்த அற்புதத்தைக் கண்ட மறையோர்கள் அச்சம் உற்றுச் சூரிய சன்மாவை 'இவர் ஒரு தேவர், பாபமே அண்டாதவர்' எனப் பரவி 'நாங்கள் இழைத்த அபராதத்தைப் பொறுத்தருளுங்கள்; ஐந்தெழுத்தின் பெருமையைத் தாங்கள் ஒருவரே அறிவீர்கள்' எனக் கூறிப் பணிந்தார்கள். அப்போது சூரிய சன்மாவின் மனைவி 'நாதா! உயிரிழந்த மகனையும், மருமகளையும், பசுவையும் எழுப்பித்தருளுக' என வேண்டினள். மறையோரும் அங்ஙனமே வேண்டினர். சூரிய சன்மாவும் ஐந்தெழுத்தை ஓதி, "வேதாகமங்கள் உரைக்கும் பொருளே உண்மையாய் என்றும் நிலைத்திருக்கும் என்றால், மகனே! மருமகளே! நறும் பால் தரும் பசுவே! நீங்கள் தூங்கி எழுந்தது போல உயிர் பெற்று எழுந்திருங்கள்' எனக்கூறிக் கைகூப்பிக் கடவுளைத் தொழுதார். அப்போது அவர் மைந்தனும், அவன் மனைவியும், பசுவும், உடனே உயிர்பெற்றெழ யாவரும் வியப்புற்றனர். சூரியசன்மாவை இவர் சிவனே ஆவர் என மதித்துப்போற்றினர்; வணங்கினா; உபசார மொழிகள் கூறி மகிழ்ந்தனர். சூரியசன்மாவும் ஐந்தெழுத்தையே கடைப்பிடித்துச் செபித்துப் போகமெல்லாம் துய்த்து, விண்ணோர் மலர்மாரி பெய்ய விண்ணுலகடைந்து அங்குள்ள ருத்ர கணங்களுடன் மகிழ்ந்திருந்து ஈற்றில் சிவன் சேவடி கூடினர்.

மானதன் அவமானப்பட்டவனும் ஊரைவிட்டகன்று, பஞ்சாக்ஷரம் செபித்த அடியாருக்கு இடர் செய்த பெரும் பாவத்தால் புழு நெளியும் பிணியாளனும் வேதனைப் பட்டு இறந்து இன்னும் நரகில் அழுந்தித் திகைக்கின்றான். ஐந்தெழுத்தை ஓதாதார் நோய்க்கும் நரகுக்கும் ஆளாவர்; ஐந்தெழுத்தை ஓதுபவரும், ஓதுபவரிடம் அன்பு பூண்டவரும் சிவலோகம் சேர்வர். ஆதலால், அன்பும் பொறையும் கொண்டவர்களே! நீங்கள் ஐந்தெழுத்தைச் செபிப்பீர்களாக"— (எனச் சூதமுனிவர் கூறிமுடித்தார்).

## அத்தியாயம் 22.

### சிவ நாம (பஞ்சாக்கர) மான்மியம் தொடர்ச்சி

#### சூரிய சன்மா கதை. (கல் இடபம் புல் உண்டது)

எழுசீர் விருத்தம்

586. **வா**தரா யணன்பே ரருளின்,ஈ ரொன்பான்
  வகைபெறு புராணநூல் உரைத்த
சூதமா முனிவன் உரைப்பன்நல் லருள்மீ
  தூரஆற் றருந்தவம் புரிவீர்!
ஏதநீத் தருள்ஐந் தெழுத்துறு காதை
  யின்னுமொன் றுரைப்பல்தண் டலைசூழ்
மேதகு வளஞ்சேர் **கௌசிக தேய**
  **விக்ரம நகரி**லோர் மறையோன், (1)

587. வஞ்சனுங் கொடிய **மானதன்** தவத்தின்
  மரீஇயது **ரியசன்மாச்** சரணக்
கஞ்சமா மலரில் இறைஞ்சிநற் றவத்தோய்!
  கவலையுற் றிடுந்தமி யேற்குன்
தஞ்சமே யன்றி வேறிலை யென்று
  சாற்றிவஞ் சனையலா திவனை
இன்சொலாற் செயிக்கப் படாதென நினைந்திட்
  டேவல்கே ளடிமைநான் என்றான். (2)

588. அவன்மொழி கேட்டுச் சூரிய சன்மா
  ஆதரம் பெருகநம் பின்மற்(று)
இவனைவஞ் சிக்க வஞ்சகன் காலம்
  என்றெனா நோக்கிநின் றுரைப்பான்
தவனனோர் முனியே! நள்ளிர வெல்லாந்
  தமியனேன் வெளியினில் இருந்து
பவனனு தியபல் விலங்குசோ ரர்கள்செய்
  பருவர லடாதுகாத் திடுவேன். (3)

---

588. தவனன்-சூரியன்; பவனன்.பவனம்.பாம்பு-; பருவரல்-துன்பம்.

589. அருந்தவக் கிழமை யெய்தியாய்! கேண்மோ
அடவியூர் அடுத்திருந் ததனுல்
வருந்திட வுயிர்கள் குடித்திடும் பிலவாய்
வரிப்புலி வந்திடும் நீபோய்த்
திருந்திய மனையு ளிருந்திமைத் திடாது
தேர்ந்துகண் விழித்திடு கெனவே
பொருந்திய படிநின் றுரைத்துமா பாவி
புறத்தினிற் பசுவைவிட் டனனே. (4)

590. பெற்றமீ தினில்நீள் வரியுடற் பிலவாய்ப்
பெரும்புலித் தோலினை விரித்து
முற்றுமெய் மறைத்து வைத்துநின் றந்தோ
முற்றமீ தினிற்புலி யடைந்த(து)
இற்றைநாள் இரவில் என்றுவில் லோடம்
பெடுத்தருந் தவன்கையிற் கொடுத்துச்
செற்றமோ டடுநீ யென்றதைக் காட்டித்
திரும்பவஞ் சகன்மனை புகுந்தான். (5)

591. சூரிய சன்மன் அதுதனைக் கண்டு
துணைவிளக் கெரிவிழிப் பேழ்வாய்க்
கூருகிர்ப் புலியீ தென்றுளத் துன்னிக்
கொடுஞ்சிலை வளைத்துநாண் ஏற்றிச்
சோரிசா ணையினுல் துடைத்துநெய் குளித்த
சுடரயில் வாளிதொட் டெய்தான்
பாரினிற் பசுவீழ்ந் துடலது பதைத்துப்
பகழியால் உயிரிறந் ததுவே. (6)

592. வஞ்சகம் இழைக்கும் மானதன் உளத்தில்
மற்றொரு காரியம் நினைத்து
விஞ்சுசூ ரியசன் மாவினன் மனையாள்
விரும்பியுட் கொள்ளநட் பினர்போல்
இன்சொலால் அவளோ டொருமொழி யுரைத்தான்
ஏந்திழாய்! கள்ளராற் பயமுண்(டு)
அஞ்சிநின் மனைவிட் டுன்மகன் உறையுள்
அடைந்து துஞ் சிடாதிரென் றுரைத்தான். (7)

---

590. பெற்றம்-பசு.

593. பின்னரும் உரைப்பான் நின்மகன் மணந்த
பெய்வளை யோடுநின் மனையில்
மன்னியே யிருக்க வேண்டுமென் றுரைத்து
மைந்தன்மா மனையினில் இவளை
யுன்னரும் விருப்பால் அனுப்பினன் மகனை
யொண்டொடி யோடவன் தந்தை
நன்னெறி மனையில் வைத்துமா னதன்பின்
நாடரும் புதல்வனோ டுரைப்பான். (8)

594. கங்குலில் மதலாய்! யாவனேல் உன்னைக்
கவடிலா தழைக்கில்,ஏ னென்னு(து)
அங்கண்மா மனைவி யோடுநீ மவுன
மாகவே யிருக்கவென் றுரைத்துப்
பங்கமே புரியும் வஞ்சகன் உலகம்
பரவுசூ ரியசன்மா விடம்போய்த்
தங்குணங் குன்று வேதபா ரகநின்
தனிமனை சோரன்வந் தடைந்தான், (9)

595. வந்திடும் அந்தக் கள்ளனும் மணாளன்
மகிழ்ந்திட நின்மனை யாட்டி
யந்தரங் கமதாய் லீலைசெய் தந்தோ
அச்சமொன் றின்றிமே யினளென்
சிந்தையில் அதுகண் டென்னுயிர்த் துணையாய்ச்
சேருநண் பா!வுனக் குரைக்க
இந்தவே ளையினில் நீயபி மானி
யென்றுநான் கதுமென அடைந்தேன். (10)

596. சத்தியம் நீதி வளுக்குநீ யேற்ற
தண்டமே புரிதியென் றுரைத்துப்
பத்தியாய்ச் சுடர்வை வாளினைக் கொடுத்துப்
பரபரப் போடவன் தன்னைச்
சித்திர மனையில் விடுத்தனன் உள்ளந்
தெளிந்துசூ ரியசன்மா இரங்கி
மைத்தடங் கண்ணி மனைவியை விளித்தான்
மைந்தனும் மவுனமா யிருந்தான். (11)

597. இறந்திட வருநாள் அணுகலால் வஞ்சன்
இயம்பிய வாசகம் உளத்தில்
மறந்திடா துட்கொண் டிருந்திடு மைந்தன்
மவுனமா கையில் தழல் ஓம்பி

யறந்திகழ் தருஞ்சூ ரியசன்மா வும்,இல்
அடைந்துயர் விடங்கமே பிடுங்கித்
திறந்துவீழ்ந் தவள்சோ ரப்பதி யெனத்தன்
சேய்மரு மகளுடன் தடிந்தான். (12)

598. மற்றைநாள் மறையோன் வைகறை யெழுந்து
வாயில்நின் றும்புறப் பட்டான்
குற்றமே யின்றித் தன்மனை நின்றுங்
கோற்றொடித் தன்மனை யாட்டி
முற்றமீ தினில்வந் தடைந்தவட் கண்டு
முந்தியே தன்மனை புகுந்தங்(கு)
எற்றிடும் வாளால் மருமக ளோடே
யிறந்திடு மைந்தனைக் கண்டான். (13)

599. கண்டபின் அரற்றி வாளியால் வீழ்ந்த
கலையென வுடல்பதை பதைத்துக்
கொண்டுவீழ்ந் துயிர்த்து நிலந்துழாய் உள்ளங்
குலைந்துநின் றேங்கியே விம்மி
மிண்டியே நெடுமூச் செறிந்துமெய் தளர்ந்து
மெலிந்துவாய் விட்டழு தழுது
பண்டைநாள் விதியோ என்றுளந் தெளிந்து
பரமனைந் தெழுத்துமே செபித்தான். (14)

600. கொடிமனை யினுமீ ளப்புறப் பட்டுக்
கொடுஞ்சரத் தாலுயிர் இறந்து
தடியுடன் இரத்தங் குளித்திடு பசுவைத்
தடங்கணாற் கண்டனன் பின்னும்
நெடிதுடல் பதைத்திட் டென்செய்கேன் என்று
நீப்பருந் துயரமீக் கொண்டு
முடிவிலா அரந்தை யொழிக்குமைந் தெழுத்தை
முகமலர்ந் தருளினாற் செபித்தான். (15)

601. மானதன் மறையோர் இருந்தபே ரவையில்
மனமகிழ்ந் தொல்லையில் அடைந்தே
ஈனமா கியசூ ரியசன்மா நென்னல்
இராத்திரி கோவதை புரிந்துந்
தேனிகர் மொழியாள் மருமக ளையுந்தன்
சேயையும் வெஞ்சினம் புழுங்கிக்
கூனுறு வடிவாள் கொடுதடிந் தனன்,நீள்
குற்றமா பாதகன் இவனே, (16)

597. விடங்கம்-வீட்டின் முகடு.
600. தடி-மாமிசம். அரந்தை-துன்பம்.
601. நென்னல்-நேற்று; முன்நாள்.

602. அந்தணீர்! இவனை யுங்கள்மா பதிவிட்
டகலவே யோட்டிவிட் டிடுவீர்
நிந்தனை தவிர என்றமா னதன்சொல்
நேயமோ டப்பதி மறையோர்
புந்திதான் மகிழ யாவருங் கேட்டப்
போதுசூ ரியசன்மா வைப்பார்த்(து)
இந்தமா பாவம் இழைத்ததால் ஊர்விட்
டேகுக இக்கணம் என்றார். (17)

603. அன்றியேல் உனக்குத் தண்டமே வருமென்
றறைந்திடும் அந்தணர் மொழிகேட்(டு)
என்றும்ஆ தரஞ்செய் சூரிய சன்மா
இயம்புவான் அந்தணீர்! கேண்மின்
கன்றியான் இரவில் அக்கொடும் பாவங்
கருத்தறிந் திழைத்தவன் அன்று
நின்றறி யாது புரிந்தனன் உண்மை
நிகழ்த்துவேன் கேண்மினென் றுரைத்தான். (18)

604. நள்ளிருள் விடிந்த பின்னிவர் மரித்து
நன்மனை கிடந்தது கண்டு
கள்ளவிழ் கடுக்கை யண்ணலைந் தெழுத்துங்
கருத்தினிற் செபித்தனன் அதனால்
எள்ளரும் பாவஞ் சிறிதுமே யில்லை
யென்றிடும் இவன்மொழி கேளா
விள்ளரு மறையோர் சொல்வர்நின் னிடத்தில்
மிக்கபா தகமிலா திருந்தால், (19)

605. பரிந்துநீ கொடுத்த புல்லைவெண் மருப்புப்
பால்நிற மழவிடை குளகா
யருந்திடில் தருமம் ஆகுமென் றுரைத்தார்
அந்தணர் உரைத்தசொற் கேட்டுத்
திருந்தநன் குறுசூ ரியசன்மா வுரைப்பான்
செந்தழல் அந்தணீர்! உயிரோ(டு)
இருந்தவ றருந்தில் யான்செய்பா வத்துக்
கேற்றிடுஞ் சுத்திதான் இலையே. (20)

606. நஞ்சமுண் டிருண்ட கண்டமுங் கடுக்கை
நாண்மலர்ச் சடிலமுங் கொண்டே
யஞ்சலென் றருள்கே தாரநா தன்றன்
ஆவர ணத்தின்மீ திருக்குஞ்

---

605. குளகு-விலங்கின் இலையுணவு.

செஞ்சிலை யுருவி டபங்களியான் கொடுத்த
செய்யபுல் தின்றிடில் அப்போ(து)
அஞ்சுபா தகமும் இல்லையென் றறிவீர்
ஐயமற் றில்லையென் றுரைத்தான். (21)

607. அன்னவா சகங்கேட் டந்தணர் மகிழ்ந்தே
யளப்பரும் பாதகந் தொலைக்கும்
நன்னெறி பெறுசோ தனையிது என்றே
நாடி நின் றன ரவ்வே லையினில்
தன்னிகர் இலாத சூரிய சன்மா
தன்னுழை யோர்களை யனுப்பித்
துன்னுபுல் லழைப்பித் தோங்குகே தாரச்
சோதிசன் னிதியின்முன் வைத்தான். (22)

608. இருகைநன் மலருங் கூப்புபு நின்றே
யெந்தையைந் தெழுத்தையுஞ் செபித்துப்
பொருவரு மதில்மேல் வருமிட பங்காள்!
பொருந்துசித் திரவிட பங்காள்!
கருணையங் கடல்கோ புரசிக ரத்திற்
கதித்துநின் றிடுமிட பங்காள்!
பொருவிலைந் தெழுத்துச் சரித்திறை தியானம்
பூண்டுதத் துவத்தையும் உணர்ந்தே, (23)

609. உரையுணர் விறந்து மவுனமாய்ச் சிவத்தை
யுளத்திலே யிருத்திடு நீவிர்
புரையற எமக்குப் பிரமகத் தியினிற்
பொருந்துபா தகமிலா திருந்தால்
கரையில்ஐந் தெழுத்து மான்மியம் அதனாற்
கதுமென நீவிரெல் லோரும்
விரைவுடன் கூடி வந்துநான் தந்த
மிகுந்தபுல் அருந்துமின் என்றே, (24)

610. கட்டுரைத் தென்றும் உத்தம மான
கடவுள்ஐந் தெழுத்துமே செபித்தான்
மட்டற அவணில் இருந்தகல் லிடபம்
மதிலின்மே லியலிட பங்கள்
தட்டற வொளிர்சித் திரவிட பங்கள்
சகலமும் அவன்மொழி கேளா
இட்டமோ டிரங்கி யவனரு கணைந்துள்
ஏக்கறுத் தத்திறே டெதிர்ந்தே, (25)

606. ஆவரணம்-கோயில் திருமதிற்சுவர். விடபம்-இடபம். அஞ்சு-அஞ்சத்தக்க.
610. அவண்-அவ்விடம். ஏக்கறுதல்-ஆசையொடு தாழ்தல் (விரும்புதல்)

611. சூரிய சன்மாக் கொடுத்தபுல் அனைத்துந்
துகளறத் தின்றுகோ மயமிட்(டு)
ஆரியன் மகிழ வெண்டிசா முகத்தோ
டண்டகோ ளகைவெடி பட ஆர்த்(து)
ஏரியன் மறையோர் யாரையும் மோந்திட்
டினிதுபார்த் துடன்வலம் புரிந்து
சீரிய தத்தம் இடங்களில் முன்போற்
சென்றுவீற் றிருந்துமே வியவே. (26)

612. இந்தஅற் புதத்தைக் கண்டுவே தியரெல்
லோருமே பயந்துதே வாகி
வந்தசூ ரியசன் மாவைவெம் பாவ
வல்வினை விட்டகன் றவரென்(று)
ஐந்தெழுத் துண்மை தேர்ந்துபூ வுறவே
யடிமுறை பணிந்திருக் கின்றார்
எந்தைசிற் றடியேஞ் செய்யப ராதம்
யாவையும் பொறுத்தருள் என்றார். (27)

613. பின்னரும் எந்தாய்! நின்பெரு மையுமெய்ப்
பேரருள் ஐந்தெழுத் ததைவின்
உன்னரும் நிகரில் மான்மியம் அனைத்தும்
உனையலா தாரறி குவரென்(று)
இன்னிசை யதனாற் புகழ்ந்துகை கூப்பி
யிருந்தனர் அப்பகற் கற்பு
மன்னிய மனைவி கணவனைப் பார்த்தோர்
வாசகம் உரைத்தல் மே யினளால். (28)

614. கடவுள்!கேண் மோ!ஐந் தெழுத்தினால் இடபங்
களைத்தரும் புல்லருந் தியது
திடமுள ததனால் இறந்தசே யையுநின்
செய்யநன் மருமகள் தனையும்
மடிநிறை நறும்பாற் பசுவையும் எழுப்பி
மகிழ்ந்தருள் என்றவள் மொழிகேட்(டு)
உடன்மறை யோரும் எந்தைநிற் கரிதோ
ஒல்லைவீந் தவரெழுப் புதியால். (29)

கலி விருத்தம்

615. என்றோதிய மறையோர்மொழி யிதயங்களி கூர
நின்றாதரத் தொடுங்கேட்டைந்து நெடும்பாதகம் அகற்றுங்
குன்றாதஐந் தெழுத்தும்முளங் குறித்தேயுடன் செபித்து
மன்றார்தவ மதலாய்!மரு மகளே!என வுரைத்தான். (30)

616. பின்னும்புனிற் றிளங்கன் றுளிப் பெருகுஞ்சுவை நறும்பால்
துன்னுங்கதிர் வடிவேலண்ணல் சோலைமலை யருவி
யென்னும்படிச் சுரந்தேசொரி யிளங்கொற்றிநற் பசுவே
யுன்னுஞ்சிவன் ஓரைந்தெழுத் துணர்ந்தோற்கிலை பவமே. 31

617. என்றேயரு மறையாகமம் இசைக்கும்பொருள் அனைத்துங்
குன்றாதுநிச் சயமாயிடிற் குளிர்பூந்தவி சிடையே
நின்றார்துயில் எழுந்தாலென நீவிரெழுந் திருந்து
கன்றாதுறும் என்றைம்பதந் கைகூப்பிநின் றுரைத்தான்.(32)

618. அப்போதுமைந் தனுமைந்தனின் அறஞ்சேர்மனை யாளும்
முப்போதுந றும்பால்சொரி முதிரா இளம் பசுவும்
கைப்போதினில் உறுநெல்லியங் கனிபோலவே காண
மெய்ப்போதமொ டெழுந்தார்கண்டு வியந்தாரருள் பயந்தார்.

619 மறையோரனை வோருங்கண்டு மகிழ்கூரிய சன்மன்
பிறையோடர விதழித்தொடை பிணங்குஞ்சடை யோனென்
றுறையாதரத் துடனிச்சயம் உளத்திற்கண்டு பணிந்து
முறையோடவ ரவரில்லிடை முகமன்சொலி நடந்தார். (34)

620. அருள்கூரிய சன்மாஎழுத் தைந்துச்சரித் தென்றும்
வருபோகமெல் லாந்துய்த்தொளிர் மானத்துநன் மனைசேய்
திருவோடிரு டியர்பாரிடந் தேவர்பர வப்பூ
விரைமாரிகள் பொழியப்பணை மிக ஆர்ப்பவிண் ணடைந்தான்.

621. அங்கண்ணுருத் திரசீர்க்கணம் அதனேடெண்ணில் காலம்
எங்கும்முள மகிழ்ச்சிமல்க இருந்தேசெழும் பவளம்
பொங்குங்கொடி விழுதேவிட்டுப் பொலிந்தாலெனச் சடைமேல்
திங்கள்மிலைந் தருள்வோன்பதஞ் சேர்ந்தேகளி கூர்ந்தான்.

---

616. வடிவேலண்ணல் சோலைமலை-பழமுதிர்சோலை: கொற்றி-பசுவின் இளங்கன்று.
617. உறும்-உறுமின்-எழுந்திருங்கள்; பதம்-எழுத்து
618. பயந்தார்-பெற்றார்.
620. பணை-வாத்தியம்; முரசு.

622. பாவஞ்சகஞ் செயுமானதன் பஞ்சாக்கரஞ் செபித்தோற்(கு)
இரவும்பக லுந்தீமைகள் இழைத்தான தனாலே
விரவுந்தலம் விட்டேசென்று வேறோர்தலத் தினில்நல்
குரவும்பிடர் பிடித்துந்தவுட் குலைந்தேயிடர் உழந்தான். (37)

623. நெடுநாளுளந் தளர்ந்தேபிணி நீங்காதுடல் குறைந்தே
கொடுவானெடும் புழுச்சோரியுட் குடித்தேநெளிந் துதிர
வடுவாயிறந் தன்றெறங்கணும் மனநொந்திட உளைந்துள்
அடுகாலர்கள் வருத்த இன்னும் அழுந்தித்திகைக் கின்றான்.

### கலிநிலைத்துறை

624. சீர்கொண்ட வுலகின்கண் எவரேனு
மதுமாரி திகழ்கொன்றையந்
தார்கொண்ட சடையெந்தை யருளைந்தெ
ழுத்தின்ப தந்தன்னையே
கூர்கொண்ட குறிகொண்டு டன்றோர்க
ளிலரேற்கொ டும்பாதகப்
பேர்கொண்ட கயவாதம் ஒழியாது
நரகங்கள் பிரியார்களே. (39)

625. வெங்காள விடமுண்ட இறையைந்தெ
ழுத்தோது மிக்கோர்களும்
அங்காத ரத்தோடும் அவர்நண்பு
பெறுவோரும் அளிகூரவே
பொங்கார்வம் உடனெந்தை யுலகெய்து
வார்மிக்க பொறைகூருவீர்
இங்காரும் ஐம்பாத கந்தீரெ
ழுத்தைந்தி சைப்பீர்களே. (40)



---

622. நல்குரவு-வறுமை.

624. உடன்றோர்கள்-பிரயோகித்தவர்கள்; (செபித்தவர்கள்.) உடற்றுதல்-பிரயோகித்தல். கயவாதம்-க்ஷயரோகம்.

## அத்தியாயம் 23.

### சிவநாம (பஞ்சாக்ஷர) மான்மியம்-தொடர்ச்சி

சூதர் கூறுகின்றார்:—

சிவனது நாமத்தின் பெருமையை உணர்ந்து அதை ஓதுபவர் சிவனடி கூடுதல் ஒரு வியப்போ! சிவ நாமத்தின் பெருமையை அறியாமலே அதைக் கூறிச் சிவலோகம் அடைந்தவர்கள் எண்ணிலாதார்.

### வீரியவான் கதை (சிவம் என்றதனால் வந்த பேறு)

அப்படிப்பட்டவரில் ஒரு சிலரை உங்களுக்குக் கூறுகின்றேன். கவுதம தேயத்தில் கந்துகம் என்ற நகரில் வியாழன் என்னும் அந்தணனுடைய மகன் வீரியவான் எனபவன் பெரும்பாதகனாய்க் கள் உண்டும், கள், ஊன் முதலிய விற்றும், தனது குலாசாரத்தை விட்டு ஈனர்களின் தொழில்களைப் பூண்டிருந்தான். அவன் இறக்கும்போது அவனுடைய புதல்வர்கள் அவனிடம் வந்து 'அப்பா! நமக்கு யார் யார் கடன்கொடுக்க வேண்டும்; நாம் யார் யாருக்கு கடன்கொடுக்கவேண்டும்?' எனக் கேட்க, அவன் புலையன் ஒருவனுக்கு மதுவொரு [1]'சிவம் கொடுக்கவேண்டும்' எனக் கூறும்போது அவன் உயிர் பிரிந்தது. அப்போது யமபடர்கள் வீரியனது உயிரைக் கொண்டுபோகவரச், செவ்வான வடிவினராம் சிவகணங்கள் அருகுவந்து யமபடர்களைத் தள்ளி விலக்கி அவ்வுயிரைக் கொண்டுபோனார்கள். யமதூதர்கள் இந் நிகழ்ச்சியைச் [2]காலனிடம் தெரிவிக்க அவன் சேனையுடன் சிவகணங்களை எதிர்த்துப் போர் செய்ய அவனைச் சிவகணங்கள் பிடித்துப் புடைத்து அவன் கொண்டுவந்த பாசக்கயிற்றினாலேயே அவனை இறுக்கிக் கட்டி இழுத்துச்சென்று, கயிலைக்குக் கொண்டுபோய் அங்குள்ள ஒரு குகையில் ஒரு மரத்துடன் கட்டி அடைத்துவிட்டு, வீரியவானைச் சிவசந்நிதியில் விட்டனர். வீரியவானும் சிவரூபம் அடைந்தான்.

காலன் பட்ட பாட்டைக் கேள்விப்பட்ட யமதர்மராஜன் மனப் புழுக்கத்துடன் கயிலைக்கு வந்தான். அங்கு சிவபெருமானை வணங்கிக் கோபுரவாயிலில் இருந்த நந்திதேவரிடம் வந்தான். நந்திதேவர் யமனை நோக்கி "இந்த வீரியவான் என்னும் மறையோன் சாகும்போது சிவனுடைய நாமத்தைக் கூறிப் புனிதனானான். அந்தப் புண்ணியத்தால் சிவரூபம் அடைந்தான்; நீ ஒன்றும் ஐயம் உறாதே; அறிந்தோ அறியாமலோ சாகும்போது சிவநாமம் கூறுபவர்களிடம் உனக்கு அதிகாரம் இல்லை. இது சிவனது ஆணை. இந்த உண்மை தெரியாதார்க்குத்தானே ஐயம் ஏற்படும். நீ சிவநாமத்தின் பெருமையை அறிந்தவனாயிற்றே; இப்போது அதை மறந்தனையோ! மறக்காதே.

### வேடன் கதை (ஹர-சங்கர-என்றதனால் வந்த பேறு)

முன்பு ஒரு வேடன் உயிர் விட்ட போது,யம தூதர்கள் அவன் உயிரை உன் முன்பு கொண்டு வந்து விட, "இவன் செய்த தர்மச் செயல் எது" என்று நீ சித்திர குத்தனைக் கேட்டாய். அப்போது சித்திர குத்தன் "இந்த வேடன் பெரும் பாதகன். இவனுக்குத் தினையளவும் புண்ணியச் செயல் இல்லை. கொலை புரிவதே இவன் தொழில். 'இவனைப் பிடி', 'இவன் தலையை வெட்டு', 'இவன் தலையை உடை' என்பனவே இவன் வாயில் வரும் சொற்கள். இவனை நின் தூதர்களைக்கொண்டு நன்றாகக் கட்டி அடிப்பாயாக. இவன் உயிர்விடும்போதுகூட, இவன் பிள்ளைகள் 'எங்களுக்கு என்ன புத்தி கூறுகின்றாய்' என்று இவனைக் கேட்டபொழுது இவன் "உங்கள் கரத்தால் [3]'பிரகர, ஆகர, சங்கர' எனக்கூறி உயிர்விட்டான். இவனே உயிர்க்கெலாம் ஒரு அந்தகனாயிருந்தான், இதனை நீ அறிக' எனக் கூறி முடித்தான். இதைக்கேட்டு நீ சித்திரகுத்தனை நோக்கி 'எழுத்தாளனே! இவன் உயிர்விடும்போது இவன் சொன்ன சொற்கள் இவையென நீ உணருதல் வேண்டும். இவனை நாம் ஒரு தண்டனையும் செய்ய முடியாது. இவன் இறுதியில் செய்த புண்ணியத்தால் (ஹர என முடியுஞ் சொற்களைக் கூறியது, சங்கர என்றது) சிவ சாரூபம் அடையப் போகிறான். இவனைக் கட்டியிருக்கும் கயிற்றை அவிழ்த்து இவனை விட்டுவிடுங்கள். இவனது சிவ

---

1. சிவம் - குறுணி 2. காலன் - யமதர்மராஜாவின் சேனாபதி - தூதன் - அமைச்சன்.
3. பிரகர-தண்டிக்க; ஆகர-கவருக; சங்கர-கொல்க.

புண்ணியச் செயலால் இவன் பணியப்படுவதற்கு உரியவனானான். இவன் சாகும்போது வடமொழியில் ப்ரகர, ஆகர, சங்கர எனக்கூறி உயிர்விட்டான். இதை அறியுங்கள்" எனக்கூறி நீ பயந்து அட்டாங்க நமஸ்காரம் செய்து பணிந்தாய். இது உனக்கு ஞாபகம் இருக்கலாம். அந்த வேடன் உயிர் கயிலையில் எம்பெருமானது சந்நிதியில் சிவகணங்களால் மணி விமானத்தில் கொண்டுபோய் விடப்பட்டது' என்று நந்திதேவர் விரிவாகக் கூறி விளக்கினார்.

### வீரியவான் கதை-தொடர்ச்சி

இதைக்கேட்ட யமன் நந்திதேவரை நோக்கி 'அண்ணலே, என் மனம் சாந்தம் உற்று ஒருமைப்படவேண்டியே நான் இங்கு வந்தேன்: இந்தக் கொடியனும் காலன் சிவ நாமத்தின் பெருமையை உணராதவன். இவன் பாதலத்துக்கு புதிய அதிகாரி. சிவ புண்ணியம் ஒருசிறிதும் அறியாதவன். ஆதலால் தங்கள் கணங்கள் இட்ட சிறையினின்றும் இவனை விடுவித்தருளுக' என வேண்டினன். நந்தீசர் 'ஏ! தண்டதரா! அவனைக் கட்டிக்கொண்டுபோனவர்கள் மாகாளருடைய கணங்கள்; நீ மாகாளரை அடைந்து பணிந்து போற்றி மிக்க வணக்கத்துடன் காலனைக் கட்டினின்றும் விடுவிக்கும்படி நான் சொல்லி அனுப்பினேன்' என்று கூறுக' எனச்சொல்லி அனுப்பினார். யமனும் அங்ஙனமே சென்று மாகாளரைச் சாஷ்டாங்கமாகப் பணிந்து உடல் நடுங்க, வாய்குழற நந்திதேவரின் ஆணையைத் தெரிவித்தான். மாகாளர் வெகுண்ட நோக்குடன் யமனைப் பார்த்து 'அறிவிலாக் கூற்றுவ! முன் நடந்தவையை மறந்தாயோ' என்றார். யமன் 'நாதரே! நான் முன் நடந்தவையை மறக்கவில்லை; என்றும் என் உள்ளத்தில் வைத்துள்ளேன்; பிழையைப் பொறுத்தருளவேண்டும், புனிதனே! என்றான்.

## அத்தியாயம் 23.

### சிவநாம பஞ்சாக்கர மான்மியம்-தொடர்ச்சி

அறுசீர் விருத்தம்

626. சூதன்மொழி வான்முநிவீர்! பவித்திரனுஞ்
      சிவனுமந் துகள்தீ ரக்கண்(டு)
ஓதுமவர் சிவலோகத் தடைந்துசிவன்
      மலர்ப்பாதம் உறல்வி யப்போ ?
போதகங்கள் அறியாமற் சிவனுமம்
      உரைத்தோர்கள் பொருவி லாத
நாதமுறு சிவலோகம் அடைந்தோர்கள்
      எண்ணிறந்தோர் நாளும் நாளும் (1)

### வீரியவான் கதை (சிவம் என்றதனுல் வந்த பேறு)

627. பிழையோட்டும் அதிற்சிலரை நுங்கட்கோ
      தாநின்றேம் பெரிது கேண்மின்
குழையோட்டு நெடுந்தடங்கட் குவவுமுலைக்
      கடைசியர்கள் குழுமித் தாவி

626. போதகம்-அறிவு.

யிழையோட்டும் இடைநுடங்கக் குரவையிடும்
பேரொலிசென் றிடிகள் ஆர்க்கும்
மழையோட்டும் படிமுழங்கும் **கவுதமதே**
**யந்**துகள்தீர் வளஞ்சி றக்கும். (2

628. அங்கண்மணி மதில்புடைசூழ் **கந்துக**மென் றொருநகருண்
டதனில் வேள்வி
பொங்கும்அரு மறையோனல் **வியாழன்**மகன் **விரியவான்**
பொருவி லாத
பங்கநெடும் பாதகனுய்க் கள்ளுண்டுன் விலைக்கீந்து
பன்னுட் பார்ப்பார்
தங்கள்குலா சாரம்ஒரீஇ ஈனர்தொழில் மேற்கொண்டான்
சாங்கா லத்தில், (3)

629. அக்காலை யவன்புதல்வர் அவன்பால்வந் தெந்தாய்நீ
யறைதி யுண்மை
யிக்காலம் நமக்குவரத் தக்ககடன் ஏது?நாம்
ஈவே தேது?
திக்காது புகலென்றார் அவர்மொழிகே ளாவடித்த
தேறல் விற்போன்
பொக்காரும் புலையற்குத் தேறல்சிவம் ஈவதென்னும்
பொழுது மாய்ந்தான். (4)

630. அவ்வேலை கருமேதிப் பகடுகைக்கு மறலிபடர்
அணுகிப் பாசத்(து)
ஒவ்வாத பிணிப்பிறுக்கிக் கொடுபோக வுன்னினரவ்
வொன்ன லாரைச்
செவ்வான நிகர்வடிவச் சிவதூதர் தங்கள்பணி
செலுத்தித் தள்ளி
யிவ்வாறு விடுவித்துக் கொடுபோனார் அவ்வேலை
யியம தூதர். (5)

631. வந்துசிறு பிறையெயிற்றுக் காலனுடன் நிகழ்ந்ததனை
வணங்கிச் சொன்னார்
அந்தஇடி குரற்காலன் சேனையுடன் சிவகணங்கள்
அயல டைந்து
வெந்திறல்வெம் படைபுரிந்தான் அவனைவிறற் சிவகணங்கள்
விரைந்த டித்துப்
பந்தமுற அவனையவன் பாசத்தாற் பிணித்திழுத்துப்
படர்ந்து சென்றார். (6)

---

629. திக்காது-திக்கு யாது.

632. தென்றிசைவேந் தன்சேனைக் காவலனென் றறிந்துமணிச்
சிகர மேடை
பொன்றிகழ்பொற் கோபுரஞ்சேர் கயிலைகொடு போயினரப்
போது நீலக்
குன்றனைய வருமறலிக் கடவுள்தனைக் காணிலுடன்
கொள்வான் அன்னோன்
முன்றிகழும் அமைச்சனிவன் எனக்கயிலை பாங்காரும்
உழையுட் போட்டார். (7)

633. போட்டபினும் வரிந்துவரிந் தேயவன்பா சந்தன்னாற்
புறங்கை கட்டிப்
பாட்டளிசெல் லாமரத்தி னெடுகாலன் தனைப்பிணித்துப்
படர்ந்து செந்தீ
வேட்டமறை யோர்குலஞ்சேர் வீரியவா னைக்கடுக்கை
வேணி யீசன்
தாட்டுணைமுன் விட்டீசன் ஆணைதலைக் கொடுதத்தந்
தலங்கள் சேர்ந்தார். (8)

634. இந்தமறை வீரியவான் ஒற்றைநுதற் கட்பெருமான்
இணைத்தாள் போற்றிப்
பந்தமற வேசாரூப் பியமடைந்தான் கொடுமறலிப்
பண்ண வன்தான்
விந்தைசெறி காலன்வர லாறனைத்துந் தூதரால்
விளம்பக் கேட்டுச்
சிந்தைகதம் மீக்கொளவான் உயர்மேரு சேர்வதியிற்
சென்றான் மன்னோ. (9)

635. துங்கவுயர் வரையின்மலர்க் கொன்றையந்தார்க் குழகனருட்
டுணைத்தாள் போற்றி
யங்கணிருந் தயரொடுமாக் கயிலையிற்கோ புரவாயில்
அடைந்து நந்தி
தங்குதிரு முன்புகன்றான் நந்தீசன் மம்மருறு
சமனை நோக்கிப்
பொங்குயிர்போம் பகற்சிவன்நா மம்புகன்றே யிம்மறையோன்
புனித னானன். (10)

---

632. காலன்-யமதரும ராஜனுடைய தூதன், படைத்தலைவன், அமைச்சன் 'தரும ராசற்காவந்த கூற்றினைக் குமைப்பர் போலும் குறுக்கை வீரட்டனாரே,-(தேவா-அப்பர்: "ஏமனால் ஏவி விடு காலன்" (திருப்புகழ்). மூழை-குகை.

634. வதி-வழி.

635. அயர்-அயர்ச்சி-மனக் கவற்சி; மம்மர்-மயக்கம், துக்கம்.

636. அத்தரும மீக்கொளவே சிவரூபம் அடைந்தனன் மை
யசலம் அன்னாய்!
சித்தமிசை யையமுறேல் அரும்பாவம் அகற்றியருள்
சிவநா மத்தைச்
சத்தறிவி னாற்றான்மற் றறிவின்மை யாற்றான்சொல்
தக்கோ ரியாரென்
அத்தினத்தில் இறக்கின்றோர் அவர்பால்நிற் கதிகாரம்
இல்லை யம்மா. (11)

637. விண்ணவர்பொன் மகுடமணிக் கதிருரிஞ்சிப் பழுந்தழும்பு
மிலைந்த பொற்றாள்
அண்ணல்புரிந் திடுமாணை யித்தன்மைத் திப்பொருள்சற்
றறியாற் கன்றோ
எண்ணமுறும் ஐயம் முன்னர் சிவநாம மான்மியநீ
யேத்து வாயே
துண்ணென இப் போதுமறந் தாய்கொல்லோ நினைக்குதிமாத்
துயர்த ணந்தே. (12)

வேடன் கதை (ஹர, சங்கர என்றதனால் வந்த பேறு)

638. முன்னரரும் பாதகனுஞ் சவரனுயிர் நீத்தபகல்
முழுது நோக்கிப்
பன்னரிய சித்திரகுத் தனைநோக்கி யிருவினைதேர்
பான்மை யோய்நீ
யின்னதிது என் றிவன்செய் தருமமுறைத் திடுதியென
இரங்கிக் கேட்டாய்
அன்னபகற் சித்திரகுத் தனுமுளத்தில் தேர்ந்துண்மை
யறைகு வானல். (13)

639. தண்ணளியோர் சிறிதுமிலா தெவ்வுயிருங் கோறல்செய்பா
தகனுக் கந்தோ
திண்ணமுறைத் திடில்தருமந் தினைத்துணையும் இலையிவன்நித்
தியங்கா னத்திற்
பண்ணளிமுண் டகமுரல்வை கறையெழுந்தா றலைத்துயிர்மெய்
பதைக்க மாய்ப்போர்
எண்ணமறச் சிலர்நெருங்கப் பிணித்தடித்துக் கொடுவருவோன்
இகல்பு ரிந்தோன். (14)

---

636. மை அசலம் அன்னாய்-கரியமலை போன்றவனே! யாரென்-யாராயினும் என்?

638. சவரன்-வேடன்.

640. வரிசிலையோர் கரம்பிடித்துப் பிலம்புகா எனுங்கணையா
வம்பு றஞ்சேர்த்(து)
எரிசொரிகட் கடையுருட்டி விழித்துவெள்வாய் இதழ்மடித்துள்
எயிறி றுக்கிப்
பிரிவறச்சூழ் அபரிமித வேடரொடு குழுமியிவற்
பிடியி வற்கொண்(டு)
அரியிவற்செந் தலைதடியென் றுறுக்கியுள்ளுஞ் சினம்புழுங்க
அறைகு வானல். (15)

641. பிறையெயிற்றுத் தழல்விழிச்செங் கோற்கடவுள்! இவன்சாடி
பெருகு தேறல்
அறைகுரற்றேக் கிடப்பருகித் தசைகறித்து மதரீந்கொண்
டகந்தை கூர்வோன்
குறைவறுபா தகனிவனுக் கோர்சிறிதுந் தருமமிலைக்
கொடியோன் றன்னை
முறைமுறைநின் தூதரால் இக்கணமே பிணித்தடித்து
முருக்கு மாதோ. (16)

642. மைந்தரெமக் கேதுபுத்தி புகறியெனக் கேட்கவவர்
வதன நோக்கிச்
சிந்தைநலி மூப்பினுயிர் விடும்போது வடசொல்லாற்
சினத்து நீவிர்
முந்துகரத் தாற்ப்ரகர ஆகரசங் கரவென்று
மொழிந்து வீந்தான்
அந்தகன்போன் மெனககடி தல்லாரையுங்கொல் மாபாவி
யறிக என்றான். (17)

643. என்றுபுகல் சித்திரகுத் தனைநோக்கி யமனறைவான்
எழுத வல்லோய்!
அன்றுயிர்வீந் திடுமமையம் அவனுரைத்த மொழியையுளத்
தறிந்து கொள்வாய்
இன்றிவனை நம்மாலோர் தண்டமுஞ்செய் யப்படா
திவன்சீ லத்தாற்
கொன்றைகமழ் கோடீரக் கடவுள்சா ரூப்பியமுங்
கொள்வான் அம்மா. (18)

---

642. ப்ரகர-அடிக்க: ஆகர-கவருக; சங்கர-கொல்க.

644. முரிபுருவச் சுழல்விழிக்கார் இடிக்குரல்தூ தர்கள்நீவிர்
முகம லர்ந்தே
வரிகயிறு நெகிழ்த்திவனை விட்டுப்போ மின்களிவன்
மான்மி யத்தாற்
கரியுரிபோர்த் துழுவையதள் உடுத்தோனைப் பணிந்தெழுந்து
கரங்கள் கூப்பிச்
சொரிமலர்தூய் அட்டாங்கம் உறப்பணியப் படுகின்றேன்
துதித்தெந் நாளும். (19)

645. மற்றிவனு ருயிர்விடும்போ தெந்தைசிவன் நாமங்கள்
வடசொல் தன்னுற்
குற்றமற வேப்ரகர ஆகரசங் கரவென்று
கூறி மாய்ந்தான்
உற்றறிமின் என்றுரைத்தே நீபயந்தட் டாங்கம்பூ
வுறப்ப ணிந்தாய்
அற்றம்உனி சிவநாம மான்மியமிங் கேமறவா
தறிதி யம்மா. (20)

646. வெண்டரள மணிவெடிக்கப் புண்டரவே ழங்குனித்த
வேனில் வேளை
முண்டகவெவ் வழல்விழியால் உண்டருள்பெம் மான்தூதர்
முனிந்து வேடற்
கொண்டுபரு மணியிமைக்கும் மானத்தில் ஏற்றியண்ட
கோளத் தோங்கும்
தண்டருமே வியகயிலை யெங்கோன்சன் னதிவைத்துத்
தணந்தார் அன்றே. (21)

வீரியவான் கதைத் தொடர்ச்சி

647. இத்தன்மை கூறுநந்தி கேசனைநோக் குமறலி
யியம்பல் உற்றான்
முத்தழல்வெம் பொறிசிதறி மழுப்படைமான் ஏந்துசெங்கை
முதல்வநாயேன்
இத்தலத்தில் இலைக்கொழுஞ்செம் பவளமணிக் கோடீர
இறைவற் போற்றச்
சித்தமொரு மைப்படவே சென்றேனிக் கொடியனண்ணல்
சீர்த்தி தேரான். (22)

---

645. அற்றமுனி-அற்றம் உன்னி, சமயத்தில் நினைத்து.

646. புண்டர வேழம்-புண்டரம்-வெண்கரும்பு; வேழம்-கரும்பு

647. கொடியன்-காலன்

648. பண்ணவன்கோ புரவாயில் பரித்தருள்வேத் திரநந்தி
 பகவான்! கேண்மோ
கண்ணகன்பா தலத்திவன்புத் ததிகாரி சிவனுமங்
 கருத ருஞ்சீர்ப்
புண்ணியமோர் சிறிதும்அறி யானுகை யாலேநின்
 பொருவில் தூதர்
துண்ணெனவே பிணித்தகட்டு விடுத்தருளென் றிடுங்கூற்றைத்
 துளங்க நோக்கி, (23)

649. நந்தீசன் உரைக்கின்றான் தண்டதர னே!பிலிற்று
 நறவார் வாசக்
கொந்தார்பைந் தொடைப்புயமா காளனரு கவன்கணங்கள்
 கொடியோன் தன்னைச்
சந்தாபம் உறப்பிணித்துக் கொடுபோனார் நீயவன்பாற்
 சரணென் றேபோய்
எந்தாய்காத் தருளென்று சொல்லிமா காளர்பதம்
 இறைஞ்சிப் போற்றி, (24)

650. பூம்பொறிச்செங் கட்சுரும்பு ஞிமிறுவண்டு தேனினங்கள்
 [பூந்தேன் மாந்தும்]
தேம்பொழிற்கண் தோட்டுநறு மலர்தூயா ராதித்துச்
 செங்கை கூப்பிச்
சாம்புமுடல் உள்வளைத்துத் தனிநின்றங் கவனுன்
 சாற்றி னேன்என்(று)
ஓம்பலில்கா லன்பிணிப்பு விடுவியென்று நந்திசமற்
 குரைத்து விட்டான். (25)

651. அஞ்சனவெற் பொருவடிவு கொடுநடந்த கூற்றநந்தி
 அண்ணல் தன்சொல்
தஞ்சமெனச் செஞ்சிகைகூர் தலைமேற்கொண் டப்படியே
 தானென் றேகி
மஞ்சுபுனல் உண்டிருண்ட வடிவேய்க்குந் திருமேனி
 மாகா ளன்பொற்
கஞ்சமலர்த் தாட்டுணையில் அட்டாங்கம் உறப்பணிந்து
 கரங்கள் கூப்பி, (26)

---

648. சந்தாபம்-துன்பம்

650. " பூந்தேன் மாந்தும் "—இது ஓலையில் இல்லை.

652. நின்றுமொழி தழுதழுத்து வாய்குழற வுள்நடுங்கி
நிலைய றிந்து
கொன்றைமலர்ச் செஞ்சடையோன் கணங்களின்மேம் படுநந்தி
கூறுஞ் சொல்லை
வென்றிபெறக் கூறினனவ் வுரைகேட்டு மாகாளன்
வெகுண்ட நோக்கத்(து)
அன்றுணரா மதியிலாக் கூற்றுவ!முன் அடைவுமறந்
தனையோ என்றான். (27)

653. அங்கமிசை கொலைபழுத்த முத்தலைவேல் புலவுகமழ்
அயன்க பாலந்
தங்குவிட ரகற்றுநன்மா காளனருள் மொழிகேளாச்
சமனு ரைப்பான்
எங்களிறை யாகியமா காள!முன்னைச் செயல்மறப்ப
திலையிப் போது
பொங்குமுள மீதுணரா தின்றேனிப் பிழைபொறுத்தி
புனித! என்றான். (28)

---

## அத்தியாயம் 24.

### சிவநாம பஞ்சாக்ஷர மான்மியம்-தொடர்ச்சி

"மாகாளர் கேட்டதற்கு யமன் 'மறக்க இல்லை' என்றனே. அந்த வரலாறு யாது? என முனிவர்கள் கேட்கச் சூதமுனிவர் கூறுகின்றார்:

### கவுசிகன் கதை: [த்ரியம்பகன்' என்னும் நாமத்தால் வந்த பேறு.]

சௌராஷ்டிய தேயத்தில் தீவிதன் என்னும் மறையோனுக்குக் கவுசிகன் என்ற ஒரு மகன் இருந்தான். அவன் மிகப் பொல்லாதவன்; சொல்லுதற்கரிய பாபச் செயல்களை அவன் செய்து வந்தான். பசுவைத் திருடினான்; புலால் உண்டான்; புலையனொடு நட்புக் கொண்டான்; ஒரு புலைச்சியை இச்சித்தான்; அவளைக் களவிற் புணர்ந்து வந்தான். அதைக் கண்ட அவள் கணவன் அவளையும் கவுசிகனையும் இறுக்கிக் கட்டி அவன் தொடையை அறுக்க அவன் இறந்தான்; யமபடர்கள் கவுசினது உயிரைக் கட்டிக் கொண்டு போனார்கள். அப்போது சிவ கணங்கள் யமபடர்களை வெருட்டி அடித்து அவ்வுயிரை விமானத்தில் ஏற்றிக்கொண்டு போய்ச் சிவ சந்நிதியில் விட்டார்கள். யமதூதர்கள் இந் நிகழ்ச்சியை எமனிடங் கூறித் தாங்கள் பட்ட பாட்டைச் சொன்னார்கள். யமன் கோபத்துடன் புறப்பட்டுக் கயிலைக்குச் சென்று அம் மலையடிவாரத்தில் இருந்த கணபதியாகிய மாகாளரைக் கண்டு சிவ கணங்கள் தன் தூதர்களைத் தண்டால் அடித்து இரத்தம் பீறிடப் புடைத்ததையும், கவுசிகன் மகா பாபி என்பதையும் எடுத்துக் கூறினன். இதைக் கேட்ட மாகாளர் கோபித்து, கவுசிகன் தக்கோன்; ஓர் அணு அளவு பாபமும் இல்லாதவன்; அவனது இளம்,

---

652. நோக்கத்து-நோக்குடன்
653. தங்கு-இடர்

பருவத்தில் "சம்பு" என்னும் அவனது நண்பனுடன் அவன் விளையாடிக் கொண்டிருந்த பொழுது'சம்பு கவுசிகனுக்குத் "த்ரியம்பகன்" எனப் பேரிட்டும், பிற பிள்ளைகளுக்கு வேறு வேறு பெயர்களிட்டும் விளையாடினான். சிவ பெருமானது அருமைப் பெயரைத் **த்ரியம்பகன்** என்னும் நாமத்தைக் கவுசிகன் பூண்டிருந்தமையால் அவன் கயிலையை அடையும் உரிமையைப் பெற்றான்' என்றார். இதைக் கேட்ட யமன் தனது சிற்றறிவினால் 'அது கொண்டு கவுசிகனுக்குக் கயிலைவாசம் கிடைப்பது அரிது" என்று கூறி மாகாளரது மொழியை அசட்டை செய்து சிவ சந்நிதிக்குப் புறப்பட்டான். அப்போது மாகாளர் யமனை நோக்கி 'ஏ! தண்டதரா! நீ அறிவிலி; என் மொழியை அலக்ஷியம் செய்தாய்' எனக் கூறித் தண்டினால் அவன் மார்பிற் புடைத்தார். யமன் ரத்தங் கக்கி விழுந்துருண்டு மூர்ச்சித்தான். பின்னர், சற்று தெளிந்த போது, பிரமதேவர் சிவ பெருமானைத் தரிசிக்க வந்தவர் இந் நிகழ்ச்சியை அறிந்து மாகாளரை அணுகி ,வணங்கி, "கணத் தலைவரே! அறிவிலாது இந்த யமன்,இழைத்த பிழையைப் பொறுத்தருள வேண்டும்' என வேண்டி, யமனைப் பாரத்துப் 'பரிசுத்தனான கவுசிகன் சிவ சந்நிதியின் உள்ளான்; சிவ நாமத்தின் பெருமையைச் சிவன் ஒருவனே அறிவான். இனி நீ இம்மாதிரி செய்யாதே; பொறுத்தருளுக என மாகாளரை வேண்டிக்கொள்' எனப் புத்திமதி கூறினார்; அங்ஙனமே வணங்கிக் கேட்ட யமனை விடுவித்துப் பிரம தேவர் சென்றார். இதுவே அந்த வரலாறு (என்று சூதமுனிவர் கூறினார்):

## வீரியவான் கதை (தொடர்ச்சி)

பின்னர், 'நிகழ்ச்சியை மறக்க இல்லை' என்று கூறி யமன் மாகாளரைப் பணிந்து 'இக் காலன் அறிவிலி; தயை செய்து என்னை முன்பு விட்டது போல இவனையும் கட்டவிழ்த்து விடுங்கள்'-என வேண்டினன். மாகாளர் ஒரு தூதனை அனுப்பிக் காலனை இங்குக் கொண்டு வருக' எனக் காலனும் கொண்டுவரப் பட்டான். காலனும் யமனும் இருவரும் மாகாளரை வணங்கினர். மாகாளரும் காலனை விடுவித்தார். மாகாளரிடம் விடைபெற்று இருவரும் போகும் வழியில் காலன் யமனை நோக்கி ' இனி எனக்கு இந்த அதிகாரம் வேண்டாம்; என் உடம்பெல்லாம் ரத்தமும் புண்ணுமாய் விட்டது; இன்னும் ஒரு க்ஷணம் என்னைக் கட்டினின்றும் விடுவித்திராவிட்டால் நான் இறந்துபட்டிருப்பேன்' என்றான். இதைக் கேட்ட யமன் ' அடே! அறிவிலி! நீ என் சிவகணங்களைக் கண்டபின்னும் வீரியவானை விடாது பற்றினை? சிவகணங்களையும் சிவனது அருள்பெற்றோர்களையும் கண்டால் நீ அவர்களை வணங்கி என்னிடம்வந்து சொல்; நான் தக்கவாறு செய்வேன்; இந்தவழி அறியாமல் நீ இப்பாடு பட்டனை. நான் ஒரு வரலாறுகூறுகிறேன்; கேள் :

### காமதை-துர்ப்புத்தி கதை : 'சங்கர' நாமத்தின் பெருமை.

### (யமன் காலனுக்கு உரைத்தது).

**கந்துகதேசத்**தில் **கதலீபுரம்** என்னும் நகரத்தில் **அந்தகன்** என்னும் அரசனது மனைவி **காமதை** என்பவள் மிக அழகி; காமத்தால் அரசனையும் கைவிட்டுப் பலரையும் புணர்ந்து புலையனோடுங் கூடி ஈற்றில் '**துர்ப்புத்தி**' என்னும் சூத்திரனுக்கு மனைவியாய்க் கருப்பம் உற்றாள். கர்ப்பிணியாயிருந்தபோது **வசுவேதி** என்னும் வேதியனுக்கு மனைவியானாள். குழந்தை பிறந்தபின்னர் வசுவேதி இறந்தான். அந்தக் குழந்தையை அவ்வேதியன் வீட்டிலேயே விட்டுவிட்டு முன்பு தான் கூடியிருந்த சூத்திரனுடன் வசித்துப் பல பாவத்தொழில்களைப் புரிந்தாள். அவனுடன் கப்பலேறிக் கடற்பயணம் செய்யும்போது கொடுங் காற்று வீசிக் கப்பல் உடைய இருவரும் இறந்தனர். யம தூதர்கள் இருவரையும் பாசத்தினாற் கட்டி யிழுத்து நரகில் தள்ளி அடித்தார்கள். அப்போது சிவகணங்கள் அங்கு வந்து யம தூதர்களை அடித்துப் புடைத்து அவ்விருவரையும் விமானத்திலேற்றிக் கயிலைக்குப் புறப்பட்டார்கள். அப்போது நான் கோபித்து வந்து சிவகணங்களைப் பார்த்து "இப் பாதகர்களை எங்குக் கொண்டுபோகின்றீர்கள்" என்று கேட்டு அதட்டிக் கொடுஞ் சொற்கள் சொன்னேன். சிவகணங்கள் உடனே என்னைச் சூழ்ந்து பிடித்துக் கயிற்றினாற் கட்டிக் கொண்டுபோய்ச் சக்கரவாள கிரியின் புறத்தே ஒரு குகையில் என்னைக் குப்புறத் தள்ளி அடைத்து, ஒரு பூதத்தை அழைத்து என் பதவியில் வைத்துவிட்டு, அவ்விருவரையும் சிவ

*தக்கிநிக்குக் கொண்டுபோனார்கள். அவர்கள் இருவரும் சிவனை வழிபட்டு அங்கே இருந்தார்கள். அப்போது திருமாலும் பிரமனும் பிறரும் சிவபிரானை வணங்குதற்கு வர வழியில் சித்திரகுத்தன் திருமாலிடம் எனது நிலையை எடுத்துரைத்தான். திருமாலும் பிரமனும் இந்நிகழ்ச்சியைச் சிவனிடம் தெரிவிப்போம் என்று யோசித்துச் செல்ல, கயிலையில் விநாயக மூர்த்தியைக் கண்டு நிகழ்ச்சியைத் தெரிவித்தார்தள். ஐங்கரமூர்த்தி இதனைக் கேட்டுக் கோபத்துடன் "இந்த யமன் சிவகணங்களை அலக்ஷியம் செய்து கோபித்துப் பேசினான் ; அதற்கேற்ற தண்டனையை அடைந்தான்" என்றார். அதைக் கேட்ட மாலும் பிரமனும் நடுநடுங்கி, "கடவுளே இந்த யமன் பழைய யமன் அல்ல ; வேலைக்கு புதியவன், அறிவிலி ; அறியாது செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும்" எனக் கூறி வணங்கினர். ஐங்கரர் மகிழ்ந்து தமது கணங்களில் அசலன் என்பவனை நோக்கி 'வீரபத்திரருடைய கணங்களால் யமன் நொந்து சக்கரவாள கிரிக் குகையில் பிணிப்புண்டு தளர்ந்து கிடக்கின்றான். நீ போய் அவனை இங்கே அழைத்து வா' எனக் கட்டளையிட்டனர். அசலன் உடனே சென்று என்னை அழைத்துவர, நான் கணபதியை வணங்கிக் கை கூப்பி நின்றேன். விநாயகமூர்த்தி புன்முறுவல் செய்து 'எமனே! நீ அவ்விருவரையும் பாதகர்கள் என நினைத்தாய், அவர்கள் என்ன புண்ணியச் செயல் செய்தார்கள் என்பதை நீ ஆய்ந்து பார்க்கவில்லை அவர்கள் செய்த புண்ணியத்தைக் கூறுகின்றேன்; கேள். துர்ப்புத்தி யென்னும் சூத்திரனை இந்தக் காமதை கூடிக் கருப்பம் கொணடு, பின்னர் வசுவேதி என்னும் மறையவனைத் தழுவி, ஈன்ற மகனை, வசுவேதி இறந்த பின்னர், அம் மறையவன் வீட்டில் விட்டுவிட்டுப் போய்விட்டாள். அந்த மகன் அந்தணனது வீட்டிலேயே வளர்ந்து தொழிலைப் புரிந்துவந்தான். இவன் தன் கணவனது சோர நாயகியின் மகன் என்ற காரணத்தால் வசுவேதியின் மனைவி இவனைச் "சங்கரன்" (கலப்புச் சாதியன்) எனப் பெயரிட்டு அழைத்து வந்தாள். யாரும் அவனைச் "சங்கரா" என்றழைத்தார்கள். காமதையும் துர்ப்புத்தியும், அவர் தம்' மகன் சங்கரன் எனப் பெயர்பெற்று அழைக்கப்பட்ட புண்ணியத்தால், கயிலையைச் சேரும் பேற்றினைப் பெற்றார்கள். சிவநாமம் மூலமலத்தையும் பாபவினைகளையும் அழித்து நிறை செல்வத்தைத் தரும். சிவநாமத்தின் பெருமையை யாரறிவார்? எவன் தன் புதல்வர்களுக்குச் சிவநாமம் இட்டு அழைக்கின்றானோ அவனது பெருமை ஒரு கோடி வருடம் சொன்னாலும் அடங்காது' என விரிவாகக் கூறினர்.*

*இங்ஙனம் விநாயகர் கூறக் கேட்ட நான் கீழே விழுந்து வணங்கி 'அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும், பெருமானே!' எனத் தொழுதேன்.*

*திக்கற்று இங்ஙனம் நின்ற என்னை விநாயக மூர்த்தி அன்புடன் பார்த்து 'இயம! நாம் கூறியது சத்தியம். இனி, நீ சிவநாமம் தரித்தவர்தம் மேன்மையை உணர்ந்து நடப்பாயாக' எனப் புத்திமதி கூறினார்.*

## அத்தியாயம் 24.

### சிவநாம (பஞ்சாக்கர) மான்மியம்

#### அறுசீர் விருத்தம்

654. திருகுசினக் குறும்பெறித்தாற் றருந்தவஞ்செய் முனிவோர்கள்
 தெருண்மெய் ஞ்ஞானம்
பெருகுகருணைக்கடலாஞ் சூதன்முக நோக்குபுமை
 பிறங்கற் றிண்டோள்
முருகுகமழ் மலர்த்தொடைச்செஞ் சடைமுடிமா காளனென்ன
 மொழிந்தான் ஆவி
பருகுசமன் மறக்கஇலை யென்றேது சொற்றனன்நீ
 பகர்தி யென்றார். (1)

**கவுசிகன் கதை: (திரியம்பக நாமத்தால் வந்த பேறு)**

655. அருமறையின் உபநிடதப் பொருள்வடித்துத் தெளியவுணர்
அறவோர் யார்க்குங்
கருணையருள் சிவஞானங் கனிந்துமிழ்ந்தூற் றெடுத்துவெள்ளங்
கரைகொள் ளாது
பெருகுமுரி திரைக்கடலாஞ் சூதமுநி யுரைக்கின்றான்
பிரச வாரி
முருகுயிர்க்கும் மலர்த்தடஞ்சூழ் தருசௌராட் டியதேயம்
முத்தீ வேட்போன், (2)

656. தீவிதனென் னும்மறையோன் உளனவற்குக் கொடியோனுஞ்
சிறுவன் அன்னோன்
நாவினெடுத் துரைக்கரிதாம் பாதகஞ்செய் கவுசிகன்மெய்
நணுகிக் கண்டோர்
ஆவையயர்ப் படக்களவிற் கவர்ந்திறைச்சி தேறல்துய்த்தேழ்
அலைநீர் சூழும்
பூவுலகில் தன்பருவச் சூத்திரரோ டிணங்கியொரு
புலையற் சார்ந்தான். (3)

657. சண்டாளன் தனக்குரிய போனகம்உள் மானமொரீஇத்
தாலத் துண்டு
கண்டார்வம் பெருகிளைஞர் ஆவிதிறை யிடும்புளகக்
களபக் கொங்கை
வண்டார்பைங் குழற்கனிவாய் வரிவிழிச்சிற் றிடைப்புலைச்சி
மணிவா யூறல்
உண்டாசைக் கடலழுந்தி யவளுடன்போய்க் கள்ளவழி
யுவந்து சென்றான். (4)

658. அக்காலை யவட்குரிய கொழுநனெனும் புலையன்முனிந்
ததரிற் கண்டு
மைக்காவி விழிப்புலைச்சி யுடன்மறையோன் தனைப்பிணித்து
வருந்த எற்றி
எக்காலும் மறைவரம்பு தணந்தமறை யோன்சோகம்
ஈர்த்தான் சோகம்
புக்காவி வருந்தவுடை திரைப்பார்பன் னுட்கிடந்து
பொன்றி னனல். (5)

---

657. தாலம்-தட்டம்

658. சோகம்-தொடை;

659. அவ்வேலை யெமதூதர் கவுசிகனைப் பிணித்துக்கொண்
டகன்றார் தங்கண்
மைவேலை யெழுங்கடுவுண் டிருண்டகண்டத் தோன்தூதர்
மறலி தூதர்
வெவ்வேறு திசைகள்தொறும் வீற்றுவீற் றுய்ப்படர
வெருட்டி யெற்றிச்
செவ்வானம் நிகர்வடிவக் கவுசிகனை விமானத்திற்
சேர்த்தி னரால். (6)

660. அண்டமணி முகடுகிழித் தெழுங்கயிலை யோங்கலிற்கொண்
டருள்மீ தூரத்
துண்டமதி முடித்தொளிர்செஞ் சடிலத்தோன் சன்னிதியில்
தொழுது வைத்தார்
தண்டதரன் தூதர்செங்கோற் கடவுள்முன்னர்க் கவுசிகன்செய்
சரித முந்தங்
கொண்டவுரு விற்புடைபட் டொழுகுகுரு தியுங்கவுழ்ந்து
கூறி னரால். (7)

661. தூதர்மொழி தனைக்கேளா மறலிகத மோடெழுந்து
துண்ணென் றேங்கிப்
பாதிமதி முடித்தருள்செம் பவளமணிக் கோடீரப்
பண்ண வன்சேர்
ஓதிமமாக் கயிலையிற்செல் வோமெனவே புறப்பட்டவ்
வோங்க லின்கீழ்
ஆதிகணா திபனுமா காளனையா சனத்திற்கண்
டறைகு வானல். (8)

662. பிறைமுடிச்செஞ் சடையீசன் தூதுவர்தன் தூதர்களைப்
பிணங்கித் தண்டால்
முறைமுறையே குருதிகக்கப் புடைத்ததுவுங் கவுசிகன்தன்
முறைமை யுந்தான்
குறைவறவே யுரைத்தனன்,இச் சொற்கேட்டு மாகாளன்
கோபித் தங்கண்
அறைகுரற்கூற் றுவ!(பாபம்) தக்கோனுங் கௌசிகற்கோர்
அணுவும் இன்றால். (9)

---

661. ஓதிமம்-ஓது-இமம்; இமம்-பனி,

662. [பாபம்] ஓலையில் இல்லை.

663. மழலைபோற் செம்மாந்து குமரனென விளையாடும்
வைகல் முன்னாள்
பழகிவரு நண்பனுஞ் சம்புவுடன் விளையாடும்
பகலிற் சம்பு
குழமகனுங் கவுசிகற்குத் தீயம்பகனென் றேபெயருங்
கூறி மற்றோர்க்(கு)
அழகுறுவெவ் வேறுபெயர் அறைந்தனனோர் சாமவிளை
யாட்டின் அம்மா. (10)

664. கொன்றைகமழ் கோடீரக் குழகர்பவித் திரநாமங்
குறித்து முன்னாள்
நன்றிபெறு தவமிழைத்த புண்ணியத்தால் ஒருசாம
நாட்பே றுன
இன்றிவனுக் காகையாற் கயிலையடை குவதுரிமை
யிதற்கோர் ஐயம்
ஒன்றுமிலை யாஞ்சொன்ன துண்மையென்ற மாகாளன்
உரையைக் கேட்டே. (11)

665. சிற்றறிவி னுல்மறலி திரும்பவுமா பாதகனுய்த்
தேற வொண்ணுக்
குற்றமுறு கவுசிகனுக் கதுகொண்டு கயிலைமணிக்
குவட்டில் எங்கோன்
உற்றசபை யுறுவாசம் பெறுவதரி தென்றுவிரைந்
துரைத்துக் கூற்றன்
சற்றுமுள மீதுமா காளன்மொழி யெண்ணுது
தள்ளி விட்டான். (12)

666. பொன்னவிர்பைந் துணர்கடுக்கைப் புரிசடையெம் மான்கருணை
பொழிந்து நோக்குஞ்
சன்னிதியிற் செல்வோமென் றுள்மகிழ்ந்து புறப்பட்டான்
தனிமா காளன்
உன்னரிய கோபமுடன் உரைக்கின்றுன் தண்டதரா! '
உணர்வி லாமல்
என்னுரையைத் தள்ளினையென் றியம்பிமணிக் கதையால்மார்
பெற்றி னுல். (13)

667. கருகுநிசி நள்ளிருட்பெய் கமஞ்சூல்கார் கோள்பழுத்துக்
கனிந்து துள்ளிப்
பெருகுகளங் கட்டுவிட்டுப் பொதியவிழ்த்தெண் டிசைவிழுங்கிப்
பேர்ந்து பாரில்

உருகுபிழம் பிடையரு தொழுகிநெடு விழுதுவிழுந்
துழுமைக் காலப்
பொருகுவடு நிரைவடிவக் கூற்றருவி குருதிகக்கப்
புரண்டு வீழ்ந்தான். (14)

668. கொண்டல்புரை வடிவுடைந்துள் என்பனைத்துந் தகர்ந்துடலங்
குளுகு ளுத்துத்
தண்டதரன் மெய்ம்மறந்து வசமழிந்து மூர்ச்சித்துத்
தனது யிர்ப்பற்(று)
உண்டிலையென் றொடுங்கினன்;பின் தெளிந்துமூ எயில்முருக்கும்
உம்பர் கோன்தாள்
முண்டகன்சே விக்கவந்திச் செயல்கேளா மாகாளன்
முன்ப ணிந்தான். (15)

669. அங்கணனே! பிழைபொறுக்கும் மாகாள னே!கணங்கள்
அரசே! கூற்றன்
இங்கறிவி லாதிழைத்த பிழைபொறுத்தி யென்றேத்தி
யிருண்டு மல்குங்
கங்குல்புரை மேனியந்த கன்றனைநோக் குபுபிரமன்
கட்டு ரைப்பான்
புங்கவனுங் கவுசிகனுஞ் சடைக்கடவுள் அவையிருந்து
போற்றி நின்றான். (16)

670. தேவாதி தேவனும் பரசிவன்நா மப்பெருமை
தெளிந்து ரைக்கில்
ஓவாத கருணையுமை கேள்வனும் நீலகண்டன்
ஒருவன் அன்றித்
தாவாதிங் கறிகின்றோர் எவர்? ஆகை யால்நீயித்
தன்மை செய்யேல்
ஆவாவென் றேயுரைத்தி யமனைவிடு வித்தயனும்
அகன்றான் மன்னே. (17)

வீரியவான் கதை (தொடர்ச்சி)

671. பின்னர்முனி வீர்!கூற்றன் மறக்கஇலை யென்றறிந்து,
பிலவாய்க் கூற்றன்
தன்னிகரில் மாகாளன் சரணமுறை யேபணிந்து
சாற்று கின்றான்
இன்னதிது என்றுணரச் சிறிதுமறி யானவமா
யிஙன்சேர் காலன்
தன்னைவரிக் கட்டுவிட்டிங் கருளடியேன் தனைவிட்ட
தன்மை போல. (18)

---

668. பின் தெளிந்து-(முண்டகன்) பின்பு இதனை அறிந்து.

672. என்றபகல் ஒருதூதன் தனையனுப்பிக் காலனைக்கொண்
டிஙன்வா என்றே
துன்றுவரிக் கட்டுவிடு வித்தருள்மா காளரால்
துயரம் விட்ட
குன்றனைய குவவுத்தோள் காலனவன் இயமனுடன்
கூடித் தேர்ந்து
சென்றுபயந் திருவோருஞ் சிறப்பொடுமா காளரடி
தெண்டம் பண்ணி. (19)

**எழுசீர் விருத்தம்**

673. துங்கமா காளன் விடைகொடு படருந்
தொன்னெறி யமனைநோக் குபுநொந்(து)
அங்கணின் றனார்கா லன்புகல் கின்றான்
அடியனேற் குன்னதி காரம்
இங்கினி வேண்டாம் எனதுமெய் புடைபட்
டிரத்தமும் புண்ணுமா னதுபார்
செங்கையிற் பிணிப்பிக் கணம்விடா திருக்கிற்
சிறுவரை யெனதுயிர் தணக்கும். (20)

674. என்னவே கால னவனையும் நோக்கி
யியம்புவான் மடமைசேர் கால!
பொன்னவிர் கடுக்கை மிலைத்தசெஞ் சடிலப்
புனிதன்மா கணங்களைக் கண்ட
பின்னரும் [வீர்ய வான்] கொடி யவனென்
பெருமையன் என்றவன் தன்னை
என்னகா ரணநீ விடாதிருந் தனைமற்
றியம்புதி யெங்ஙனாய் குவையே. (21)

675. படவர வசைத்த கண்ணுதற் சாமி
பதம்பர வியகணங் களையுந்
தொடரவன் அருள்சேர் பவனையுங் கண்டு
தொண்டொடு பணிந்துநீ வந்தென்
னுடனிவை யுரைக்கில் அதுதனக் கேற்ற
தோர்ந்தியான் புரிகிலனோ ?சேர்
இடமறி யாயா கையாலதற் கான
இப்பெரும் பலன்கள்துய்த் தனையால். (22)

---

674. 'பின்னருங் கவுசிகன் கொடியவன்' என்று ஓலையில் உள்ளது.

**காமதை-துர்ப்புத்தி கதை: 'சங்கர' நாமத்தின் பெருமை:**
**(யமன் காலனுக்கு உரைத்தது.)**

676. முருந்திள முறுவற் கடைசியர் புறத்து
முடக்கிய விருகையொத் திடவே
திருந்திய துணங்கை யாடுறு விசையாற்
செய்யகந் துகமெடுத் தெறிந்து
விருந்தினற் கருத்த வுடன்வரு பலன்போன்
மீண்டபந் தெறிந்திடை துவளக்
கருந்தடங் கண்கள் சுவற்புரள் கூந்தற்
கடந்திடுங் **கந்துகத் தேயம்**. (23)

677. **மா**யிரும் பரவை யதள்சில மகளிர்
மானவா ழைக்குறங் கிலங்கச்
சேயுயர் விசும்பிற் கதலிகை யுறழ்பொற்
செங்கைநெட் டிலைகணீட் டுநன்
காய்முதிர் கனிவீழ் தெள்ளமு துண்பான்
கடவுளர் அரம்பைமீர் வருகென்(று)
ஆயிர மழைத்த னிகரரம் பைகள்சூழ்
அருங்**கத லிபுர நகரம்**. (24)

678. அந்தகர்க் குரிசில் **அந்தகன்** மனைவி
யடுத்தமாந் தர்க்கெலாம் உளத்தில்
துன்னுபே ராசை விளைப்பவள் எழில்கூர்
சுடர்த்தொடிக் **காமதை** யெனும்பேர்
மன்னின கற்பு நீத்தர சனையும்
மணந்திடா தெவரையும் புலையன்
தன்னையும் மணந்தோர் சூத்திரன் மனையாய்த்
தழீஇயொரு கருப்பமுற் றனளால். (25)

679. **ம**ல்லலைத் தெழுந்து வளர்மணித் திண்டோள்
மண்மகள் புதல்வனை யிகந்து
தொல்லைவே தியனும் **வசுவேதி** மனையாய்த்
தோன்றிய கருப்பமு நிறைந்திட்(டு)
ஒல்லைநன் மகவைப் பொறையுயிர்த் தனள்மற்
றேவில்பன் னாட்கழிந் ததற்பின்
செல்லைநேர் மலர்க்கை வசுவேதி யிறந்தான்
சேயொரீஇ யங்கணீத் தனளே. (26)

---

676. துணங்கை-ஒருவகைக் கூத்து "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத் தொடக்கிய நடையது துணங்கை யாகும்."
677. அதள்-தோல் (ஆடை); மான-போல; கதலிகை-கொடி
679. மண்மகள் புதல்வன்-அரசன்; இகந்து-நீங்கி.

680. முன்னர்சேர் திண்மைச் சூத்திர னுடன்கார்
மொய்குழல் அடைந்துபன் னெடுநாள்
உன்னருங் கொடிய பாதகம் இழைத்தாள்
ஓர்ந்தவ னொடுபின் கூடி
மின்னவிர் கொடிஞ்சிக் கப்பல்மீ தேறி
வேலைநாப் பண்படர் வளியால்
பின்னமா யுடைந்தக் கப்பலிற் சுழித்துப்
பெய்வளை யவனுடன் இறந்தாள். (27)

681. பிறையெயி றுறுக்கிச் சுழல்விழி பொறிகள்
பிலிற்றவாய் மடித்துளஞ் சிறிதும்
பொறையிறத் திருகு வெஞ்சினத் தொடுமெய்
புழுங்கஆர்த் தச்சுறச் சீறி
யுறைகழித் திலங்கு வாட்படை விதிர்த்திட்
டுடற்றுகூற் றுவன்கொடுந் தூதர்
பறையிரட் டுபுபா சத்தினாற் பிணித்துப்
பாழ்நர குய்த்தடித் தனரால். (28)

682. அக்கணம் நுதற்கட் பண்ணவன் கணங்கள்
அடுபடை யேந்திவந் திவரெண்
திக்கயல் குழுமு தூதுவர்ப் புடைத்துச்
சேனைகள் வீற்றுவீற் றிரியப்
பொக்கற வெருட்டி யிருவர்தம் மையுமே
போற்றுதிப் பியவிமா னத்தில்
தக்கமெல் லரியா சனத்துவைத் தெங்கோன்
சன்னிதி குறித்துவிண் படர்ந்தார். (29)

683. அன்னபோ துருத்துச் சிவகணங் களைப்பார்த்
தறைந்தனன் ஐயநீ விர்களப்
பன்னருங் கொடும்பா தகம்புரி யிவரைப்
பன்மணி மானமீ தேற்றி
யெங்நெறி படர்கின் றீரெனக் கொடுஞ்சொல்
இயம்பினன் என்மொழி கேளாத்
துன்னுமக் கணங்கள் யாவருங் குழுமித்
துண்ணெனக் கறுத்தெனைப் பிடித்தார். (30)

---

683. அறைந்தனன், இயம்பினன்-சொன்னேன்

684. வரிக்கயி றிறுக்கிப் பிணித்திழுத் தடித்து
மனநடுங் குறளனைக் கொடுபோய்க்
கிரிக்கர செனச்சூழ் சக்கிர வாளக்
கிரிப்புறச் சாரலிற் குகைக்கீழ்
விரிக்குமென் குஞ்சிச் சென்னிகுப் புறவே
வீழ்த்தொரு பூதம்வே றழைத்துப்
பரிக்குமென் னதிகா ரங்கொடுத் திவரைப்
பண்ணவன் முன்கொடு போனார். (31)

685. மற்றையர் இருவோ ருங்கயி லாய
மலையில்வெண் மதிக்கலை மிலைந்த
கற்றையஞ் சடையோற் பரவவண் துளவக்
கண்ணியஞ் செல்வனம் புயத்தோன்
சுற்றய லோரும் அருகிருந் தனரித்
தொடர்பெலாஞ் சித்திர குத்தன்
பொற்றையங் கையிற்கொண் டானினம் புரக்கும்
புண்ணியற் கெடுத்துரைத் தனனால். (32)

அறுசீர் விருத்தம்

686. பைந்துளப மஞ்சரிவா சங்கமழ்திண் டோட்கடவுள்
பையு ளாகிக்
கந்தமலர் அண்ணலுடன் கூடுபுவம் பவிழலங்கற்
கடுக்கை வேணி
யெந்தைதிரு முன்பணிந்திவ் வகையுரைப்பம் எனச்சென்றார்
எழில்கூர் சாரல்
சந்துகமழ் பொலன்குடுமிக் கயிலையிலைங் கரற்கண்டு
சாற்றி னரால். (33)

687. ஐங்கரன்வே கத்துடன்றோர் மொழியுரைப்பான் இவ்வியமன்
அயிலில் ஏற்றுப்
பொங்கரவக் கச்சசைத்த புண்ணியமார் கணங்களுடன்
பூசல் செய்தான்
இங்கதனுக் கேற்றதண்டங் கணங்கள்புரிந் தனரென்றும்
ஏரம் பன்சொல்
அங்கணிரு வருங்கேளா நடுநடுங்கிப் பயத்தொடுநின்
றறைகு வாரால். (34)

---

684. பண்ணவன்-சிவன்
685. பொற்றை-மலை. பொற்றை...புண்ணியன்-திருமால்

688. தொந்திவயிற் றைந்துகரத் தும்பிமுகக் கடவுள்! இவன்
தொல்லை நாளில்
வந்துவினை செயுமியமன் அன்றுநவ மாயடைந்து
மடமை கூர்ந்தோன்
புந்தியறி வற்றிழைத்த பிழைபொறுத்தி யென்றயன்மால்
புகன்று வீழ்ந்து
வந்தனைசெய் தனர்மகிழ்ந்தைங் கரனயல்சேர் அசலனையுள்
மகிழ்ந்து நோக்கி, (35)

689. இக்கணமே விறல்வீர பத்திரமா கணங்களால்
இயமன் நொந்து
சக்கரவா ளக்கிரிக்கீழ் ஒருகுகையிற் பிணிப்பிறுகத்
தளர்ந்து நொந்து
புக்குடலம் வருந்தவே பதைக்கின்றான் நீயங்கண்
போகிப் புன்கண்
மிக்கவிய மனையிங்ஙன் கொடுவருதி யென்றுகந்து
விளம்பி னுனல். (36)

690. அசலன்விரைந் தேகியழைத் தைங்கரன்சந் நிதிவிடுத்தான்
அந்த கன்வந்(து)
இசையஅயல் வீழ்ந்துபணிந் தெழுந்துகரங் கூப்பிநின்றான்
ஏரம் பன்மெய்த்
தசைநடுங்குங் கூற்றினைப்பார்த் தைதெனப்புன் முரல்செய்து
சமனே! நீயுள்
நசையினிரு வரையும்பா தகரென்றே கவர்ந்தாயால்
நாடி வந்தே. (37)

வேறு

691. நற்றரும ராமிவர்கள் புண்ணியமு முன்சிறிது
நாட இலைமுன்
பற்றியதுர்ப் புத்தியெனும் பின்னவனைச் சேர்ந்துகருப்
பங்கொ டுபடர்ந்
துற்றவசு வேதியெனும் ஓர்மறையோ னைத்தழுவி
யோங்கு கருப்பம்
முற்றியபின் ஓர்புதல்வ னைப்பொறை யுயிர்த்தனள்
முருக்கி தழினள். (38)

692. அங்கண்வசு வேதிமறை யந்தணன் இறந்தபினர்
அன்ன வன்மனை
தங்கம முலைச்சிறு சதங்கையடி சேர்மதலை
தன்னை யொருவிப்

பொங்குகனி யோடயல் படர்த்தனளம் மாமதலை
பூசு ரன்மனை
யிங்கிதம் உறத்தனி வளர்ந்துழவர் போற்றொழில்
எலாம்பு டையதான். (39)

693. அன்னவசு வேதிமனை யாட்டிகுல மாணினி
யறிந்தி வனையே
தன்னயல் எழுந்துவரு தையல்மகன் என்றும்அவி
சாரி யெனவே
பின்னவன் இடந்தழுவு பேதைமகன் என்றுமப்
பிள்ளை பெயர்தான்
உன்னரிய சங்கர னெனச்சொலி யழைத்தனள்
உவந்து தினமே. (40)

694. இவ்வுலகர் சங்கரன் எனப்பெயர் விளித்தனர்கள்
இப் பகலுமே
கொவ்வையிதழ்க் காமதையைக் கூடியதுர்ப் புத்தியெனுங்
கோதி லவற்குஞ்
செவ்விபெறு மாமதலை சங்கர னெனப்பெயர்
சிறந்தி டுகிறன்
அவ்வதிக புண்ணியத்தி னலிருவ ருங்கயிலை
யன்பின் அடைந்தார். (41)

695. மாலயன் வழுத்தரிய வள்ளல்சிவ நாமமுயிர்
வாட்டி யொழியா
மூலமல மாகிய முளைத்துவிளை பாதக
முருக்கி யருளாற்
சீலநிறை செல்வமருள் தேசுதவு மான்மியந்
தெரிந்து ரைசெய
ஞாலமிசை யெவரறிவர் அரிதரிது நாளுமிக
நாளு மிகவே. (42)

696. வெண்டிரை யளக்கருல கத்திலெவ னின்புதல்வர்
வீறெ டுபயந்(து)
அண்டர்கள் விருப்புற மகிழ்ந்தமல னஞ்சிவன்
அரும்பெ யரறிந்(து)
எண்டிசை வழுத்தியொழி யாதுபுகழ் அப்பெயர்
இசைத்தி டுகிறன்
பண்டையவன் மேன்மைவரு டங்களொரு கோடிமெய்
பகர்ந்த றிகிலோம். (43)

---

692. புடையதான்-மேற்கொண்டான்.
693. சங்கரன்-நன்மை செய்பவன் (சிவன்); கலப்புச் சாதியன்—எனவும் பொருள்.
696. அளக்கர்-கடல்; இன் புதல்வர்-இனிய புதல்வர்

697. என்றுகய மாமுகன் இசைத்தவுரை கேட்டியமன்
ஏத மொடுவான்
துன்றுடல் நடுங்களதிர் வீழ்ந்தடி யிறைஞ்சிமெய்
துணுக்கெ னநின்றே
மன்றல்கமழ் செஞ்சடில வள்ளல்அடி யேன்பிழை
மனக்கொளல் பொறுத்(து)
என்றும்எனை யாள்வையென முன்தொழுதும் ஐங்கர
எனப்ப ரவினன். (44)

698. ஐங்கரன் இரும்புடை யநாதனென நின்றஎனை
அன்பி னொடுபார்த்(து)
இங்கியம! நீயுலகம் ஏத்துபதி யாகவரும்
ஈச ரரும்பேர்
தங்குமிகு மான்மியம் எலாமுணர்வி னூலறிந்து
தாணி ருத்தியாற்
பொங்குள மகிழ்ச்சியொடு சத்தியம தாகவே
புகன்றன னென்றான். (45)

---

## அத்தியாயம் 25

### சிவநாம (பஞ்சாக்கர) மான்மியம் தொடர்ச்சி

(யமன் காலனுக்கு உரைப்பது)

*இங்ஙனம் ஐங்கரர் கூறி என் பதவியிலிருந்த பூதத்தை நீக்கி அழைத்துக் கொண்டு என் பதவியை எனக்குத் தந்தார். பிரமனுக்கும் திருமாலுக்கும் என் வந்தனத்தைக் கூறிவிட்டு என் நகருக்கு வந்து சேர்ந்தேன். அதுமுதல் சிவபிரானது திருவடியையே சிந்தனை செய்து மகிழ்கின்றேன். இனி நீ உனக்கு உற்றன மறவாது உலகில் எவனொருவன் அறிந்தோ அறியாமலோ சிவனது திருநாமத்தைப் புகல்கின்றானோ அவனிடம் பாபம் தினையளவும் இல்லையென்பதை நன்கு உணர்வாயாக. இது முக்காலும் சத்தியம். இனி இதை மறந்தோமோ நம் இருவருக்கும் சிவதண்டனை கிடைக்கும். பிரமனும் திருமாலும் சிவதரிசனம் செய்யப்போகும் வேளை பார்த்து நானும் போவேன். எனக்கு ஒழிவே கிடையாது. நீயே நிதானமாய் என் வேலைகளைப் பார்த்து உன் அதிகாரத்தை எப்போதும் இந்திரன்போலச் செலுத்துவாயாக. சிவநாமத்தைப் பூண்டிருப்பவனது தந்தையை, தாயை நீ பார்த்தால் தூரத்தில் விலகி நில். இதனை மாத்திரம் மறவாதே" என்றெல்லாம் இயமன் கூறக் காலன் 'உன் அதிகாரம் மஹா கஷ்டமானது; அந்த அதிகாரத்தைச் செலுத்த எனக்குப் பயமாயிருக்கிறது' என்று சொன்னான். இயமன் "என்ன பயம்! யாராயிருந்தாலும் உன்னைக் கண்டால் நடுங்கி உனக்கு வசப்பட்டு நடப்பர். இது உண்மை*

---

697. செஞ்சடில வள்ளல்-விநாயகர்—"கொன்றை புனை செஞ்சடையோன்" மயூரகிரி புராணம்.

698. இரும்புடை-பெரிய பக்கத்தில்; அநாதன்-திக்கற்றவன்

### சாந்தீபனி முனிவரின் மகன் கதை

### (முதலை உண்ட பாலனை உயிர்ப்பித்தது)

*முன்னொருநாள் சாந்தீபனி முனிவரின் மகன்—ஆசாரசீலன்—நன்னெறியில் நடப்பவன்—சிறந்த விஷ்ணு பக்தன்—திருமால் நாமத்தையே ஜெபிப்பவன்—ஒருநாள் ஒரு பொய்கையில் ‘அச்சுத! முகுந்த! கோவிந்த!’ எனக் கூறி முழுகும்போது ஒரு முதலை அவனை விழுங்கிவிட்டது. சாந்தீபனி முனிவர் மிகத் துயருற்று தமது சீடர்களான* பலதேவரையும் கிருஷ்ணமூர்த்தியையும் *நோக்கி ‘என் மகனை நீங்கள் மீட்டு வந்து கொடுப்பீர்களானால் அதுவே எனக்கு உகந்த தக்ஷிணையாகும்’ என்றார். அவர்களும் என்னை வந்து கேட்க நான் அவ்வுயிரை விடுதலை செய்ய அவர்கள் மகிழ்ந்து அப்பிள்ளையைக் குருவினிடம் பழைய நிலையிற் சேர்த்தார்கள். சாந்தீபனியின் பிள்ளையாம் அவன் மிக்க அறிஞன் ஆதலால் ‘முகுந்த நாம கீர்த்தனம் நான் செய்தும் யமலோகத்துக்குத் தானே போகவேண்டியிருந்தது. இனி ‘காலகாலன், கண்ணுதற் பரமன், மஹாதேவன், நீலகண்டன், பசுபதி, விமலன், நின்மலன்’ என வரும் எண்ணிலாத சிவ நாமங்களையே ஓதுவேன்’ எனத் தீர்மானித்து அங்ஙனமே ஜெபித்துச் சிவலோகம் சேரப்பெற்று ஈற்றில் ஆனந்த வீட்டை அடைந்தான்.*

## அத்தியாயம் 25.

### சிவநாம (பஞ்சாக்கர) மான்மியம்-தொடர்ச்சி

### யமன் காலனுக்கு உரைப்பது

### கலி விருத்தம்

699. ஐந்துகரன் முன்சொலினென் அன்புறு பதந்தான்
தந்தெமபு ரம்புரிபூ தந்தனை யழைத்தான்
கந்தமலர் வந்தஇறை கங்குல்மணி வண்ணன்
வந்துபர வும்பகலில் வந்தனை புரிந்தேன். (1)

700. அங்கண்விடை கொண்டென தரும்பதி யடைந்து
கங்குல்பக லுந்துயர் கடந்தறிவி னோடே
திங்கள்புனை செஞ்சடை செறிந்தஇறை பொற்றாள்
பொங்குள நினைந்தவை பொருந்திமகிழ் கின்றேன். (2)

### எழுசீர் விருத்தம்

701. நிரந்தரம் இனிநீ மறந்திடா திருத்தி
நீணிலத் தியாவன்மற் றொருவன்
பரந்தொளி விசிறுங் கண்ணுதற் சிவன்தன்
பவித்திர நாமமாம் அதனைப்
பொருந்துளத் தறிந்தென் அறிவிலா திருந்தென்
புகல்பவன் தனக்குவெம் பாவந்
தருந்தினைத் துணையும் இல்லையீ துண்மை
சத்தியஞ் சத்தியம் ஆமால். (3)

702. பின்னர்மீ ளவுஞ்சத் தியமுன்னுள் அறிந்து
பிரிவற அனுபவித் ததுவாம்
நன்னர்நெஞ் சினில்நீ யறிந்திலை யேயெந்
நாளும்உன் தனக்கும்என் தனக்கும்
உன்னரு நமைவந் தடுத்தபேர் தமக்கும்
உரைப்பருஞ் சிவன்செய்மா தண்டம்
பன்னரும் விதத்தால் உற்றிடும் அயன்மால்
பரவிய வேளைபார்த் தடைவேன். (4)

703. ஓர்சிறி தெனக்கு வேலைவந் திடும்பார்த்
தொல்லைசெல் லாதிருந் திடில்நான்
சேர்சிறை கிடையா தாகையால் எனக்குத்
தேர்ந்ததி காரமே புரிய
நேர்சிறு வரையும் இல்லையெப் போதும்
நீயவ தானமாய்ச் சயிலஞ்
சேர்சிற கரிந்த புரந்தரன் போலத்
தெளிந்ததி காரமே புரிவாய். (5)

704. கால!நீ கேட்டி யாவன்மற் றொருவன்
கண்ணுதற் பவித்திர நாமஞ்
சாலவே தரிக்கின் றனவற் பயந்த
தந்தைதாய் கண்ணுறிற் சேண்போய்
மேலுமேல் மறவா திருத்தியே யென்று
விளம்பமற் றனையசொற் கேளா
மாலுறு காலன் சமன்முக நோக்கி
மறலிகேள் எனப்பயந் துரைப்பான். (6)

705. நின்னதி காரம் மிகவரி தெளியேன்
நெஞ்சகம் பயந்தது பலகால்
அன்னது புரிக அறிகிலேன் என்ன
அந்தகன் காலனை நோக்கிப்
பின்னரும் மொழிவான் நிற்குறு பயமென்
பேசிடில் யாவரும் நடுங்கி
முன்னர்கண் ணுறில்வெய் துறவசம் ஆவர்
மொழிகுவல் உண்மையீ தென்றான். (7)

---

702. பிரிவற-நன்கு.

703. சேர் சிறை கிடையாது-செல்லும்பக்கம் இல்லை. சிறுவரை-சிறிது பொழுது.

705. வெய்துற வசம் ஆவர்-அச்சத்துடன் உன் வசப்படுவர்.

**சாந்தீபனி முநியின் மகன் கதை : (முதலையுண்ட பாலனை அழைத்தது - யமன் காலனுக்கு உரைத்தது)**

706. **மு**ன்னொர்நாட் சாந்தீ பனிமுநி மதலை
மூதறி வாளன் ஆ சாரன்
நன்னெறி படர்வோன் வண்துழாய் அண்ணல்
நாமமே தெரிந்துவெண் தூவி
அன்னமார் பொய்கை யடைந்துமூழ் கிடும்போ(து)
"அச்சுத! முகுந்த!கோ விந்த!"
என்னுமவ் வளவில் வெங்கரா விழுங்க
இறந்தனன் மாயன்மெய் யடியான். (8)

707. **தூ**தர்சென் றவற்கொண் டிங்ஙன மடைந்தார்
தூயசாந் தீபனி கலுழ்ந்த
போதுசேர் பலதே வன்வசு தேவ
புதல்வனை நோக்குபு புதல்வீர்!
தீதிலா மைந்தன் வெங்கரா விழுங்கச்
சென்றனன் நீரவற் கொடுவந்(து)
ஆதரத் தளித்தீர் எமதுதக் கணையீ
தாமென அறைந்தனுப் பினனால். (9

708. **மு**னியுரை சிரமேற் புனைபல தேவன்
முதிர்குழக் கன்றுவெங் குணிலாக்
கனியுதிர்த் திடுகோ பாலன்வா வியிற்போய்க்
கராஅக டீர்ந்துமே காணார்
துனிகொடு படர்ந்திங் கெனதரு கடைந்தார்
தொல்லுயிர் நான்விடக் கொடுபோய்
நனிபெரு மகிழ்ச்சி யுடனவண் அடைந்து
நல்கினர் குருவினுக் கம்மா. (10)

709. **தொ**ழுதகு சாந்தீ பனிமகன் மதிமான்
துயரொடு குறித்தனன் தினமும்
பழுதற முகுந்தன் நாமகீர்த் தனமே
பன்னினன் அதுதனை யறிந்தும்
இழுதுமெய் தழலில் எழுசமன் தூதர்
இயமலோ கத்தினிற் கொடுபோய்
முழுதுயிர் அடங்க விழுங்குமா மறலி
முன்னர்விட் டனரென நினைந்தான். (11)

710. காலகா லன்மூ இலைநெடுஞ் சூலக்
கண்ணுதற் பரமன்மா தேவன்
நீலமார் கண்டன் பசுபதி விமலன்
நின்மலன் எனுஞ்சிவன் நாமஞ்
சாலவுண் டதனை யோதுவோம் என்று
சாற்றியந் தகன்பயந் தணந்து
மேலுமே சிவலோ கத்தளப் பருநாள்
மேவியா னந்தவீ டடைந்தான். (12)

---

## அத்தியாயம் 26.

### சிவநாம பஞ்சாக்கர மான்மியம்-தொடர்ச்சி

யமன் காலனுக்கு உரைத்தது. புட்கரன் கதை

அரிநாமம் விட்டு சிவநாமம் ஜெபித்தது

விஷ்ணு பக்தனான **புட்கரன்** என்னும் மறையோனை எனது தூதர்கள் கொண்டுவந்து யமபுரியில் விட்டனர். அதைக்கண்ட நான் அவர்களைப் பார்த்து 'இவன் புண்ணியவான். நீங்கள் கொண்டுவர வேண்டியது புட்கரன் என்னும் பெயருள்ள வேறொருவன். இவனைப் பூவுலகில் விட்டு அவனை இங்கே கொண்டு வாருங்கள்' என்றேன். அப்படியே என் தூதர்கள் செய்தனர். இங்ஙனம் விடுபட்ட புண்ணிய சீலனான புட்கரன் "ஹரி நாமத்தை நான் தினந்தோறும் ஜெபித்தும் யமதூதர்கள் கையிற் பட்டேன்; யமலோகஞ் சென்றேன்; ஆதலால் இனி நான் மார்க்கண்டன் பொருட்டு யமனை உதைத்த பரமனது நாமத்தையே ஜெபிப்பேன்" எனத் தீர்மானித்து அங்ஙனமே ஜெபித்துச் சகல போகங்களையும் இவ்வுலகில் அனுபவித்துப் பின்பு சிவலோகஞ் சேர்ந்து ஈற்றில் பேரின்ப வீட்டை அடைந்தான்,

#### யமன் காலனைத் தேற்றித் தொழில்புரி முறைமையைக் கூறுவது

காலனே! நீ கீழோரைத் தண்டித்து மேலோரைப் புரப்பாயாக. திருமால் அவதாரமான (தசரத) ராமனையே நான் சென்று அழைத்து வந்தேன். ஆதலால் நீ வருந்தாதே! ஏன் பயப்படுகின்றாய்! உன் மயக்கத்தை விடு. சிவநாமத்தையும் சிவனடியார் நாமத்தையும் ஜெபிக்கின்றவரைத் தவிர வேறு யாரையும் நீ கைவசப் படுத்தலாம். இது உண்மை. என் அதிகாரத்தை நீ அச்சமின்றிச் செலுத்துவாயாக. இன்னுங் கேள்; பார்வதி, விநாயகர், குமரவேள். பைரவர், வீரபத்திரர், சாத்தனார், நந்தீசர், மாகாளர், சூலாயுதம், இடபம், சிவனடியார்கள்—இவர்கள் நாமத்தைத் தரித்தவரும் ஜெபித்தவரும் பாபமே இல்லாதவர்கள். அவர்கள் மேல் எனக்கு அணுவளவேனும் அதிகாரம் இல்லை. அவர்களைக் கண்டாலும் நான் தூர விலகிப்போவேன். ஆதலால் நீயும் அங்ஙனமே இரு; உன் கவலையை விடு; இன்னமொரு கதை கூறுகின்றேன் கேள் :—

#### அடியார் நாம விசேடம்: வியாக்கிரபாதன் கதை

மகததேசத்தில் **பாரவி** என்றொரு மறையவன் இருந்தான். அவன் பாவமே புரிந்தான்; பல மங்கையரைப் புணர்ந்தான்; திருடினான்; காட்டில் வசித்தான். ஊர்க் காவலன் ஒருவன் இவனைத் தொடர்ந்து பிடித்துக் கட்டி ஒரு குகையிற் கொண்டு போம்போது ஒரு புலி அந்தக் காவலன் மேற் பாய்ந்து அவனை இழுத்துக் கொன்றது. காவலன் கையினின்றும் விடுபட்ட மறையோன் கவலை ஒழிந்து கேரள தேசத்துக்குச் சென்று 'காலனைக் கொன்றான்' எனப் புதுப்பெயர் புனைந்து திரிந்தான். பின்பு, ஊர்க்

காவலன் பிடியினின்றும் தன்னைப் பிழைப்பித்தது புலி தானே என்று ஒரு நினைப்பு வர அவன் **வியாக்கிரபாதன்** என்னும் பெயரைப் பூண்டான். ஊராரும் அவனை அப்பெயர் கொண்டே அழைத்தனர். பின்னர், அவன் இறக்க அவனைப் பிடிக்க யம தூதர்கள் வந்தார்கள்; அப்போது சிவ கணங்கள் வந்து தூதர்களை வெருட்டி அடித்து வியாக்கிரபாதனை விமானத்தில் ஏற்றிக்கொண்டு சென்று பலவித உபசாரத்துடன் கயிலையிற் சிவ சந்நிதியிற் சேர்த்தார்கள். அப்போது சிவபிரான் அவனை நோக்கி 'நீ எமது அடியவனும் வியாக்கிர பாதனது அருமையான பெயரை, அதன் பெருமையை அறியாமல் தரித்த போதிலும் என் முன் வரும் பேறு பெற்றாய். நீ என் அயலிலேயே இருந்து வீட்டின்பம் பெறுவாயாக'' என்றனர். அச் சமயத்தில் நந்தீசுரர் என்னைக் கொண்டு போய்ச் சிவ சந்நிதியில் விட்டனர். நான் சிவபிரானை வணங்கி வியாக்கிர பாதனது வரலாற்றைக் கூறினேன். அப்போது சிவபிரான் ''என் பெயரையும், எனது அடியார்கள் பெயரையும் தரித்தவர்களிடம் உனக்கு அதிகாரம் இல்லை. உன் தூதர்கள் வியாக்கிர பாதனை இவ் வுண்மையை யறியாது துன்புறுத்தினர். அறிந்து செய்திருப்பார்களாயின் அவர்கள் தண்டிக்கப் பட்டிருப்பார்கள்.'' என்றார். நானும் ''சுவாமீ! அவர்கள் அஞ்ஞானத்தாற் செய்த பிழையைப் பொறுத்தருளுங்கள்''-என்று கூறிப் பணிந்து வீழ்ந்தெழுந்தேன். அப்போது சிவபிரானது பக்கத்திலிருந்த குக மூர்த்தி என்னைப் பார்த்து,

### சதா நந்தர் கதை: அரகர நாம விசேஷம்

''முன்பொருகால், **சதாநந்த முனிவர்** நரக லோகத்துக்குச் சென்று அங்கு அடிபட்டு வருந்துவோர்களைக் கண்டு, அவர்கள் மேல் இரக்கங் கொண்டு, அவர்களை உய்விக்க வேண்டி ''அரகர'' என்று ஒலி செய்ய, அவ் வொலியைக் கேட்ட புண்ணியத்தால் நரகிலிருந்தோர் யாவரும் விமானத்தில் ஏற்றப்பட்டு சிவ சந்நிதியைச் சேரப் பெற்றார்கள். நரகலோகம் காலியானதைக் கண்ட நீ சிவபிரானிடம் வந்து அந் நிகழ்ச்சியைக் கூறச் சிவபிரான் ''கூற்றுவ! நமது பெயரைத் தரித்தவர்கள், கேட்டவர்கள், பரவினவர்கள், அறியாதுஉரைத்தவர்கள், அம்பிகை, விநாயகர், வேலர்' கணங்கள், பத்தர்கள் இவர்கள் பேரை உரைத்தவர்கள், கேட்டவர்கள்—இவர்களுக்கும் இவர்களது சுற்றத்தாருக்கும், பித்ருக்களுக்கும் நரக வாசம் கிடையாது'' என உரைத்தனரே! ''ஏனடா மூடா! இந்நிகழ்ச்சி தெரிந்தும் அதை மறந்து நீ இங்குவந்தாய்! துரோகி! போ!'' என என்னை வெருட்டினார். நான்நடுக்குற்று அவர் பாதத்தைப் பணிந்து தஞ்சம் தஞ்சம் எனப் போற்றி என் உலகத்துக்கு மீண்டேன். காலனே! நீ இக்கதைகளை எல்லாம் மனதில் வைத்து மறவாதிரு! சிவநாமம் புகல்பவரைக், கேட்பவரைக் கண்டால் வெகு தூரத்திற் போய்விடு! —என யமன் கூறிமுடித்தான். காலனும் அன்றுமுதல் சிவனும் சிவனடியாருமே நமக்குத் துணையெனக் கொண்டு தனது கடமையைச் செலுத்தி வந்தான்.

எம்பெருமானது புனித நாமங்களைச் செபித்தவர்கள் செல்வம், ஆயுள், மக்கட்பேறு, நோயின்மை, இளமை, பூதபிசாசுகள் துட்டமிருகங்கள் அணுகாமை, போரில் வெற்றி, சித்திகள், நினைத்தவை பெறுதல் ஆகிய பலவித நலங்களையும் பெற்றுள்ளார்கள். விபூதி, ருத்ராக்ஷம் அணிந்து சிவநாமத்தை உரைப்போர் சிவ சாரூபம் பெறுவர். இந்த மான்மியங்களைக் கேட்போர் நோயின்றி இன்பம் உற்று புத்திரப்பேறு முதலிய அடைந்து வீட்டின்பம் பெறுவர்.

## அத்தியாயம் 26.

### புட்கரன் கதை-அரிநாமம் விட்டு சிவநாமம் ஜெபித்தது யமன் காலனுக்கு உரைத்தது

#### எழுசீர் விருத்தம்

711. **வ**ரியளி முரல இதழ்முறுக் குடைந்து
மதுமழை பிலிற்றுபைந் துளவத்
தெரியலிந் திரைகண் துயல்வரு தடந்தோட்
செம்மலுக் காட்படு மறையோன்
அரியநற் றவனும் **புட்கரன்** தனையெம்
அரும்படர் கொணர்ந்துவந் தியம
புரியின்விட் டனர்மற் றவனைநான் கண்டு
பொருக்கெனத் தூதரோ டுரைத்தேன். (1)

712. **பு**ண்ணிய வடிவாம் இவன்தனைக் கொடுபோய்ப்
பூவில்விட் டரியபா வங்கள்
பண்ணிய மறையோன் வேறுபுட் கரனப்
பதியுளன் அவன்தனைக் கொடுவந்(து)
எண்ணிய இயம புரிவிடு மின்கள்
என்றஎன் மொழிப்படி அவனை
மண்ணியல் புறவிட் டம்மறை யோனை
வலிதினில் தழீஇக்கொடு வந்தார். (2)

713. **த**ண்டுழாய் அலங்கற் பண்ணவற் காளாந்
தருமபுட் கரனுளத் தோர்ந்து
கொண்டரி நாமந் தினந்தொறுஞ் செபித்துங்
கூற்றுவன் தூதரெற் கொடுபோய்ச்
சண்டன்மே வுலகிற் சென்றனர் என்று
தன்னுளத் தோர்ந்துமுற் பகல்மார்க்
கண்டனுக் காக அந்தகற் செற்ற
கண்ணுதல் நாமமே செபித்தான். (3)

714. **மு**ரிதிரைப் பரவை யுலகினிற் சீவன்
முத்தனாய்ச் சிவன்தன்நா மத்தின்
அரியமான் மியத்தால் தருமனாய் உலகில்
அளப்பரும் போகமத் தனையும்

---

711. இந்திரை-இலக்குமி. துயல்வரு-அசையும்.

713. சண்டன்-யமன்

பிரிவற நுகர்ந்திங் கிருந்துபின் செல்வம்
பெறுசிவ லோகமுற் றங்கண்
உரியமா போகந் துய்த்தியன் மீளா
தோங்குபே ரின்பவீ டடைந்தான். (4)

**யமன் காலனைத் தேற்றித் தொழில்புரி முறைமை கூறுவது**

715. அரந்தைகொள் கால! பன்முறை யுரைத்தென் ?
ஆதரை யட்டற வோரைப்
புரந்தருள் திருமால் தசரத னிடத்திற்
பூரண மாயவ தரித்துத்
திருந்துசற் குமர னுரா மனையுஞ்
சென்றுநான் அழைத்துவந் தனன்நீ
வருந்தலா கையினுற் பயமுனக் கென்கொல்?
மம்மர்நீத் திடுதிமால் தணந்தே. (5)

716. திங்களங் கண்ணி மிலைந்தசெஞ் சடிலச்
சிவன்தன்நா மமுமவன் அடியார்
தங்கள்நா மமும்உச் சரித்திருக் கின்றோர்
தவிரமற் றோர்களெல் லோரும்
இங்குநம் முடைய கைவசம் அடைந்தோர்
ஈதுண்மை யுண்மைக ளாகுந்
தூங்கமா யினிநீ என்னதி காரந்
துணுக்கமற் றியன்புரி குதியால். (6)

717. அஞ்சல்நீ கேட்டி யின்னமொன் றுரைக்கேன்
அம்பிகை விநாயகன் குமரன்
கஞ்சுகன் வீர பத்திரன் ஐயன்
கருணைநந் தீசன்மா காளன்
செஞ்சுடர் ஒளிரந் திராயுதம் இடபஞ்
சிவன்மகிழ் பத்தர்நா மங்கள்
விஞ்சவே செபிக்கின் றோர்தரிக் கின்றோர்
வெய்யபா தகமிலார் உண்மை. (7)

718. அவர்தமைக் குறித்திங் கெனக்கதி காரம்
அணுத்துணை யும்மிலை யவரைப்
புவனமீ தினிற்சேண் காண்பினும் அகன்று
போகுவன் ஆகையால் நீயுந்
தவமுடை யவர்க்கண் டிடில்நெடுந் தூரந்
தனிற்பணிந் தகன்றுபோய்ப் பின்னர்
கவலையற் றிடுதி யிவணிலோர் காதை
கட்டுரைக் கின்றனன் அம்மா. (8)

---

715. அரந்தை-துன்பம்; ஆதர்-அறிவிலிகள்.

717. அந்திராயுதம்-சூலம்; அந்திரன்-சிவன்; 'அந்திரனை ஆரூரில் அம்மான் தன்னை 'சித்தர் எடுத்தேத்தும் அந்திரன்'- [அப்பர்-VI-29-4; IV-21-7]

(யமன் காலனுக்கு உரைத்தது: அடியார் நாம விசேடம்—வியாக்கிரபாதன் கதை)

719. சங்குவாய் முரல்பைந் தடத்தயற் பசுங்காய்த்
தாற்றிளங் கமுகினிற் கயவாய்ச்
செங்கணின் உடல்வாளைப்பக டெழுந்து
தேறலிற் பாய்ந்துழக் கிடத்தேன்
துங்கமா மலைவெள் ளருவியிற் றாங்குஞ்
சூழ்பணை **மகததே** யத்தில்
தங்குமா நிபுணன் இரவியை நிகர்மெய்
தாங்குபா **ரவி**யெனும் மறையோன், (9)

720. முற்பகற் புரிபா வத்தினுற் கனிவாய்
முகிழ்நகைக் கணிகையர் உரத்து
வெற்பெனத் திரண்ட கொங்கைதோய்ந் தென்றும்
விம்பவாய் இதழமு தருந்தி
அற்பகற் புரமூர் எங்கணுங் காவ
லாளர்கா ணுவகை திருடிப்
பொற்புறு நெடுங்கான் வைகுவன் அவன்பின்
போந்தொரூர் காவலன் தொடர்ந்தான் ; (10)

721. கரவடற் பிணித்து வெட்டுகுத் தெனுமூர்க்
காவலன் தன்னையோர் குகையில்
இரவுறழ் பிலவாய்ப் பொறிவிழிப் புலிபாய்ந்
தீர்த்துமாய்த் தகன்றது மறையோன்
பரிபவந் தீர்ந்து **கேரள தேயத்**
படர்ந்துதன் தனக்குமோர் நாமம்
விரவு**காலனைக்கொன்** றோனென நவமாய்
வியப்புடன் தரித்துல வினனால். (11)

722. உழுவைவள் ளுகிர்க்கா லாலெமைக் கொலவந்
துடற்றுமூர் காவலற் றடிந்திப்
பொழுதுயிர் பிழைத்தேன் ஆகையால் இன்னும்
புதியதோர் பெயர்கொள்வேன் என்றுள்
எழுவிருப் பதனால் **வியாக்கிர பாதன்**
என்றுபேர் கொண்டனன் அவனைப்
பழுதறு வியாக்கிர பாதனென் றறிந்தெப்
பகலுமப் பதியுளோர் அழைத்தரர். (12)

---

720. அல்-இரவு.

723. இம்பரன் னவனும் வியாக்கிர பாதன்
என்றுலாய்த் திரிந்துயிர் இறந்தான்
வெம்புடல் பதைக்க அவன்றனைப் பிணிப்பான்
மிக்கதூ துவர்கள்வந் தடைந்தார்
செம்பவ ளக்குன் றாகிய முக்கட்
செல்வர்தூ துவர்கள்வந் துடற்றித்
தம்படை யெடுத்தித் தூதரை எற்றித்
தணந்திடா தவற்கொடு படர்ந்தார். (13)

724. பருமணி யிழைக்குந் திப்பிய விமானப்
பதுமபீ டத்தின்மேல் ஏற்றிப்
பொருவில்தே வர்களும் இருடிக ளும்மே
போற்றவான் துந்துபி கறங்க
மருமலர் மாரி யெங்கணும் பொழிய
மற்றும்நா னுவுப சாரம்
திருவொடு பொலியச் செய்துவான் கயிலை
திகழ்சிவ சந்நிதி விடுத்தார். (14)

725. அங்கணன் அடியார்க் கெளியவன் அவனை
அருள்கொடு நோக்கியே யுரைப்பான்
இங்கெம தடியான் வியாக்கிர பாதன்
இரும்பெயர் அறிவிலா மனுநீ
மங்கல மாகத் தரித்ததால் இங்ஙன்
மரீஇநெடு நாள்வதிந் துயர்வீ(டு)
இங்கித மாகப் பெறுதியென் றவனை
யிருத்தினன் றன்னயல் இறையே. (15)

726. அன்னபோ தெனைநந் தீசுரன் கொடுபோய்
அமரர்மா முடிகள்பட் டுரிஞ்சிப்
பன்னருஞ் சிறப்பிற் பழந்தழும் பிருந்த
பதுமசே வடியகண் ணுதலின்
சன்னிதி யயலின் விட்டனன் நானுஞ்
சரணென அடியில்வீழ்ந் திருகை
சென்னிகூப் புபுநின் றனன்வர வென்கொல்
செப்பெனச் சிவனருள் புரிந்தான். (16)

727. சென்றவா றனைத்தும் அப்பகல் உரைத்தேன்
திங்களங் கண்ணியோன் எனையுந்
துன்றுபே ரருளால் நோக்குபு யமனே
தூயநம் பெயரையா ரொருத்தர்

725. அவனை-வியாக்கிரபாதனை.

வென்றியில் தரிக்கின் றோர்களப் பெயரை
விரும்பியே சிவம்புரி கின்றோர்
என்றுமற் றவர்பால் உனக்கதி காரம்
இலைமுனப் படிவரங் கொடுத்தோம். (17)

728. அன்னதால் உனது தூதர்மற் றிவனை
யடல்செய்து பிணிக்கவந் தனர்கள்
முன்னறிந் திதுசெய் தனர்களேல் இவர்க்கு
முருக்குதண் டமுமுள தறியா(து)
இன்னது புரிந்த படியினால் விட்டோம்
என்றிறை சொன்னவா சகங்கேட்(டு)
அன்னவன் மலர்த்தாள் முன்னர்வீழ்ந் திறைஞ்சி
யறிந்தவா றொருமொழி யுரைத்தேன். (18)

729. கண்ணுதற் சாமி! அடியனே வற்செய்
காலதூ துவரஞ்ஞா னத்தால்
எண்ணமொன் றின்றிப் புரியப ராதம்
இக்கணம் பொறுத்தருள் புரிநீ
விண்ணவர்க் கரசே! என்றுபன் முறைநான்
வீழ்ந்தடி பணிந்தெழுந் திருகைத்
தண்ணுறுங் கமலங் கூப்புபு வழுத்தித்
தஞ்சம்நீ யென்றுநின் றயர்ந்தேன். (19)

குகப்பிரான் யமனுக்கு உரைத்தது-'அரகர நாம விசேடம்' சதாநந்தர் கதை

730. களங்கனி யனைய கண்டன்வா னுதல்கூர்
கதமெழரி வருகுகன் உமைகோன்
துளங்கயல் வதிந்தென் வதனநோக் குபுமுன்
சொற்றனன் முனி சதானந்தன்
விளங்குமோர் கலைக்கூன் முகப்பிறை மிலைந்த
வேணியற் கன்பனெவ் வுலகும்
உளங்கெழு மகிழ்ச்சி யுடன்தடை யறவே
ஒருமையில் திரிந்திரி கின்றோன். (20)

731. ஆதிநாள் இயம தூதரால் அடிபட்
டருநர கத்துறு வோர்க்கண்(டு)
ஓதினன் ஒலியோ டரகர வென்றே
யுளமலி தயவுடன் அப்போ(து)
ஏதிலா ரில்தீ நரகுறு வோர்சொல்
இருசெவி கேட்டபோ திமைக்குஞ்
சோதிமா னத்தில் ஏறுபு கடுக்கைத்
தொங்கலோன் சன்னிதி யடைந்தார். (21)

732. நிரயமக் காலை யொருவரும் இன்றி
நின்றுபாழ் பட்டது நீபோய்
விரைநறுங் கடுக்கை வேணியற் பணிந்து
விமலனே! அரகர எனுஞ்சொற்
புரையறக் கேட்டே யிவர்களெல் லாரும்
பொருக்கென நரகம்விட் டிவண்கூர்
நிரைநிரை யாய்வந் தடைந்தனர் என்றாய்
நின்னைநோக் குபுபரன் உரைப்பான். (22)

733. நரகவா தனைகூற்று! அவர்க் கில்லை
நம்பெயர் தரித்தபேர் கேட்டோர்
பரவினோர் அறியா துரைவழக் கத்திற்
பகர்ந்தவர் ஆசையிற் பகர்ந்தோர்
விரவுநம் பெயரம் பிகையொரு கொம்பன்
வேலவன் கணங்கள்பத் தர்கள்பேர்
வரமுறை உரைத்தோர் கேட்டபே ரவர்க்கு
வாய்மைபா வம்நர கிலையே. (23)

734. உண்மையீ தேவ ராகிலும் உரைப்போர்
கேட்பவர் தென்புலத் தோர்க்கும்
வண்மையொக் கலுக்கும் நரகமொன் றின்றால்
வாய்மையென் றெம்பிரான் முன்னர்
திண்மையின் உரைத்தான் ஏனடா! மூடா!
தேவதே வேசன்முன் வந்தாய்
தண்மையாந் துரோகி போ!என வுரைத்த
சண்முகன் சொற்குநான் பயந்தேன். (24)

735. தஞ்சம்நீ யன்றி யடியனேற் கார்கொல்
சாற்றெனப் பதம்பணிந் தெந்தாய்!
அஞ்சலென் றருள்நீ யென்றுவாழ்த் துபுநான்
அவன்தன தாணையால மீண்டென்
விஞ்சுல கடைந்தேன் ஆகையால் நீயிவ்
வேலவன் கதையெலாங் கேட்டாய்
நெஞ்சினில் இனியெப் போதுநீ யிதனை
நினைந்துணர் மறந்திடா தம்மா. (25)

736. வள்ளிலைச் சூல மேந்திநா மங்கள்
மான்மியம் அனைத்தையும் அவன்தன்
உள்ளடி யார்கள் நாமமான் மியமும்
உணர்ந்துநீ யென்னுல கிருத்தி

புள்ளிமான் அதள்சேர் புனிதன்நா மங்கள்
புகல்பவர் கேட்பவர் கண்டால்
உள்ளமோ டெனதா ணையைமற வாமல்
ஒருவுவை நெடிதுசேண் அகன்றே. (26)

737. என்றுமா மறலி யுறுதியாய்த் தெளிய
இயம்புசொற் காலனுங் கேளா
அன்றுதொட் டமலன் நாமமான் மியமும்
அவனடி யார்கள்மான் மியமுந்
தன்றுணை யெனவே யுளத்தினில் ஓர்ந்து
சந்ததம் நினைத்திருக் கின்றான்
கொன்றைவே ணியன்றன் நாமமான் மியமார்
கூறுவார் எவர்க்குமீ தரிதால். (27)

738. முனிவிர்காள்! சிறிதின் றறிந்தவா றுரைத்தேன்
முன்னனே கம்பனெங் கோமான்
புனிதனு மங்கள் செபித்திருஞ் செல்வம்
பொருக்கென அடைந்தனர் சிலபேர்
துனிவிலா நிறையா யுற்றனர் சிலபேர்
தோன்றல்மிக் கெய்தினர் சிலபேர்
நனிபெரும் பிணிதீர்ந் தனர்சில பேர்கள்
நரையிலா இளமையோர் சிலபேர். (28)

739. சிலபெயர் பூத குணபவே தாளஞ்
சிலர்விட மிருகமஞ் சாதார்
சிலபெயர் பொருஞ்செம் புலத்துவெஞ் சமரிற்
சேரலர்ச் செற்றுவென் றிடுவோர்
சிலபெயர் பெருகு பகீரதி கடுப்பச்
சித்திவாக் கலகிலா அடைந்தோர்
சிலப்பெயர் இறைவன் நாமமுச் சரித்துச்
சிந்தைவேண் டுவவெலாம் அடைந்தோர் (29)

---

736. ஒருவுவை-நீங்குவாயாக.

738. முன்னன்-முன்னவன்-இறைவன். நிரை ஆயு உற்றனர் ஆயு-ஆயுள். தோன்றல் மகன்.

739. குணபம்-பேய்; சேரலர்-பகைவர்.

740. ஆற்றருந் தவத்தீர்! பூதிகண் டிகைமவேய்ந்
தமலனை மந்திரிக் கின்றோர்
போற்றுசா ரூபம் உற்றவர் பெருமை
புகல்வதற் கரிதவர் அடியார்
ஏற்றமான் மியங்கள் படிப்பவர் கேட்போர்
இன்பமே யுற்றுநோய் ஒரீஇமெய்ப்
பேற்றோடு புதல்வர் முதலிய அடைந்து
பின்னர்வீட் டின்பமும் பெறுவார் (30)

---

## அத்தியாயம் 27.

### விரத மான்மியம்

முனிவர்களே! சிவ விரதங்களைக் கூறுகின்றேன். இவ்விரதங்களை அநுட்டிப்போர் அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் நாற்பொருளையும் பெறுவர்; பெரும் போகங்களைத் துய்த்து நற்கதி கூடுவர் :—

I **சிவ விரதங்கள் 8** :—அவைதாம் சோமவார விரதம், ஆதிரை விரதம், சூல விரதம், சிவராத்திரி விரதம், உமா மகேசுர விரதம், கலியாண விரதம், கேதார விரதம், இடப விரதம்.

II **பார்வதி விரதம் 3** :—வெள்ளி-கௌரி விரதம், ஐப்பசி-உமா விரதம், ஐப்பசி நவமி விரதம்.

III **ஐங்கரன் விரதம் 3** :—சுக்கிரவார விரதம், புரட்டாசி விநாயகசதுர்த்தி விரதம், மார்கழி சஷ்டி விரதம்.

IV **முருகவேள் விரதம் 3** :—சுக்கிரவார விரதம், கிர்த்திகை நாள் விரதம், கந்த சஷ்டி விரதம்.

V **வயிரவ விரதம் 3** :—தை மாதத்தில் ஆதிவார விரதம், சித்திரை மாதத்தில் குருவார விரதம், சித்திரை மாதத்தில் பரணிநாள் விரதம்.

VI **வீரபத்திர விரதம் 1** :—செவ்வாய்க்கிழமை விரதம்.

**இவ்விரதங்களின் விதிகளும் மகிமையும் :—**

1. *சோமவார விரதம் :—கார்த்திகை மாதத்தில் முதற் சோமவாரத்தில் அதிகாலையில் எழுந்து சிவபிரானை நினைந்து, சுத்தியான நீரிற் குளித்து, கடன்களை முடித்துச், சிவனை அருச்சித்து, அவருக்கு அடிமையாகிய பக்தியுள்ள மறையோரை அவர் மனைவியுடன் பரமசிவன்-உமை எனப் பாவித்துப் பணிதல் வேண்டும்.*

---

* [அவர்களுக்கு அரிசி முதலிய தானங்கள் கொடுத்துப் பின்னர் ஒருவேளை உண்டிகொள்ள வேண்டும். சூரியன் அத்தமித்த பின்பு உண்ணுதல் நன்று சிவபூஜை யில்லாதவர்கள் சிவாலயத்துக்குச் சென்று துதித்து, அபிஷேகம், அருச்சனை புரிந்து பிராமண போஜனம் செய்வித்து, ஒருவேளை உண்டோ, முழுப்பட்டினி யிருந்தோ இவ் விரதத்தை அநுட்டிக்கவும்.]

*இந்த பாகம் கோனேரியப்பர் உபதேச காண்டத்தினின்றும் குறிக்கப்பட்டது.

## அத்தியாயம் 27.

### விரத மான்மியம்

### சிவ விரதங்கள்

#### எண்சீர் விருத்தம்

741. பருதியுல கிருளகற்றும் பான்மையெனத் தோற்றிப்
பல்லுயிர்க்கெல் லாமிரங்கிப் பரிந்துதவம் புரிந்து
சுருதிநெறி முறைபிறழா விரதங்கள் இயற்றும்
தொல்லைமுநி வீர்!சிவன்மா விரதங்கள் உரைக்கேன்
கருதியொலி முதலியஐந் தடக்கிமகிழ்ந் துள்ளங்
களிகூர எல்லீரும் ஒருமையுடன் கேண்மின்
விரிதிரைநீர் உலகினிலிவ் விரதங்கள் புரிவோர்
மெய்ம்மையறம் பொருளின்பம் வீடுபேறு குவாரால். (1)

742. சோமவா ரவ்விரதம் ஆதிரைநாள் விரதஞ்
சூலவிர தஞ்சிவராத் திரிவிரதம் வேண்டுங்
காமியநல்கும் உமாமயேச் சுரவிரதம் எங்கோன்
கலியாண விரதமிகு கேதார விரதம்
ஆமிடப விரதமெட்டுஞ் சிவவிரதம்; வெள்ளி
யருள்விரதங் கவுரிவிர தந்துலையின் திங்கள்
சேமவுமா விரதமத்திங் களினவமி விரதந்
திகழொருமு விரதமும்பார்ப் பதிவிரதம் ஆமே. (2)

743. மங்கலமா கியவெள்ளி நாள்விரதங் கன்னி
மதிமருவி வருவிநா யகசதுர்த்தி விரதம்
பொங்கியமார் கழியாறுந் திதிவிரதம் மூன்றும்
புகர்முகத்தைங் கரன்விரதஞ் சகலமுமே உதவும்
சுங்கவன்தன் வாரவ்ரதம் கார்த்திகைமார் விரதந்
தொல்லுலகெ லாம்புகழுங் கந்தசட்டி விரதம்
இங்கிதமாம் ஒருமூன்று விரதமும்போர் வேற்கை
யெங்கோமான் விரதமுநி வீர்எவையுந் தருமே. (3)

744. விரிசுடர்பாய் அவிரொளிசேர் தைப்பானு வார
விரதஞ்சித் திரைமதிசேர் குருவிரதம் இன்னும்
உரியஅத்திங் களிற்பரணி விரதமிவை மூன்றும்
ஓங்குவயி ரவவிரதங் காமியங்கள் நல்கும்
அரியஅங்கா ரவ்வார விரதநர சிங்கம்
அடுசிம்புள் எனும்வீர பத்திரன்மா விரதம்
பிரிவறஇவ் விரதமனுட் டித்தோர்கள் இருமைப்
பெரும்போகந் துய்த்தபின்னர் பெறுவரிருங் கதியேன் (4)

---

742. வெள்ளி விரதமாம் கவுரி விரதம்-
743. சுங்கவன்-சுக்கிரன்.

### 1. சோமவார விரதம்

745. சத்தியமீ திவ்விரத விதிகளுமான் மியமுஞ்
சாற்றுகின்றேஞ் சோமவா ரத்தின்விதி யுரைக்கில்
நித்தியகார்த் திகைமதியின் முதற்சோம வாரம்
நிசிபுலர்வை கறையெழுந்து நிமலன்தாள் நினைந்து
சுத்தியுறு நீர்படிந்து நியதிபுரிந் தெங்கோன்
துணைமலர்த்தாள் அருச்சித்துச் சிவன்தனக்காள் ஆகிப்
பத்திபுரி மறையோரை யவர்மனைவி யுடனே
பரசிவனும் உமையுமெனப் பாவித்துப் பணிந்தே. (5)

746-753...............

குறிப்பு.—பாடல்கள் 746 முதல் 753 வரை ஏட்டுப் பிரதிகளில் விடுபட்டுள்ளன. விடுபட்ட பாடல்களின் பொருட்குறிப்பு மேலே அத்தியாயச் சுருக்க வசன பாகத்திற் சேர்க்கப்பட்டுளது.

---

## அத்தியாயம் 28.

### திருவாதிரை விரதம்

மார்கழி மாதத்தில் ஆதிரை நாளில் அதிகாலையில் எழுந்து, நடேசப் பெருமானது திருவடிகளைத் தியானித்து, சுத்த நீரிற் படிந்து, சிவாலயத்துக்குச் சென்று, சிவலிங்கத்துக்கும் நடேசருக்கும் அபிஷேகம், நைவேத்தியம், நெய்விளக்கேற்றல் முதலியன நடத்தி, வணங்கி, மகிழ்ந்து, உணவின்றி இருந்து மறுநாள் விடியற் காலையில் எழுந்து சிவபிரானைத் தியானித்து நித்திய கன்மம் புரிந்து, ஐம்புலன்களையும் அடக்கிச் சிவனடியார்களுக்கு அன்னம் இட்டு உபசரித்து, பின்னர் அவர்கள் ஏவத் தான் உண்டு இந்த விரதத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும். இங்ஙனம் இவ்விரதத்தை அநுட்டிப்போர் இருமை இன்பங்களையும் பெறுதல் திண்ணம்.

இவ் விரதத்தை முறைப்படி அநுட்டித்தும், திரு அம்பலத்தில் நடேசப்பெருமானைத் தரிசித்தும் முஞ்சிகேச முனிவரும், பதஞ்சலி முநிவரும், (பாம்பு) கார்க்கோடகனும் பேரின்ப வீட்டை அடையப் பெற்றார்கள். இவ்விரதத்தை அநுட்டித்து வியாக்கிரபாத முநிவர், உபமன்யு முனிவரைத் தமது மகவாகப் பெறும்படியான பாக்கியத்தைப் பெற்றுப் பேரின்ப நிலையை அடைந்தார். இவ்விரதத்தை அநுட்டித்த பெரும் பேற்றால் விபுலன் என்னும் மறையோன் விமானத்தில் ஏறிச் சென்று கயிலையில் இறைவனது திருக்கோலத்தைத் தரிசித்துத் தனது உருவுடனே பூவுலகுக்குத் திரும்பி மீண்டு, தன் மனைவியருடன் அளப்பரும் போகம்துய்த்துத், தேவர்கள் இருடிகள்போற்றச் சிவலோகஞ் சேர்ந்து இன்புற்று, என்றும் பேரின்பவீட்டில் திளைக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றான். இங்ஙனம் இவ்விரத மான்மியத்தால் சித்தியுற்றோர்பலர் ; சிவ விரதங்களுள் இவ்விரதமே சிறந்தது, உத்தமமானது.

## அத்தியாயம் 28.

## சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### (2) திருவாதிரை விரதம்

#### எழுசீர் விருத்தம்

754. மெய்ம்மயிர் பொடிப்ப இருகண்ணீர் வார
　　விமலனைச் சிந்தைசெய் துருகி
மும்மையும் உணரும் முனிவிர்! எப் பொருட்கும்
　　முதற்பெருங் காரண மாகி
இம்மையோ டம்மை நல்கும்ஆ திரைநாள்
　　ஏத்திடு விரதமோர்ந் துரைக்கேன்
செம்மைமார் கழியாந் திங்களா திரைசேர்
　　தினத்தினிற் சுத்தனாய் உணர்ந்தே, (1)

755. கருதுவை கறையிற் கண்படை தணந்து
　　கதமெழரி யுலைமுகம் பழுத்த
பொருவில்பைங் கனகச் சுடர்மணி யிமைக்கும்
　　பொதுவில்விண் முகடளந் தொளிருஞ்
சுருள்விரி சடிலந் திசைதொறும் பரப்பத்
　　தொல்லுயிர் அனைத்தையும் புரப்பான்
கருணையங் கடவுள் நடித்தசெங் கமலக்
　　கழல்பணிந் துளத்தினில் நினைந்தே, (2)

756. உறையுள்விட் டகன்று புறம்படர்ந் தமல
　　உதகமூழ் கிச்செயும் நியதி
குறைவற முடித்துச் சம்புஆ லயத்துட்
　　குறுகியீ சனுக்கபி டேகம்
மறைமுறை விதியால் ஆட்டுவித் தமுது
　　மகிழ்ந்துநை வேத்தியம் புரிந்து
நிறைபசு நறுநெய் பெருவிளக் கேற்றி
　　நின்றுபூ வுறவணங் கிப்பின், (3)

757. நடேசனுக் கபிடே கந்நிவேத் தியங்கள்
　　நன்குறச் செய்துநெய் விளக்கும்
விடாதெடுத் தேற்றிக் கொண்டுகண் களித்து
　　மீளநன் மனைபுகுந் துணவு

---

755. கண்படை-துயிலுதல்: தணந்து-நீங்கி.

756. பூ-நிலம்.

757. விற்றெடுத்து-அழுத்தமாக; உன்னிய பின்னர்-நினைத்த பின்பு.

தொடாதுப வசித்து மற்றைநாள் அருணன்
தோற்றுபோ தெழுந்துசுத் தனுமாய்க்
கெடாதுளத் துறைமுக் கட்குழ கனையே
கிற்றெடுத் துன்னிய பின்னர், (4)

758. நித்திய கன்மம் புரிந்துபின் தேர்ந்து
நீப்பரும் இந்தியஞ் செயித்து
முத்தியை விரும்பும் பரனடி யாரை
முருந்துறழ் சாலியோ தனங்கள்
பத்தியின் அருந்து வித்தவன் தானும்
பரனடி யார்களொ வலினுற்
சுத்தியுற் றிடுசே டம்பரிந் துண்டு
தொல்லையிவ் விரதம்ஆற் றிடுவான். (5)

759. ஆதரம் பெருகப் படஅர வசைத்த
அண்ணலா திரையயப் படியே
மாதொரு புறஞ்சேர் திங்களங் கண்ணி
வள்ளல்மா விரதநோற் கின்றோர்
பூதலம் அரிய பெரியர்மற் றவர்க்குப்
பொருக்கென இருமையும் மலர்க்கை
மீதுமே வியது சொற்றனந் துறவீர்!
மெய்ம்மையீங் கையமற் றிலையே. (6)

முஞ்சிகேச முநிவர் வீடு பெற்றது

760. இந்தநல் விரதம் விதிப்படி நோற்றே
யீர்ஞ்சடை முஞ்சிகே சனென
வந்தமா முநிபொற் பொதுவினில் நடிக்கும்
வள்ளல்தன் நடனமே நோக்கித்
தொந்தநல் வினையாம் பாதகத் தொடர்ச்சித்
துரிசுகந் துரையுணர் விழந்தே
அந்தியும் பகலும் அற்றபே ரொளியாம்
ஆனந்த வீடடைந் தனனால். (7)

---

758. முருந்து-மயில் இறகின் அடி; சாலி-நெல்; ஓதனங்கள்-உணவுகள், அருந்துவித்தவன்-அருந்துவித்தவனாய்.

759. மலர்க்கை மீது இருமையும் மேவியது-இம்மை, மறுமைப் பயன்கள் கையிற் கிட்டுவது திண்ணம்.

760. துரிசு-குற்றம்.

**பதஞ்சலி - கார்க்கோடகன் வீடு பெற்றது**

761. உன்னருந் தவங்கூர் **பதஞ்சலி** முனியோ(டு)
உரக**கார்க் கோடனெ**ன் றிருவர்
தன்னிகர் திருவா திரையரு விரதஞ்
சைவநூல் துறைவிதி நோற்று
மின்னவிர் பொதுவில் நடித்தருள் கடவுள்
மிகுநடங் கண்டுதண் டாத
இன்னலுற் றிடுமெம் பிறப்பினோ டிறப்பும்
இகந்திரு வோரும்வீ டடைந்தார். (8)

**வியாக்கிரபாதர் வீடுற்றது**

762. முருந்துறழ் உகிர்க்கை **வியாக்கிர பாத**
முனிவனிவ் விரதமான் மியத்தால்
அருந்தவ முனிவர்க் கரசனுங் கருணை
யருளு**ப மன்னிய** முனியைப்
பெருந்தகை மதலை யென்றுபெற் றுடற்
பிஞ்ஞகன் நடனமே நோக்கித்
திருந்திய சீவன் முத்தனாய்ப் பரம
சிந்துவில் திளைத்திடப் படிந்தான். (9)

**விபுலன் (மறையோன்) வீடுற்றது**

763. பதனழி சருகு நுகரு முனிவீர்!
பகருமிவ் விரதமே யாற்றித்
திகழுறு தவங்கூர் **விபுலனும்** மறையோன்
திப்பிய விமானமீ தேறி
இகமுடன் அமலம் எனவளர் கயிலை
எய்தியீ சன்மலர்ப் பதம்பல்
விதமுறை பணிந்து தன்னுரு வுடனே
மீளவுந் தன்மனை யடைந்தான். (10)

764. அஞ்சன விழிமெல் லிதழிலா ருடன்சேர்ந்
தளப்பரும் போகமே துய்த்து
விஞ்சிய விமானத் தேறியே யநேக
விண்ணவர் இருடியர் சூழத்
தஞ்சமாஞ் செல்வம் நிறைசிவ லோகந்
தனிலுமே யனந்தபோ கந்துய்த்(து)
எஞ்சலில் உயர்வீட் டின்பவா ரிதியாய்
எறிதிரை வெள்ளமே படிந்தான். (11)

---

762. சிந்து-கடல்.
764. இலார்-இல்லார் (மனைவியர்).

765. எறிதிரை சுருட்டு பரவைநீ ருடுத்த
இருநிலத் தினிற்பலர் சிலர்நன்
னெறியிலிவ் விரதம் நோற்றுள மிசையே
நினைத்தவை பெற்றுவீ டடைந்தார்
குறிகொள்ஆ திரைநாள் சச்சிதா னந்தக்
குழகனெல் லோரையும் புரப்பான்
அறிவுற நடிக்கின் றனன்விர தங்கட்
கதிகமிவ் விரதமுத் தமமே. (12)

---

## அத்தியாயம் 29.

### சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### (3) உமா மகேசுவர விரதம்

கார்த்திகை மாதம் பௌர்ணமியில், காலையில் எழுந்து, நீராடிப் பொன்னினால் அல்லது வெள்ளியினாற் சமைக்கப்பட்ட உமா மகேசுரரது திரு வுருவங்களை அருச்சித்து, அறுசுவை அமுதை நிவேதித்து, வந்தித்துச், சைவ அந்தணர்களுக்குத் தானம் ஈந்து, ஒருவேளை உணவாக அப்பம், பழம் முதலியவற்றை அடியார்களுடன் உண்டு, நல்ல சிவனடியார் யாரென ஆய்ந்து அவருக்கு அந்த உமா மகேசுரரது திரு வுருவங்களைத் தந்து, இவ்விரதத்தை ஒன்றுபட்ட மனத்துடன் விதிப்படிநோற்பவர் வடிவும், ஆயுளும், புகழும், அழகும், அறிவும், செல்வமும் இம்மையிற்பெற்றுப் பின்னர் பேரின்ப வீட்டை அடைவார்.

**திரணவிந்துமுநிவர்** இந்த விரதத்தை நோற்று நல்லகண்பார்வையைப்பெற்றார். கணவனை இழந்தவள் ஒருத்தி இவ்விரதத்தை நோற்றுத் தன் கணவனைஅடையப்பெற்று மைந்தனையும் பெற்றாள். இவர்கள் இறைவன் திருவடி கூடுதலையும் பெற்றார்கள். **மாயோன்** இவ்விரதத்தை நோற்றுத் துவாரகையிற் கோபாலனாய்த்தோன்றிக் கோபியரோடு கூடிப் பதினாறாயிரம் புதல்வரைப் பெற்றான். **பிரமன்** இவ்விரதத்தை நோற்று **காயத்திரி சாவித்திரி** என்னும் மனைவியரைப் பெற்றான். **இந்திரன்**நோற்று **சயந்தனைப்** பெற்றான். **வசிட்டன்** நோற்று **காமதேனுவைப்** பெற்றான். **கவுதமன்** நோற்றுச் **சதாநந்த** முநியை மகவாகப் பெற்றான். **ஜனகர்** நோற்றுச் **சீதையைப்** பெற்றார். **சின்மாங்கன்** என்னும் அரசன் இவ்விரத பலத்தால் பொன்னுலகு சென்று, இந்திரனால் வழிபடப் பெற்று **ஊர்வசியை** மணந்து கற்பக விருக்ஷத்தைப் பூவுலகுக்குக் கொண்டுவந்து சேர்த்து, மைந்தர்களைப்பெற்று, ஈற்றிற் கயிலையை அடைந்து இறைவனது திருவடியைக் கூடப்பெற்றான்.

**சுதன்மன்** என்னும் அந்தணன் புத்தியைஇழந்து கற்றன எல்லாம் மறந்துபோக அவன் இந்த விரதத்தை அன்புடன் நோற்றான். உமாதேவியின் கருணையினால் கலைமகள் அவனிடம் வாசஞ் செய்யப்பெற்று மறைகளையும் பலவித கலைகளையும் நன்கு உணரப் பெற்றான். அரசனால் பல தானங்கள் அளிக்கப்பெற்றான். அகத்திய முனிவரைப்போல புகழ்பெற்று யாவர்க்கும் உபதேச குருவானான். நிகரிலாத நன்மக்களைப் பெற்றான். இங்ஙனம் அவன் சீருடனும் சிறப்புடனும் வாழ்ந்து சிவலோகம் அடையப்பெற்று அங்கே கணங்களுக்குத் தலைவனானான்.

**சிந்துசேனன்** என்னும்அரசன் பகைவரால் துரத்தப்பட்டு மனைவியுடன் காட்டிற் கிழங்குகளை உண்டிருந்தான். அங்கேவந்த அகத்தியமுனிவரை இவன் வணங்கித்தன் வரலாற்றைக்கூற, அவர் உபதேசப்படி இந்த விரதத்தை இவன் அநுட்டிக்கச் சிவபிரா

னது ஆணைப்படி குபேரன் இவனிடம் வந்து "அரசே! உன்பகைவர்களை அழித்து உன்னை உன் நகரிற் சேர்த்து உனக்குப் பட்டங்கட்ட நான் சிவபிரானது ஆணைப்படி வந்துள்ளேன்" எனக்கூறி அங்ஙனமே அவனுடன் சென்று. அவனது பகைவர்களை அழித்து அவனுக்கு மகுடஞ்சூட்டித் தனது அளகாபுரியை அடைந்தான். சித்திரசேனனும் சிறப்புடன் வாழ்ந்து போகம் துய்த்து ஈற்றில் வீடுபேறு அடைந்தான். இங்ஙனமே அனேகர் இவ்விரதத்தை நோற்று, நினைத்த காரியங்கள் கைகூடப் பெற்று சுகம் பெற்றனர்கள். இந்த மான்மியத்தைப் படிப்பவர், கேட்பவர், வளமெலாம் பெற்று வீட்டின்பம் பெறுவர்.

## அத்தியாயம் 29.

## சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### (3) உமாமகேச்சுர விரதம்

#### எழுசீர் விருத்தம்

766. ஓதரு மறைமெய்ப் பொருளுணர் முனிவீர்!
 **உமாமகேச் சுரவிர** தங்கூர்
 ஆதரம் பெருக உரைப்பல்கூ திரெனும்
 அண்ணலங் கார்த்திகை மதியில்
 மேதகு திதிபூ ரணையுவா விரதம்
 மேவுமித் தினத்துவை கறையாம்
 போதுணர்ந் தெழுந்து சுத்தசித் தனுமாய்ப்
 புனிதநீர் ஆடிய பின்னர், (1)

767. இருள்புலர் காலைக் கடன்கழித் திருள்சீத்
 தெழுங்கதிர்ப் பசும்பொன்வெள் ளியினால்
 பொருள்குறை காட்டா துமாமயேச் சுரன்தன்
 பொருவரு திருவுருச் சமைத்துத்
 தெருளறி வதனாற் பத்திகூர்ந் தனேக
 திரவியத் தாலருச் சித்தே
 அருளறு சுவைகூர் அமுதுநண் ணிடப்பா
 டறிந்துபல் விதம்நிவே தித்து, (2)

768. வந்தனை புரிந்து வழுத்தியே தனது
 மனையடைந் தடியராஞ் சைவ
 அந்தணர்க் கரிய தானமீந் தோர்போ
 தாயல்க பூபமாப் பலங்கள்
 சிந்தைதேர்ந் திறைஞ்சும் அடியரோ டருந்திச்
 செயுநிய மத்துடன் முனிவீர்
 இந்தநல் விரத மான்மியம் உணர்ந்தெம்
 ஈசனல் லடியவர் ஆய்ந்தே, (3)

---

766. மதி-மாதம்; கூதிர்-சரற்காலம் (ஐப்பசி, கார்த்திகை); குளிர்:பூரணை உவா-பௌர்ணமி.
767. அறுசுவை-அமுது.
768. அபூபம்-அப்பம்; பலங்கள்-பழங்கள்.

769. திருவுரு வதனை நல்கியிப் படியே
சிவாகம விதிமுறை எவரே
ஒருமையோ டறிந்திவ் விரதநோற் றின்றோர்
உடைதிரைப் பரவைஞா லத்தில்
கருதரு வடிவும் ஆயுவும் புகழுங்
கட்டழ கும்முதுக் குறைவும்
இருநிதி வளமும் பெறுவரம் மையிற்பே
ரின்பவீ டும்பெறு றுவரால் (4)

திரணவிந்து முனிவர் நோற்றது

770. இந்தநல் விரதந் திரணவிந் துவும்நோற்
றிருவிழி முறுக்கவிழ் வனசச்
சந்தமுற் றொளிரப் பெற்றனன் கைம்மைத்
தையலுங் கணவனை யணைந்து
மைந்தனைப் பயந்தாள் பின்னரிவ் விரத
மான்மியந் தரும்பெரும் பலத்தால்
அந்தநாட் கனக மன்றின்மேல் குனித்த
அங்கணன் சேவடி யடைந்தார். (5)

திருமால் நோற்றது

771. வண்டடை கிடந்து முறுக்கவிழ் துளப
மாயனிவ் விரதமுன் நோற்றுக்
கொண்டலின் இருண்ட கருங்குழற் கற்றைக
கோபியர் அவரவர்க் கெல்லாம்
விண்டட வுலவைத் தண்டலைத் துவரை
மீதுகோ பாலனாய் மணந்தே
யண்டரும் மகிழ்ந்து கொண்டிடப் பதினா
றாயிரம் புதல்வரைப் பயந்தான் (6)

பிரமன் நோற்றது

772. விரிசுடர்ப் பசும்பொற் கற்றைவார்ந் தொழுகு
மென்சிறைத் தூவிநின் றுளர்த்துங்
குரிசிலோ திமத்தே கருதரும் வியப்பாற்
கோலவிவ் விரதமுன் நோற்று
வரிவிழி நெடுகி யிருகுழை யிடறி
மதர்த்தகா யத்திரி தனையுஞ்
சுருதியில் உணர்சா வித்திரி தனையுந்
தொல்லைநாள் அடைந்தனன் மாதோ. (7)

---

769. முதுக்குறைவு-அறிவு.
771. துவரை-துவாரகை.
772. ஓதிமத் தே-(ஓதிமம்-அன்னம்; தே-தேவு.)-பிரமன்.

இந்திரன்—வசிட்டன்—கௌதமன் நோற்றது

773. குன்றருஞ் சிறகர் ஈர்த்தொளி பரப்புங்
குலிசனிவ் விரதமுன் நோற்று
வென்றியஞ் சயந்தற் பெற்றனன், வசிட்டன்
மிக்கவிவ் விரதமான் மியத்தால்
துன்றழல் வளர்ப்பான் காமதே னுவையுந்
தொல்லைநாள் பெற்றனன் அதனால்
மன்றல்கூர் கவுத மன்சதா னந்த
மாமுனி யெனுமகப் பெற்றான். (8)

ஜனகர் நோற்றது
அறுசீர் விருத்தம்

774. கொண்டல் படிந்த இளங்கமுகங்
கொழும்பைங் கழுத்தில் கமஞ்சூல்கால்
விண்ட அகடு திறந்துடைந்த
வெள்ளிப் பாளை கிழியஎற்று
மண்டு கயவாய் நெடுவாளை
வயல்சூழ் மிதிலைச் சனகேசன்
பண்டிவ் விரத நோற்றுமலர்ப்
பங்கே ருகச்சீ தையைப்பயந்தான். (9)

சின்மாங்கன் நோற்றது
எழுசீர் விருத்தம்

775. எறும்வலி மடங்கல் அன்ன சின்மாங்க
ஏந்தலிவ் விரதமுன் நோற்றுப்
பெறுதவப் பயனும் பொன்னுல கடைந்து
பிறைநெடுங் கோட்டுவெண் களிற்றோன்
நறுமலர் உகுத்து வழிபட மரீஇவெண்
ணகையுரு வசியையும் மணந்து
மறுவறு கற்ப தாருவுங் கொணர்ந்து
மாநிலம் மீளவந் தடைந்தான். (10)

776. சிந்தையுள் மகிழ்ந்தே இம்பர்பன் னெடுநாள்
சேர்ந்திருங் குலவரைத் திணிதோள்,
மைந்தரைப் பயந்து பின்னர்நற் றினத்தில்
மறையவ ரோடுமைந் தருக்கு
விந்தையுற் றிடுபொற் பட்டமே கட்டி
விரிசுடர் மணிவிமா னஞ்சேர்ந்(து)
அந்தர மிசைச்சென் றேகயி லாய
அசலமுற் றண்ணல்தாள் அடைந்தான். (11)

### சுதன்மன் நோற்றது
### அறுசீர் விருத்தம்

777. சுருதி முடிவாம் உபநிடத்தின்
துறைபோய்த் தெளிவாஞ் சித்தாந்தங்
கருதி யுணரு மாமுநிவர்
கலையுற் றறியாச் **சுதன்மனெனும்**
பிருதி மறையோன் கற்றவெலாம்
பின்னர்ப் புத்தி யொரீஇமறந்தான்
வருதி யெனமற் றிவன்றனை நூல்
வல்லார் இகழ்வார் மூடனென்றே. (12)

778. அந்த அமையத் திவ்விரதம்
ஆர்வம் பெருகும் பத்தியினாற்
புந்தி மகிழ இவன்நோற்ற
பொழுதின் உமையாள் கருணையினால்
வந்து பனுவ லாட்டியிவன்
வதன நடனம் புரிகின்றாள்
எந்தை சிவசாத் திரமனைத்தும்
எளிதா யிவற்கு வந்தனவே. (13)

779. மறையா தியபல் கலையனைத்தும்
வந்த திவற்கு மற்றோர்முன்
முறையால் வருந்தல் இலையவனை
முருகு கமழ்தார்த் திணிதடந்தோள்
இறையா தரவில் அழைத்துவியந்
தேத்தி யனந்தந் தானநிதி
குறையா தளித்தான் அனைவருமீக்
கொளுபத் தியினால் இவற்பணிந்தார். (14)

780. செம்பொன் மணிப்பித் திகையிடையில்
திரள்வச் சிரத்தூண் நிரைநிறுத்தி
யும்பர் நெடுமா ணிக்கமணி
ஒளிருத் தரம்பாய் கழகமிசைக்
கும்ப முநியின் அணைந்தெவர்க்குங்
குறையா எண்ணெண் கலையனைத்தும்
இம்பர் மலைகொல் அனிலம்போல்
இருந்தான் உபதே சம்புரிந்தான். (15)

---

777. பிருதி-பிரீதி-விருப்பம்; ஒரீஇ-ஒருவி-நீங்கி.
778. பனுவலாட்டி-கலைமகள்-சரஸ்வதி.
780. அனிலம்-காற்று.

781. சீருங் குண னும் முதுக்குறைவுந்
தெளிவுங் கொடையும் பேரழகும்
நேருந் தவமுங் குறைகாட்டா
நிகரில் மைந்தர்ப் பயந்துபன்னாட்
பாரும் பரவ இருந்துபின்னர்ப்
பைம்பொன் மணிமா னத்தினடைந்(து)
ஆருஞ் சிவலோ கத்திலெங்கோன்
அருளாற் கணங்கட் கரசானான். (16)

**சிந்துசேனன் நோற்றது**

782. **சிந்து சேனன்** எனுங்குரிசில்
சேரார் துரத்தத் தன்நகர்விட்(டு)
இந்து நுதல்மா மனையுடன்கான்
ஏகி நெடுநாள் வதிந்துபல
கந்த மூல நுகர்ந்திருந்தான்
**கலச முநி**நேர் வரக்கண்டு
வந்து மலர்த்தாள் பரவினன்தன்
வரலா றனைத்தும் பின்னுரைத்தான். (17)

783. சுரும்பு ஞிமிறுங் களிவண்டு
துதைந்து நறுந்தேன் மெல்லிதழ்கொட்(டு)
அரும்பு முறுக்கும் பொதியவிழ்த்தாற்
றருந்திக் களிநல் லியானைமதந்
திரும்பி நுகரும் மணிச்சாரல்
தென்றற் குழவி தமழ்மலையம்
விரும்பு கலச மாமுநியிவ்
விரதம் அரசற் குரைத்தனனால். (18)

784. கன்னற் சிலைவேள் நிகர்நிருபன்
கதிர்முத் தணிந்து புடைதூர்த்த
பொன்னற் றிதலைக் கவினெழுகும்
பொம்மல் முலைமா மனைவியுடன்
உன்னற் கரிய இவ்விரதம்
உவந்து நோற்றப் பகல்அளகை
தன்னில் திகழ்புட் பகவூர்தி
சம்பு அருளாற் கடிதடைந்தான். (19)

---

782. கலசமுநி-அகத்தியர்.

784. அளகை-அளகாபுரி, குபேரன் ஊர்; புட்பக ஊர்தி-குபேரன்.

785. அலங்கு சுடர்க்கொய் யுளைப்புரவி
 அரசன் முகம்நோக் குபுவுரைத்தான்
உலங்கை கெழுதோள் குரிசிலியான்
 உன்னை உனது தேயத்தில்
துலங்க இருத்தி மணிமகுடஞ்
 சூட்டித் தெவ்வர்த் தொலைத்தெனிடத்(து)
இலங்கு புகழோ டடைகுவன்மற்
 றெங்கோன் அருளால் இவணடைந்தேன். (20)

786. என்று மொழிந்தே அரசையழைத்
 திருகோட் டொருமை மதவேழக்
குன்றின் எருத்தத் தேற்றுவித்தக்
 கொடுந்தா னைகள்நா லங்கமுடன்
கன்று செறியும் மலர்க்கைநறுங்
 கனிவாய் மனைவி யுடன்கூடச்
சென்று பகைஞர்த் தொலைத்திவண்பொற்
 சிகர நெடுமா நகரடைந்தான். (21)

787. பருதி யொளிவிட் டிமைக்கும்அடற்
 படைவேல் அரசன் தனக்கெழுதாச்
சுருதி முறையின் படிகடற்பார்
 தொழவே பட்டங் கட்டியபின்
கருதி அனந்த நிதியளித்துட்
 கரைந்தே ஒருவற் கொருவரின்சொல்
மிருதி யெனக்கூ றியபினிவன்
 விடைகொண் டளகை நகரடைந்தான். (22)

வேறு

788. முழுமதிக் குடைநி ழற்கீழ்
 முடங்குளை அணைமேல் அண்ணல்
எழுகதிர் இலங்கோர் ஆழி
 எறிந்துவான் திசையு ருட்டிப்
பழுதிலா உலகங் காத்துப்
 பன்னரும் போகந் துய்த்துத்
தொழுதகு கயிலை சேர்ந்து
 தூயவீ டடைந்தான் மாதோ. (23)

---

785. உலம்-உலங்கு-திரண்ட கல்.

786. கன்று-கைவளை.

787. மிருதி-ஸ்மிருதி-தருமநூல்.

789. அங்கண்மா ஞால மீதில்
அநேகரிவ் விரதம் ஆற்றிப்
பொங்குளம் விழைந்த எல்லாம்
பொருக்கென அடைந்த பின்வீ(டு)
இங்கிதம் பெற்ற டைந்தார்
இந்தமான் மியம்ப டிப்போர்
மங்கல முடன்கேட் போர்பார்
வளமுற்று வீடுஞ் சேர்வார். (24)

---

## அத்தியாயம் 30.

## சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### 4. சிவராத்திரி விரதம்

வசிட்ட முனிவரின் பௌத்திரனுடைய பிள்ளையும், சத்தி முனிவரின் பேரனும், பராசர முனிவரின் மகனும், சுகப்பிரம முனிவரின் தந்தையுமான **வேதவியாசருடைய** தாளைப் போற்றும் சூதமுனிவர் சவுனகாதி முனிவர்களுக்குச் சிவராத்திரி விரதத்தைப் பற்றிக் கூறுவாரானார்: முனிவர்களே! சிவராத்திரி நான்காகும்; சிவராத்திரி நான்கு ஜாமங்களிலும் சிவனை அருச்சிப்பார்கள். முதற் **சிவராத்திரி "யோக சிவராத்திரி"** இது அமாவாசையும் சோமவாரமும் கூடிய தினத்தில் வருவது. **இரண்டாம் சிவராத்திரி " மாத சிவராத்திரி"** அபரபக்ஷத்தில் **சதுர்த்தசி** தோறும் வருவது. **மூன்றும் சிவராத்திரி** மாசி மாதம் சுக்ல பக்ஷத்தில் பிரதமை முதல் அபரபக்ஷம் த்ரயோதசி வரையும், பகலில் மாத்திரம் உண்டு, த்ரயோதசிக்கு அடுத்த நாளில் (சதுர்த்தசியில்) சிவனைத் தியானித்துக் காலையில் எழுந்து, நீராடி, இரவு ஜாமங்கள் தோறும் சிவலிங்கத்தைவழிபடுதல் வேண்டும். **நான்காம் சிவராத்திரி** மாசி மாதம் அபரபக்ஷம் சதுர்த்தசியில் வருவது. அன்று காலையில் எழுந்து சிவனைத் தியானித்து நீராடி மலைவலஞ் செய்து இரவில் தூங்காது சிவனை ஜாமந்தோறும் அருச்சித்து அடுத்த நாள் பகலில் முழுகி, நியமங்களை முடித்து, சிவ பக்தர்களுடன் உண்ணுதல் வேண்டும். இங்ஙனம் நான்கு யாமங்களிலும் தூங்காது சிவனை முறையே வழிபடுவோருக்குக் கூடும் புண்ணியம் சொல்லுக்கு அடங்காது; பல்லாண்டு போகங்களை அனுபவித்து ஈற்றில் பரகதி அடைவார்.

### நோற்றுப் பேறு பெற்றோர்

இவ்விரதத்தை நோற்றதனால் **திருமால்** பிரணவத்துவம் சிவனருளால் அடைந்தார். **பிரமன்** படைப்புத் தொழிலைப் பெற்றான்; **இந்திரன்** தேவருலகுக்கு அரசானான்; **இருடியர்கள்** இறைவனது திருவடிப் பேற்றை அடைந்தார்கள்; **குபேரன்** நிதிச்செல்வன் ஆனான்; **வருணனும் வாயுவும்** அதிசயிக்கத்தக்க சக்தியைப் பெற்றார்கள்; **கன்மாட பாதன்** என்னும் அரசன் **கவுதம முனிவர்** உபதேசப்படி இவ்விரதத்தை நோற்றுப் பிரம கத்தி தோஷமும் சாபமும் நீங்கப்பெற்று தனது நகர் சேர்ந்து வாழ்ந்து ஈற்றில் சிவகதி புற்றான்.

### வேடன் கதை

**வேடன்** ஒருவன் புலிக்கு அஞ்சி ஒரு வில்வமரத்தின் மீது ஏறினான். புலி கீழே இருந்த பயத்தால் மரக்கொம்பிலே இரவெல்லாம் உண்ணாமலும், உறங்காமலும் சிவராத்திரி என்பதை உணராமலும், வில்வ இலைகளைக் கிள்ளி அம்மரத்தின் கீழ் எறிந்து கொண்டிருந்து மறுநாள் இறந்தான். சிவராத்திரியில் ஊண் உறக்கம் இன்றி இருந்த பலத்தால் அவன் சிவலோகம் அடைந்து மகிழ்ந்தான்.

புலைச்சி கதை

புலையர் குலத்தவள் ஒரு கிழவி நோயால் வருந்தி சிவராத்திரி தினத்தில் ஊணின்றிப் பிச்சை கேட்க, வழிப்போக்கன் ஒருவன் ஒரு வில்வ இதழை அவளிடத்தே எறிய அவள் அதை எடுத்துப் பக்கத்தில் எறிந்தாள்; அந்த வில்வம் பக்கத்திருந்த ஒரு லிங்கத்தின்மேல் விழுந்தது. அந்த புண்ணியச் செயலால் அவள் சிவபதம் அடைந்தாள்.

முனிவர்களே! பிரமனும் திருமாலும் தேவர்களும் உலகங்களும் பெருநெருப்பால் அழிகின்ற சங்கார காலத்தில் நடனமூர்த்தியும் உமாதேவியும் மகிழ்ந்திருந்தார்கள். அப்போது தேவி இறைவனைப் பூசித்து "சம்புவே! நீ முன்பு சங்காரம் செய்து மீளப் படைக்கும்போது நான் இரவெல்லாம் உன்னை என் இதய கமலத்தில் போற்றி வழிபட நீ எனக்கு அருள் புரிந்தாய். எவரெவர் இந்நான்கு விதமான சிவராத்திரி ஜாமங்கள் நான்கிலும் உனது கழலைப் போற்றி அருச்சிக்கின்றார்களோ அவர்கள் மண்மிசைப் போகங்களுடன் வாழ்ந்து உனது திருவடியைக் கூடும்படி அருள் புரிவாயாக; அவர்கள் எண்ணிய எண்ணமெல்லாம் அவர்களுக்குக் கைகூடும்படி திருவருள் புரிவாயாக" என்று விண்ணப்பஞ் செய்து அங்ஙனமே வரம் பெற்றுத் தானே முதல் முதல் இவ் விரதத்தை நோற்று இறைவன் அருகில் ஆனந்த உருவாய் அமர்ந்தாள்.

விநாயகர், முருகர், வீரபத்திரர், ஐயனார், கணத் தலைவர்கள், நந்தி, பிருங்கி, மாகாளன் ஆகியோர் இவ்விரதத்தை நோற்று அரிய பதவிகளைப் பெற்றார்கள்.

திருமாலும் பிரமனும் அகந்தை கொண்டு ஒருவரோடொருவர் பகைமை பூண்டு போர் செய்ய, இறைவன் ஜோதிவடிவாய் எதிர் நின்றார். அந்த ஜோதியின் அடியையும் முடியையும் பன்றியுரு எடுத்தும் அன்னப்பறவை வடிவெடுத்தும் எண்ணிலாத காலம் இருவரும் தேடிக் காணாது வருந்தினர். பின்னர் சிவநிசியில் இறைவனது திருவடியை இவர்கள் அருச்சிக்க இறைவன் வெளிப்பட்டார். இருவரும் அவரைத் துதித்து வணங்க அவர்கள் மடமையாற் செய்த அபராதத்தைப் பொறுத்து அவர்கள் விரும்பிய வரங்களைத் தந்து இறைவர் மறைந்தார். அத்தகைய பெருமானது விரதமாகிய சிவராத்திரி விரதத்தின் பெருமையைச் சொல்லுதற்கு என்னால் முடியாது, எனது குரு வியாசராலும் முடியாது, யோகீசுரராம் சனற்குமாரராலும் முற்றும் சொல்ல முடியுமோ முடியாதோ! நந்திதேவர் இவ்விரதத்தின் மேன்மையைச் சிவபெருமான் உரைக்கக் கேட்டார். (எனச் சூத முனிவர் சொல்லி முடித்தார்.

இதைக் கேட்ட முனிவர்கள் உள்ளம் உருக, கண்கள் நீர்வார, மெய்ம்மயிர் பொடிப்ப, உரை தடுமாற பரமானந்த நிலையை அடைந்தார்கள்.

இம்மான்மியத்தைப் படிப்பவரும் கேட்பவரும் அளப்பரும் போகந் துய்த்து, நன்மக்களைப் பெற்று, மனைவியுடன் கயிலையை அடைந்து வீடுபேறு அடைவார்.

## அத்தியாயம் 30.

### சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### (4) சிவராத்திரி விரதம்

எண்சீர் விருத்தம்

790. அருந்தவஞ்செய் வசிட்டமுநி பௌத்திரன்நல் கியசேய்
ஐம்புலன்வென் றிடுஞ்சத்தி மாஇருடி பேரன்
திருந்துதவம் மல்குபரா சரமுநிசற் குமரன்
தீதெறிந்த சுகப்பிரம முநிதாதை யெனவே
பொருந்தியஇம் முறையிருந்த வேதவியா தன்தாள்
போற்றியருட் கருணைவெள்ளம் பொழியமுதுண் டுறைகா(து)
இருந்தருளுஞ் சூதமா முநிசவுன காதி
இருடியர்க்கெல் லாஞ்சிவராத் திரிவிரதம் உரைப்பான். (1)

791. துகள்தீர மகிழ்சிறப்பப் பேரின்பத் துறையுள்
துளைந்துதிளைத் திடுமுனிவீர்! சிவநிசிமா விரதம்
பகர்கின்றேன் கலியாண காரணன்நித் தியமாம்
பன்னருமிவ் விரதமா தாதியிற்பெத் தத்தர்
தகுசிவராத் திரிநான்காம் இந்நிசிகள் தோறுஞ்
சாற்றுமியா மந்நான்குஞ் சிவனையருச் சிப்பார்
நிகராறுமிவ் விரதசிவ ராத்திரிநான் கினையும்
நித்தியநித் தியமென்று நிகழ்த்திடும்ஆ கமமே. (2)

792. பகுவாய்ப்பன் மடையுடைத்துக் கால்வாய்கொண் டெழுந்து
பரந்தவிடம் உமிழ்துளைப்பற் பலநிலைபாந் தட்சூட்(டு)
உகுதாமச் சுடரமர முடிக்கிடந்த புவியில்
உத்தமமாம் முதற்சிவராத் திரியோக நிசியாம்
தகுசோம வாரமரு வியவமையிற் சிலமா
தங்களிற்பூ சித்தல்;இரண் டாஞ்சிவரா த்திரிதான்
மிகவீடு புரந்தருள்மா தச்சிவராத் திரியாம்
வியன்மாதப் பிற்பக்கம் பதினான்கு தொறுமே. (3)

793. வளங்கெழுமூன் றுஞ்சிவராத் திரிமாக மாதம்
வளர்பக்கத் திற்பிரத மைத்திதியே முதலாய்
உளங்கெழுபிற் பக்கஞ்சேர் பதின்மூன்றாந் திதிகா
றோர்பகற்போ தானெனவே சங்கற்பம் புரிந்து
விளங்கெழுபோ திற்கடன்கள் கழித்துநிய மமதாய்
விதிப்படியிப் படித்தனமும் மேவிமற்றை நாளிற்
களங்கெழுதீ விடநுகருங் கண்ணுதலை யுளத்திற்
காதலித்து வைகறையிற் கண்படைநீத் தெழுந்தே, (4)

794. அனந்தகுண கலியாணம் ஆகியொழி வில்லா
அளப்பருஞ்செல் வமதாகித் தழற்பிழம்பாம் மாலைக்
கனந்திகழா யிரத்தொகுதித் திரளாகி விபுலக்
கரககிரி லிங்கமதாம் பரசிவனை யிதய
நனந்தலையும் புயங்கருதிப் புனிதநீ ராடி
நாடுசிவ ராத்திரியா மங்களின்மா முனிவீர்!
மனந்தகவே சிவலிங்கம் வழிபடுக ஈது
மாகமுதற் பக்காதி வருசிவராத் திரியே. (5)

---

791. மாதாதியில்-மாத ஆதியில்-மாதத் தொடக்கத்தில்; பெத்தத்தர்-மலக்கட்டு உடையோர்.

792. அமர முடிக் கிடந்த-முடியில் அமரக் கிடந்த; அமை-அமாவாசை; 'அமையதனில் மாளையந்தான் ஆற்றுவரேல்'—சேது. புரா. துராசா-41. முதல் சிவராத்திரி-யோக சிவராத்திரி; இரண்டாஞ் சிவராத்திரி-மாத சிவராத்திரி; பிற்பக்கம் பதினான்கு-அபரபக்ஷம் 14-ஆம் திதி.

793. மூன்றும் சிவராத்திரி-மாசி சுக்லபக்ஷத்தில்; மாகமாதம் மாசிமாதம்.

794. மாலை-ஒழுங்கு; கரககிரி-கயிலை; கரகம்-கங்கை; நனந்தலை-அகன்ற இடம்; இதய அம்புயம்-இதய தாமரை.

795. செம்பினொடு களிம்பெனஆன் மாவினுடன் கலந்து
தெருளறிவெ லாமறைக்கும் ஆணவவேர் எறிந்தே
நம்பனிரு தாளிரண்டற் றென்றுறு முனிவீர்!
**நான்காக** வருசிவராத் திரிவிரதம் உரைக்கேன்
கும்பமதிப் பிற்பக்கம் பதினான்காந் திதியிற்
குவையிருள்தீர் வைகறைப்போ தெழுந்திதய மலரிற்
சம்புவினைத் தாள்நினைத்துப் பவித்திரநீ ராடித்
தண்காலைக் கடன்கழித்துச் சயிலவலஞ் செய்து, (6)

796. விரிசுடர்ச்செஞ் சிகைக்கற்றை கதழெரியத் திரமாம்
மேதகுபஞ் சரநடுவண் மேவியந்திப் போதிற்
பிரிவறமண் முதல்மாயை முடிவாந்தத் துவங்கள்
பின்னிடப்பான் மனத்தாறச் சென்றுசுத்த வித்தை
புரிவடிவாஞ் சிவபூசைத் தலமடைந்து கனவு
போக்கிவளர் இலிங்கத்திற் பூசனையா மங்கள்
தெரியஅருச் சித்துமற்றைப் பகல்முழுகி நியமஞ்
செய்துசிவ பத்தருடன் சேர்ந்தருந்தி முடிப்பான். (7)

797. திருகுசினக் குறும்பெறித்த அருந்தவனிப் படியே
சேர்ந்தசிவ ராத்திரிநான் கியாமங்கள் தோறும்
இருவிழிகண் படைகொள்ளா திருந்துவயி றெக்கும்
இளம்பிறைக்கோ டுரிஞ்சநறு முகைவாய்விண் டுமிழ்தேன்
பெருகுபொன்னந் துணர்இதழிக் கண்ணிகமழ் சடிலப்
பிஞ்ஞகனை ஆகமநூல் முறையின்வழி படுவோன்
ஒருவிதமென் இருவிதமென் மூவிதமோ நான்காய்
ஓதுவிதம் எனயாவன் வழிபடுவோன் தனக்கே. (8)

**நோற்றுப் பேறு பெற்றோர்**

798. நிறைந்திடுபுண் ணியமென்னல் எடுத்துரைக்கற் பாற்றோ
நிகரில்கற்ப கோடிகளா லும்புகல்வ தரிது
சிறந்துலகில் அளப்பருநாள் விளைந்திடுபோ கங்கள்
சேரநுகர்ந் தந்தத்திற் பரகதிசேர்ந் தனைவன்
அறந்தருமிப் பெற்றிவியப் பன்றுமறந் திகழ்போர்
அவுணர்மிடல் மாய்த்தசுடர் அவி**ராழிப் படையோன்**
பெறுந்தவத்தால் இவ்விரதம் விதிப்படிமுன் நோற்றுப்
பெருகுபிர ணவத்துவமும் பிஞ்ஞகனால் அடைந்தான். (9)

---

796. பஞ்சரம்-இடம்.

797. இதழி-கொன்றை.

799. வெறிகமழ்வெண் டோட்டுமுறுக் கவிழ்வனசப் பொகுட்டு
வெள்ளிமணி மண்டபஞ்சேர் வியன்பனுவ லாட்டி
செறிதருநாத் திசைமுகத்தே இவ்விரதம் நோற்றுத்
திகழ்படைப்புற் றனன்புலோமிசைகொழுநன் களிகூர்ந்(து)
அறிவருமவ் விரதம்நோற் றுயர்புத்தேள் உலகுக்
கரசானான் சுரர்கணங்கட் கரசானான் நோற்றுப்
பொறிபுலன்வென் றறத்துறைபோம் இருடியர்முன் நோற்றுப்
புனிதனடித் தாமரைக்கீழ்ப் பொருந்தியுளங் களித்தார். (10)

800. அண்டமுக டணவுகொடி நெடுமாட அளகை
அரசுமுன்நோற் றேங்கும்இரு நிதிக்கிழவன் ஆனான்
கொண்டலிறை யாமகரப் பரியூருங் கடவுள்
கோட்டிரலை யூரநிலக் கோவுமுனம் நோற்றே
எண்டிசையுஞ் சென்றெவையும் அதிசயிக்குஞ் சத்தி
எய்தினர்;கன் மாடபத மன்னன்விதிப் படியே
குண்டிகைதண் டேந்துகவு தமனருளால் நோற்றுக்
கொடும்பிரம கத்தியுஞ்சா பமுங்கடிது தணந்தான். (11)

801. குடவளைக்கூன் முகச்சுரிசங் கொளிர்தரள முமிழ்பைங்
குவளைவயற் செங்கமலப் பொலந்தாதுட் குடைந்து
மடஅனப்பே டுடஅயற் படர்சேவற் படிந்து
மயல்விரகப் பெடைவிளிக்க வந்துநிறங் கண்டு
திடமொடகல் பெடையுளத்திற் பரமகினற் கருதில்
தீதுகறப்ன் றெனச்செல்பகல் திரும்பவுஞ்சே வற்கூய்த்
தொடரமறுத் திடச்சிறகர் உளர்த்தியணை தடஞ்சூழ்
தொல்லைவளஞ் சேர்தனது புரியிதனால் அடைந்தான். (12)

வேடன் சிவலோகம் அடைந்தது.

802. முடங்குளைமா முடிக்கிடந்த மணியணைமேற் பசும்பொன்
முடிசூடித் தவளமதிக் குடைநிழற்றச் சவரந்
தடங்கெழுமுற் புடையிரட்ட விழைந்தபெரும் போகந்
தண்டாது பன்னெடுநாள் துய்த்திருந்தந் தத்திற்
படங்கொளர வசைத்தநுதற் கட்பெருமான் கருணைப்
பாதார விந்தநிழற் படிந்தனன்;செஞ் சிலைக்கே
இடங்கெழுகூ னற்றடந்தோள் ஒருசவரன் பகுவாய்
எரிவிழிவள் ளுகிர்ப்புலிக்கா ஏறினன்கூ விளையே. (13)

---

799. புலோமிசை-இந்திராணி (இந்திரன் மனைவி).
800. அளகை அரசு-குபேரன்; கொண்டல்-மேகம்; மகரப்பரி ஊருங் கடவுள்-வருணன்; இரலை-ஊர்; அநிலக்கோ-மான்வாகனங் கொண்ட வாயு.
801. அனப்பேடு-அன்னப் பேடு; அயல் படர்-பக்கத்திற் செல்லும்; பரமகினன்-அக்கினியன்.
802. சவரம்-சாமரம்; சவரன்-வேடன்; கூவிளை-வில்லமரம்.

803. பொங்கர்மிசைக் கண்படைகொள் ளாதுபுலிப் பயத்தாற்
பொருந்திவதிந் தவன்சிவராத் திரியும்அறி கிலன்நீள்
கங்குலினும் உணவுமுத லியதுறந்து பெரிய
கானகத்தில் தானிருக்கும் பாதவத்தின் அடிக்கீழ்ச்
செங்கையின்மூ இலைத்தளிர்க்கூ விளைசெறிபா சடைகள்
தேர்ந்துபறித் தயல்வீழ்த்தாண் இன்றிமற்றை நாளின்
அங்கம்விட நல்விதியால் உயிர்நீத்திவ் விரத
வரும்பலத்தாற் சிவலோகம் அடைந்துமகிழ்ந் தனனால்.(14)

புலைச்சி நற்கதி பெற்றது.

804. இழிகுலத்தாள் ஒருபுலைச்சி யறக்கிழமை பூண்டாள்
ஈதெனக்கண் டெடுத்துரைக்க அரிதாகுங் கொடுநோய்
அழிவுசெய மெலிந்துசிவ ராத்திரியூண் இன்றி
யன்னமென அரற்றஒரு பித்தன்கூ விளையை
வழியிலவள் எதிரெறியப் பார்த்தயலெற் றினள்நல்
வரத்தொருலிங் கத்தில்விழ மணிமானத் தேறிக்
கழிபெறுகா தற்பெருக்கத் திப்பியமெய் கொணர்ந்து
கண்ணுதலின் பதமடைந்து கதியுஞ்சேர்ந் தனளே. (15)

805. களங்கனிமா மிடற்றிறைதாள் தொழுதுணரும் முநிவீர்!
கடவுள்சிவ ராத்திரியா கமவிதியை யுரைக்கேன்
உளங்கொடவ தானத்தால் எல்லீருங் கேண்மின்
ஓங்குமுட்டாட் டாமரைத்தே வுவணமுயர்த் திடுமால்
துளங்கமரர் முதலியஎவ் வுயிர்ச்சரமோ டசரந்
தொல்லுலகெல் லாந்தழலாற் சுட்டசங்கா ரத்தில்
வளங்கொளிராப் பகலற்ற பெருந்தலத்தில் நடிக்கும்
வள்ளல்தனக் கொருசரியாய் மகிழ்ந்திருந்தாள் உமையே.(16)

806. அருங்கலைகள் அறுபத்து நான்கும்உணர் உமைமா(து)
ஆதரமீ தூரமுறுக் கலரிதய கமலத்(து)
இருங்கதிநல் கியசம்பு மலரடியை அருச்சித்
திருந்தனள்மீ ளப்படைக்குங் காலையின்முன் பெல்லாம்
வருங்கருணை கரனும் மாதேவை [உமையாள்]
வணங்கிமகிழ் சம்புவே! நீயொருகா ரணத்தால்
நெருங்கிருள்நீ டிரவிலென்னால் இதயகம லத்து
நியமமுடன் வழிபடமுன் நின்றருள்செய் தனையால். (17)

---

803. பொங்கர்-மரக்கொம்பு; 'வேங்கை யிருஞ்சினைப் பொங்கர்' - மதுரைக் காஞ்சி 296
பாதவம்-மரம்; பாசடை-பசிய இலை.

804. அறக் கிழமை-மிக்க முதுமை.

806. (உமையாள்)-இது ஓலைப்புத்தகத்தில் விடப்பட்டுளது.

807. கண்ணுதலே! யாவர்சிலர் இந்நான்கு விதமாங்
கருதுசிவ ராத்திரியா மங்களொரு நான்கும்
எண்ணரிதாஞ் சகத்துக்கோர் குருவாகும் பகவான்
இணையடிப்போ தர்ச்சிப்போர் எண்ணினவை யெல்லாம்
மண்ணுலக மீதினிலுன் அருளாலே யருந்தி
வையகமெ லாம்வியப்ப வாழ்ந்துகளி கூர்ந்து
பண்ணவிர்பாட் டளிநறவு நுகரிதழிச் சடிலப்
பரம்பொருளுன் மலர்ப்பாதம் பற்றமகிழ்ந் தருளே. (18)

808. அங்கணனே! இப்படிநாற் சிவநிசிமா விரதம்
அரும்பெரிய நாற்சீர்த்தி யாய்வருக வேண்டும்
மங்கலமா கியசிவராத் திரிகளிலிவ் விரதம்
வண்மைபெற யாவனொரு வன்தருமவானாய்
யிங்குளமா தரவுறநோற் கின்றான்மற் றவனுக்
கெஞ்சாத பலன்கருதல் யாவுமுண்டா கென்று
பொங்கருள்கூ ரீசனாற் றேவிவரம் பெற்றுப்
பொருக்கெனஇவ் விரதமுதற் றனேற்றாள் புகழ்ந்தே. (19)

இறைவனை மாலும் அயனும் காணாது திகைத்தது

809. துண்டமதி முடித்தசடை யண்ணலயல் விரைந்து
தூயபர மானந்த வுருவாகி யிருந்தாள்
குண்டையுரு ஏரம்பன் எங்கோவாங் கந்தன்
கோதிலவர் முதலியஈ சன்குமரர் கணேசர்
அண்டர்புகழ் நந்தியுடன் பிருங்கிநன்மா காளன்
ஆகியரிவ் விரதம்நோற் றரும்பதம்பெற் றனர்கள்;
முண்டகன்அச் சுதனொருவர்க் கொருவரகந் தையினால்
மொய்கொளஎங் கோன்சோதி லிங்கவடி வெடுத்தான். (20)

810. இருவருங்கண் டதிசயித்திட் டொல்லைமுடி யடிதேர்ந்
திருவிசும்பின் முகடுருவிப் பறந்துமிரும் பிலங்கீண்(டு)
ஒருமையுடன் இடந்தும்அளப் பருகற்ப கோடி
யோர்ந்துகுறித் துங்காணு தற்புதமாஞ் சம்பு
மருமலர்ச்சே வடியிவர்கள் கங்குலருச் சித்தார்
மதியணிசெஞ் சடைக்கடவுள் அஞ்சலெனை இனிதிற்
கருணைபெரு கிக்கடிது வெளிப்பட்டான் கமலக்
கண்ணனும்வே தனுந்துதித்துக் கண்டுவணங் கினரே (21)

---

807. யாவர்-எவர்.

809. குண்டை உரு-குறள் உரு; ஏரம்பன்-விநாயகர்; ஈசன் குமரர்-வீரபத்திரர், ஐயனார்; கணேசர்-கணத் தலைவர்கள்; முண்டகன்-பிரமன்; அச்சுதன்-திருமால்; மொய்-போர்-பகை.

எழுசீர் விருத்தம்

811. சிறையளி துதையும் பசுந்துழாய்ப் படலைச்
செங்கண்மால் அம்புயப் பொருட்டு
மறையவன் மடத்தாற் செயுமப ராதம்
மறந்தவர் விழைந்திடும் வரங்கள்
குறைவறப் பொருக்கென் றுதவியே யகண்ட
கோதிலா னந்தமெய் வடிவாம்
இறையவன் மறைந்து போந்தனன் அதனல்
இந்தமான் மியம்இயம் பரிதால். (22)

812. மற்றெனக் கன்றி யெனதுமெய்க் குருவாய்
வருவியா தனுக்குமீ தரிதாம்
உற்றருந் தவங்கூர் யோகினில் உறங்கி
யுணர்சனற் குமாரமா முனிக்கும்
முற்றுமீ துரைக்க வருங்கொலோ வராதோ
மொழிவதென் நந்திகே சன்முன்
பெற்றமூர் கடவுள் அருளிலிவ் விரதம்
பெட்பினுற் கேட்டனன் வியந்தே. (23)

813. உள்ளநெக் குருக விழிகள்நீர் பிலிற்ற
உரைதழு தழுத்துவாய் குழற
வள்ளவாய்க் கமல நாளமுள் ளனமெய்
மயிர்பொடித் திடமகிழ் சிறப்பத்
தெள்ளுநீர்ப் பரமா னந்தகல் லோலந்
தேக்குநீர் உவட்டரு தெழுந்து
வெள்ளமேற் படர்ந்த வேலையுள் துளைந்து
வீழ்ந்துளங் களித்திடப் படிந்தார். (24)

814. வாக்கொடு மனமுங் கடந்ததாய்ச் சிவசம்
மதமதாம் இந்தமான் மியத்தை
நோக்கியா தொருவன் படிப்பவன் கேட்போன்
நொய்தினில் அளப்பரும் போகம்
ஊக்கமோ டருந்திக் குசலராந் தனையர்
உவப்புடன் பயந்துபின் கயிலை
பூக்குழல் மனைவி யோடவண் அடைந்து
பொருவரும் வீடும்எய் துவனல். (25)

---

813. வள்ளம்-கிண்ணம்; படிந்தார்-முனிவர்கள் (எழுவாய்).

## அத்தியாயம் 31.

### சிவ விரத மான்மியம்-தொடர்ச்சி

### 5. கேதார விரதம்

**கேதார விரதம்** புரட்டாசி மாதம் சுக்கிலபக்ஷம் அஷ்டமியில் சிவனருளால் பே பக்ஷம் சதுர்த்தசி வரையில் 21 நாள் அநுட்டிப்பதாகும். விரதம் முடிந்த மறுநாள் நித்திய கடன்களை உள்ளம் உருக முடித்துச் சிவனடியாரோடு ஒரு பொழுது உணவு, கொள்ள வேண்டும். இங்ஙனம் செய்பவன் இம்மையில் பெரும் பலன்களை அடைந்து பின்பு பேரின்பம் பெறுவான்.

#### நோற்றுப் பேறு பெற்றவர்

இந்த விரதத்தைக் **கவுரி** அன்புடன் நோற்றுச் சிவபிரானது இடது பாதியைப் பெற்றாள். **திருமால்** நோற்று வைகுண்ட ஆட்சி பெற்றார். **பிரமன்** நோற்று நல்ல நகராட்சி பெற்றான். **இந்திரனாதிய** திக்குப் பாலகர்கள் நோற்று அசுரர்களை வென்று பலம் கொண்டனர். **ஏழு முனிவர்களும்** நோற்றுப் பிரமனிட்ட சாபம் தீர்ந்து பேரின்பம் பெற்றார்கள். **பாக்கியவதி, புண்ணியவதி** என்னும் பெண்கள் நோற்றுக் கீர்த்தி பெற்ற னர். மறைவல்ல **விசுத்தன்** என்பான் நோற்றுப் பேரின்பத்தில் திளைத்தான். உமா தேவி அன்புடன் நோற்ற இவ்விரத மான்மியத்தை விரும்பிப் படிப்பவர், கேட்பவர் கள்கள் துய்த்து அவனது திருவடி நிழலை அடைவர்.


## அத்தியாயம் 31.

### சிவ விரத மான்மியம்-தொடர்ச்சி

### 5. கேதார விரதம்


#### எழுசீர் விருத்தம்

815. திருகுவெஞ் சினமுக் குறும்பெறி முனிவீர்!
      திகழ்கலி யாணகா ரணமாய்
மருவு**கே தார விரத**மேத் திசைக்கும்
      மான்மியம் இயம்புகேன்உள்ளம்
ஒருமையோ டுவந்தெல் லீருமே கேண்மின்
      ஒழிவற வீசுகார் படியும்
இருதுவாம் புரட்டா தியில்வளர் மதியோர்
      எட்டெனுந் திதிமுதல் தொடுத்தே, (1)

816. வருதினம் எழுமூன் றுஞ்செயும் நியதி
      மகிழ்ந்திழைத் தேபதி ஞன்கிற்
கருணையங் கடவுள் விரதநோற் றிறைஞ்சிக்
      காதல்கூர் மற்றைநாள் கடனுள்
உருகிடப் புரிந்து சிவனடி யாரோ
      டோர்பொழு தருந்தியே முடித்தோன்
பெருகுமாப் பலன்கள் இம்மையில் அடைந்து
      பின்னர்பே ரின்பமும் அடைவான். (2)

### நோற்றுப் பேறு பெற்றோர்

#### கவுரி நோற்றது

817. இந்தநல் விரதம் முன்னர்நாட் செவ்வி
ஏடவிழ் சரோருகம் வாட்டி
வந்துடற் கிடந்த முயற்கறை துடைத்து
வளர்மதி யனையவாண் முகச்செஞ்
சிந்துர நுதற்செங் குமுதவாய்க் கருங்கட்
செப்பிள மணிமுலைக் **கவுரிசே**
புந்தியுள் மகிழ நோற்றரன் இடமெய்ப்
புறத்தொரு பாதிகொண் டிருந்தாள். (3)

#### திருமால்-பிரமன் நோற்றது.

818. **பா**ட்டளி முரல்சிற் றிதழ்க்கதிர் விரிகரும்
பசுந்துழாய்ப் படலையந் தொங்கல்
சூட்டிய தடந்தோட் **கடனிற வண்ணன்**
தொழுதகு விரதமுன் நோற்றே
ஈட்டிய பலத்தாற் பொருவில்லை குந்தத்
திறைவனு யினன்**மலர்ப் புத்தேள்**
கோட்டமில் மனத்திவ் விரதமும் நோற்றுக்
குலாவநன் புரியடைந் தனனால். (4)

#### இந்திரனுதிய திக்குப்பாலகர்கள்-எழுமுநிவர் நோற்றது.

819. **மி**ன்னரும் வயிரப் படைவலன் ஏந்தும்
**விண்ணர** சாதியெண் **டிசை**யும்
மன்னு**பாலர்க**ளிவ் விரதமுன் நோற்று
மருவலன் றிசிசரன் தனைச்செற்(று)
உன்னரும் பலமெய் தின**ரெழு முநிவர்**
உவந்துமுன் நோற்றுவெண் தூவி
அன்னவா கனன்முன் சொற்றசா பந்தீர்ந்
தரியஆ னந்தவீ டடைந்தார். (5)

#### பாக்கியவதி-புண்ணியவதி-விசுத்தன் நோற்றது.

820. **எ**றிதிரைப் பரவை யுலகினிற் குழைகள்
இடறுகட் **பாக்கிய வதி**யும்
வெறிகமழ் கூந்தற் **புண்ணிய வதி**யும்
மிக்கவிவ் விரதமுன் நோற்றுச்
செறிதரு விபவம் பெற்றனர் மறைநூல்
தேர்ந்திடு **விசுத்த**ன்முன் நோற்றே
யறவரும் பரமா னந்தமெய்த் தரங்க
அலைகடற் படிந்தனன் மாதோ. (6)

821. குழைதட வியமெய்க் கருந்தடங் கட்செங்
குமுதவாய் முகிழ்முலை உமையாள்
விழைவுடன் நோற்ற இவ்விர தத்தை
விரும்பியே படிப்பவர் கேட்போர்
உழைசெறி கரத்தோன் அருளினல் உவப்போ
டொப்பரும் போகமே துய்த்துத்
தழைசெவி களிற்றின் உரிபுனை கடவுட்
டாளிணை நீழல்சேர் குவரால். (7)

---

## அத்தியாயம் 32.

### சிவ விரத மான்மியம்-தொடர்ச்சி

### (6) கலியாண விரதம்

சூதமுனிவர் கூறுகின்றார் :—

**கலியாண விரதம்** இருமைக்கும் பயன் தரும். பங்குனிமாதம் சுக்லபக்ஷம் உத்தர நக்ஷத்திர தினத்தில் சூரியோதயத்துக்கு 5 நாழிகை என்றபோது எழுந்து பார்வதி பரமேசுரரைத் தியானித்து, நீராடிக் கடன்களை முடித்து, நித்திய பூசனை செய்பவனா யின் பரமேசுரனை வணங்கி அருச்சிக்கவேண்டும். நித்திய பூஜை இலதாயின், உமை பாகரது திருவுருவைப் பொன்னால் அமைத்துப், பீடத்தில் நெல்லைப் பரப்பி, அரிசியை யும் எள்ளையும் சொரிந்து, நீர்நிறைந்த கும்பத்தை நடுவில் வைத்து, உமா சமேத கலியாண மூர்த்திக்கு அபிஷேகம் செய்து வணங்கிப், பால்சாதம், நெய், வெல்லம் சேர்ந்த அறுசுவையுணவை நிவேதனஞ்செய்து, முனிவர்களை அவர்தம் மனைவியருடன் அழைத்துத் தானங்கள் கொடுத்து வணங்கிப், பின்பு பாயசத்துடன் கூடிய உணவை அவர்கள் உண்ணச்செய்து, அதன்பின் ஆலயத்துக்குப் போய்ச் சிவனையும் உமையையும் வணங்கிப், பொன்னைத் தானஞ்செய்து, மூன்று வலம் வந்து வணங்கி, வீட்டுக்கு வந்து, சிவனடியாருடன் பழம், கிழங்கு வகைகளுடன் இரவு உண்டு, புலன்களை அடக்கித் தருப்பையிற் படுத்து உறங்கி, அடுத்தநாள் காலையில் எழுந்து, நித்ய கடன்களை முடித்து, உமாசமேத சிவனுருவை அடியவர் மறையோர்க்கு அளித்து, ஒரு வேளை உண்டு, கொடிய பாவங்களை விரைவில் தீர்க்கும் இவ்விரதத்தை முடிக்கவேண்டும்; அங்ஙனம் முடிப்போர் எண்ணிய போகங்கள் யாவையும் துய்த்து வாழ்ந்து ஈற்றில் கயிலை சேர்ந்து இறைவனது திருவடி நீழலைக் கூடுதலாகும்.

#### நோற்றுப் பேறு பெற்றோர்

இவ்விரதத்தை அன்புடன் நோற்றுத் திருமால் திருமகளையும், பிரமன் சரஸ்வதி யையும், இந்திரன் அயிராணியையும், சந்திரன் 27 நக்ஷத்திரங்களையும், சூரியன் உஷையையும், அகத்தியர் லோபா முத்திரையையும், (திருமால் மகளிராம்) அமுத வல்லி, சுந்தரவல்லி (தேவசேனை—வள்ளியாய்க்) கந்தவேளையும், (வேதாங்கன் மகள்) சுகேசை நந்திதேவரையும், (சத்யபூரண முனிவரது கண்ணில் உதித்த பெண்கள்) பூரணை, புற்கலை என்பவர்கள் மாசாத்தனையும, மன்மதன் ரதியையும், ஜானகி இராமரையும், சாம்பவதி வாசுதேவரையும், சௌபரி அனேக மனைவியர்களையும் தழுவப்பெற்று இன்பமுற்றனர். இன்னும் அனேக முனிவர்கள் இவ்விரதத்தை நோற்று அழகுள்ள மனைவி மக்களை அடைந்து ஈற்றில் வீட்டின்பம் பெற்றார்கள். மனைவி வேண்டினவர் அழகிய மனைவியையும், கணவனை வேண்டினவர் மன்மதன் அனைய கணவரையும் கூடப் பெற்றனர்; நினைத்த போகங்களைத் துய்த்தனர். இவ் விரத மான்மியத்தைப் படிப்பவர் நெடுநாள் போகத்தில் வாழ்ந்து சிவனடி நண்ணுவார்.

## அத்தியாயம் 32.
## சிவ விரத மான்மியம்-தொடர்ச்சி
### (6) கலியாண விரதம்.
எழுசீர் விருத்தம்

822. அருமறை தெள்ளித் தனிப்பொருள் உணர்ந்தே
அறத்துறை நின்றகு தன்தான்
கருணைசெய் துரைப்பான் அந்தணீர்! கேண்மின்
கடற்புவி மிசையிரு மையுமே
தருகலி யாண விரதம்ஓர்ந் துரைக்கேன்
சாற்றுபின் பனியிரு துவினிற்
பருதிவந் திடுபங் குனிவளர் மதிமுன்
பக்கமே யுத்தர நாளில். (1)

823. அருணன்வந் துதயஞ் செய்யுமுன் கன்னல்
ஐந்தெனத் துயிலுணர்ந் தெழுந்து
கருணைசெய் தருள்பார்ப் பதிபர மேசன்
கட்டழ கொழுகுசீர் வடிவைத்
தெருணிலை வதனுற் சிந்தைசெய் துறையுள்
தீரவே புறம்புறப் பட்டுத்
தருணஅம் புயஞ்சேர் தண்புனற் படிந்து
சாற்றுநன் நியமமும் முடித்தே. (2)

824. திங்களங் கண்ணி மிலைச்சிய சடிலத்
தேவைநித் தியம்வழி படுவோன்
மங்கலம் மிகும்ஆன் மாவின்நா யகமாய்
வருபர மேசனை யருச்சித்(து)
அங்கைகள் குவித்துப் பூவுற வணங்க,
அருச்சனை யிலனெனில் நியமம்
இங்கிதம் பெருக முடித்துமை யுடனே
ஈசனைக் காஞ்சனத் தமைத்து, (3)

825. மறைவிதிப் படிவே திகையில்நெற் பரப்பி
மறுவில்வா லரிசியெள் சொரிந்து
கறைமுத லியகுற் றங்கள்தீர் குடத்திற்
காதலின் நடுவண்வைத் தமல
நிறைபுன லுடன்பூ ரித்துவிண் ணவர்க்கு
நிருபனுங் கடவுள்கல் யாண
இறைவனை யுமையோ டருந்திர வியத்தால்
ஈர்ம்புனல் ஆட்டுவித் திறைஞ்சி, (4)

---

822. பின்பனி இருது-மாசி, பங்குனி மாதங்கள்.
823. கன்னல்-நாழிகை 24 நிமிஷம்.

826. மறுவில்சே தாவின் பாலினாற் சமைத்து
வளர்பர மான்னநெய் குளஞ்சேர்
அறுசுவை யிரசப் பலகறி யமுதோ
டாதரம் பெறநிவே தித்து
மறைவிதிப் படியிந் தியங்களுள் அடக்கி
மதிமுடி யிறையவற் காளாய்
உறுமுநி வர்களை யவர்மனை வியரோ
டுவந்துதா னங்கொடுத் திறைஞ்சி, (5)

827. பின்னர்பா யதங்கூர் உண்டிநான் கருத்திப்
பிஞ்ஞகன் ஆலயம் அடைந்து
பொன்னவிர் கடுக்கை வேணியின் இமையப்
பொருப்பில்வந் துலகமீன் றருளுங்
கன்னிபொற் பாதம் பரவியே தனது
காதலுக் கேற்றபொன் ஈந்தே
யுன்னரும் வலமோர் மூன்றுசெய் திறைஞ்சி
யுவந்துதன் இல்லிடம் அடைந்தே, (6)

828. அந்தகற் செற்ற கண்ணுதல் அடியா
ராகிய அருந்தவ ருடனே
கந்தமா பலன்க ளொடுபர மானங்
கங்குலின் விதிப்படி அருந்தி
இந்தியம் அடக்கித் தருப்பையில் துயின்றே
இலகுசீர் மற்றைநாட் காலைச்
சிந்தையில் உணர்ந்தே எழுந்துநித் தியமாஞ்
செய்கடன் அனைத்தையும் புரிந்து, (7)

829. படஅர வசைத்த அங்கண னுடனே
பருமணி யிழைத்தபொற் குழைபாய்ந்(து)
அடல்புரி நெடுங்கண் கவுரிசேர் வடிவை
யண்ணல்சீர் அடியவர் மறையோர்க்(கு)
உடனளித் தொருபோ தருந்திவெம் பாவம்
ஒல்லைதீர்த் தருளுமிவ் விரதங்
கடனுறப் புரிந்து விழைந்தபல் போகங்
கடற்புவி யருந்திவாழ்ந் ததற்பின், (8)

---

827. பாயதம்-பாயசம் ; வந்து-அவதரித்து;

828. பரமானம்-பரமான்னம்; பாயசவகை.

830. அந்தநாள் புவியில் அளப்பருங் கிரிகட்
கரசெனத் தண்டழை விரிக்குங்
கொந்தலர் உலவை விண்முக டளந்து
குமிழ்விட் டொழுகுதேன் அருவிச்
சந்தன மரங்கள் நிறைந்திடுங் கயிலை
சார்ந்திரும் போகமும் நெடுநாள்
சிந்தையுள் மகிழ்ந்து துய்த்திறை யவன்பொற்
சேவடி நீழல்சேர் குவனால். (9)

**நோற்றுப் பேறு பெற்றோர்**
**எண்சீர் விருத்தம்**

831. மன்றல்மமழ் பசுந்துளவப் பொதியவிழ்த்துச் சிறகர்
வரிச்சுரும்பு துதைந்துமுரல் மலர்ப்பொதியத் திண்டோள்
குன்றினயல் எறிதிகிரிப் படைசுமந்த கடவுள்
குறிக்குறுமிவ் விரதமன்பு கூர்த்திடமுன் நோற்றுப்
பொன்றிகழ்பைம் பொகுட்டினிதழ் வழிந்தொழுகு செந்தேன்
பொழிந்துபெருக் காறெடுக்கப் போதலர்முள் ளரைத்தாள்
துன்றுதுளை மரகதப்பா சடைக்கமலத் திருக்குந்
துணைமுலைச்சேல் விழிக்கனிவாய்த் தோகையையவேட் டனனே.(10)

832. மறையவன்சா ரதியைமக வானயிரா ணியைவெண்
மதியிருபத் தேழுடுவை மார்த்தாண்டன் உசையை
குறுமுநிகற் புறுலோபா முத்திரையை மணந்தார்
கோவிந்தன் புதல்வியர்கள் அமுதைசுந்தர வல்லி
பெறுவிருப்பி னால்தேவ சேனைவள்ளி யெனும்பேர்
பெற்றெமது குலத்தேவாங் கந்தனையே மணந்தார்
பொறைதிகழ்வே தாங்கனருள் புதல்விசுகே சையுமுன்
பொருவில்கணு திபனந்தி கேசனைச்சேர்ந் தனளே. (11)

833. சத்தியபூ ரணமுநிவன் நயனத்தில் உதித்த
தையலர்பூ ரணையொடுபுற் கலிகையெனும் மின்னார்
உத்தமமா மிவ்விரதம் நோற்றுடன்மா சாத்தற்
குண்மைமனை வியரானார் மாரனிர தியைவேட்(டு)
எத்தலமும் இசைபடைத்தான் சானகியாஞ் சீதை
இராமனைவேட் டனள்வாசு தேவனைச்சாம் பவதி
சித்தமகி ழச்சேர்ந்தாள் சௌபரிய நேக
தேவியரை மணந்தின்பஞ் சேர்ந்தனன் நாள்தொறுமே.(12)

---

832. உசை-உஷாதேவி-சூரியன் மனைவி.
833. சவுபரி-இம்முனிவர் மாந்தாதாவின் நூறு குமரிகளை மணந்து அவர்களுக்கு இன்பம் தந்தவர். இவரைக் காணவந்த மாமன்-மாமியர் இவர் ஒவ்வொரு பெண்ணினிடத்தும் ஒவ்வொருவராகத் தனித்தனி இருக்கக் கண்டு மகிழ்ந்து சென்றனர். (அபிதா-சிந்)

834. அன்னியர் அநேகர்முநி வர்விரதம் நோற்றே
யழகுதிகழ் மனைவியரோ டரும்போகந் துய்த்துப்
பொன்னவிர்கிண் கிணிஞெகிழச் சிற்றடிமைந் தர்களைப்
பூத்தனரந் தத்தில்வளர் கயிலாய வரைசார்ந்(து)
உன்னரும்வீட் டின்பமடைந் தனர்மனைவி விழைந்தோர்
ஒளிறுவடி வாள்தடங்கண் உற்றுமணிக் குழைசேர்
கன்னியரை மணந்தனர்கன் னியர்களுமுன் நோற்றுக்
காமன்வடி வனையஎழிற் காதலர்ப்பெற் றனரே. (13)

835. மனைவியரோ டுறுகணவர் இவ்விரதம் நோற்று
மழலைமொழிக் கிண்கிணிக்கால் மைந்தரைப்பெற் றுள்ளம்
நினைவுறுபோ கங்களெல்லாந் துய்ப்பரிந்த விரதம்
நின்மலன்மான் மியஞ்சற்றே நிகழ்த்தினன்;எற் கரிதால்
தனைநிகரில் விரதமான் மியம்படிப்போர் கேட்போர்
தண்டாத பெரும்போகந் தனைநெடுநாள் நுகர்ந்து
நனைகமழ்பொற் றகடுமுறுக் கவிழ்கடுக்கை வேணி
நம்பன்மலர்த் தாள்நீழல் நணுகுவர்பின் வந்தே. (14)

---

## அத்தியாயம் 33.

### சிவ விரத மான்மியம்-தொடர்ச்சி

### (7) சூல விரதம்

தை அமாவாசை யன்று காலையில் எழுந்து, சிவபிரானைத் தியானித்துப், பொய்கையில் முழுகி, நித்திய கடன்களை முடித்து, பொன்னுலாவது வெள்ளியினுலாவது பார்வதி-பரமேசுரரது திருவுருவைச் சமைத்து அதற்கு அபிஷேகம், நிவேதனம் செய்து, ருத்ராக்ஷமாலை அணிந்த அடியவர்களாம் அந்தணர்களுக்கு இயன்ற நிதியைத் தானம் செய்து, பின்பு சிவாலயத்துக்குச் சென்று, மும்முறை வலஞ் செய்து, இறைவனை வழிபட்டுப் பின்பு ஒரு வேளை உண்டு, இரவில் ஊண் இல்லாது, மறுநாள் நதியில் முழுகிக், காலைக் கடன்களைக் கழித்து, இறைவனது திருவுருவைத் தானஞ்செய்து, அடியார்களுடன் உண்டு, இவ்விரதத்தை முடிக்கவேண்டும். அவ்விரதத்தை அன்புடன் முடிப்பவர்கள் பகையை வெல்வர் ; பிணி, வினை ஒழிப்பர் ; வேதத்திற் கூறிய முழு ஆயுளும் வாழ்வர் ; நல்ல பிள்ளைகளைப் பெறுவர், போகங்களை அனுபவிப்பர் ; ஈற்றில் வீட்டின்பம் சத்தியமாய் அடைவர்.

#### நோற்றுப் பேறு பெற்றோர்.

இவ்விரதத்தைத் திருமால் நோற்றுக் காலநேமி என்னும் அசுரனை அழித்தார் ; பரசுராமர் நோற்றுக் கார்த்தவீரியார்ச்சுனனை அட்டார். இந்திரன் நோற்றுத் தலைநோய் நீங்கப் பெற்றான். சுதன்மன் நோற்று யமனை வென்றான். மேகாங்கன் என்னும் அரசன் நோற்றுப் பிள்ளைகள், பேரன்மார் ஆயிரம் கணக்காகப் பெற்றுச், சுகத்துடன் வாழ்ந்து கயிலையை அடைந்தான். இங்ஙனம் அனேகர் இவ் விரதத்தை நோற்று இன்புடன் வாழ்ந்து கயிலையை அடைந்தார்கள். வினை தீர இவ் விரதத்தை நோற்பவர் யான் என்பது அற்று வீட்டின்பம் பெறுவர். இது மெய்.

---

835. தண்டாத-நீங்காத.

***இவ் விரதத்தின் பெருமையை வீரபத்திரர் கணத் தலைவனும் பானுகம்பனுக்கு உரைத்தாரென்று, திருநீறும் கண்டிகையும் புனைந்து விளங்கும் வியாசர் எனக்கு உரைத்தார். இந்த அத்தியாயத்தைப் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் யம பயம் இல்லை.***

## அத்தியாயம் 33.

### சிவ விரத மான்மியம்-தொடர்ச்சி

### (7) சூல விரதம்

**எண்சீர் விருத்தம்.**

836. *விரும்பினவை நல்கியமுத் தலைவேலாஞ் சூல*
*விரதமுறைக் கேளிரவி மகரமதி மீது*
*வரும்பகலோர் கலைமதிவெய் யோனுடன்சேர் பகலில்*
*வைகறையில் துயிலுணர்ந்து மலரிதய கமலத்(து)*
*அரும்படையா கியசூலந் தரித்தொளிர்ஈ மங்கள்*
*ஆலயமாஞ் சந்திரசே கரனைநினைந் துறையுட்*
*பெரும்பதிவிட் டகன்றணல் சிவதடநீர் மூழ்கிப்*
*பிஞ்ஞகற்சிந் தித்தெழுசந் தியிற்கடனும் முடித்தே,* (1)

837. *விரிசுடர்விட் டவிரொளிபாய் பசும்பொன்னு லலது*
*வெள்ளியினுல் திதலையழ கொழுகுகுவி முலைச்சேல்*
*வரிவிழிவெண் ணகைக்கனிவாய் உமையுடன்பே ரழகாம்*
*வடிவுதிகழ் சூலகர வள்ளலுருச் சமைத்துப்*
*பரிவினபி டேகதிர வியநன்னீர் ஆட்டிப்*
*பலவிதஓ தனத்துடனே பரமான்னம் நிவேதித்(து)*
*அரியகண்டி மாலைபுனைந் தரனடியா ரான*
*அந்தணருக் கியைந்தநிதி ஆதரங்கூர்ந் தளித்தே,* (2)

838. *பின்னர்சிவா லயமடைந்து வலமூன்று புரிந்து*
*பிஞ்ஞகனை வந்தித்துப் பெட்பினுடெவ் வளவென்*
*பொன்னுதவிப் பரனடியா ராமறையோ ருடனோர்*
*பொழுதருந்தி யிரவினிலூண் இன்றிமற்றை நாளில்*
*நன்னதிமூழ் கிக்காலைக் கடன்கழித்துக் குரவன்*
*நளினமலர்த் தாள்வணங்கி நம்பனுரு வுதவிக்*
*கன்னியொரு பாகனடி யாருடனூண் அருந்திக்*
*கவினினோ டிவ்விரதங் கருதிமுடித் திடுவான்.* (3)

---

836. *மகரமதி-தைமாசம்; ஈமங்கள்-சுடுகாடுகள்; சுடுகாடுகளை ஆலயமாகக் கொண்ட சந்திரசேகரமூர்த்தி.*

837. *திதலை-தேமல்*

839. மற்றுமுடை திரைப்புவியி லியாவர்சிலர் விரும்பி
மங்கலமாம் இவ்விரதம் நோற்கின்றோ ரவர்கள்
கொற்றமுறு வெம்படைசேர் அளப்பருமாற் றலரைக்
கூர்பலத்தி னுற்செற்றுத் தொந்தவினைப் பிணிகள்
முற்றுமொரு விச்சுருதிப் படிநிறையும் வாணாள்
மூத்திருந்து குலம்வளர்க்கும் மைந்தர்களைப் பெற்றுச்
சற்றுமிடை யுற்றிடாப் போகங்கள் அருந்திச்
சாற்றுகடை நாள்வீடு சார்குவர்சத் தியமே. (4)

நோற்றுப் பேறு பெற்றோர்

840. சிறகர்விரித் துப்பறவாப் பூவைவண்ணன் நோற்றுச்
சீற்றமிகு காலநே மித்தகுவற் செற்றான்
விறல்கெழுசா மதக்கினியா கியபரசு ராமன்
மிகநோற்றுக் கார்த்தவீரி யார்ச்சுனனைச் செற்றான்
நறவுகமழ் மலர்த்தருநீ ழற்கடவுள் நோற்று
நனிபிணியாந் தலைநோவு தணந்தனன்;பின் சுதன்மன்
மறையின்விதிப் படிநோற்றுப் பணைவகிர்க்கூன் கோட்டு
மயிடமுகைத் திடுங்கொடிய மறலியைவென் றனனே. (5)

841. கனைகழற்கால் மேகாங்கச் சூரிசில்முனம் நோற்றுக்
கட்டழகா கியமைந்தர் பௌத்திரரா யிரமாந்
தனையரைப்பெற் றரும்போகம் எண்ணருநாள் துய்த்துச்
சம்புமகிழ்ந் துறைகயிலை மால்வரையைச் சார்ந்தான்;
நினைவுடன்மற் றோரனந்தர் இவ்விரதம் நோற்று
நீப்பருஞ்செல் வம்படைத்துக் கயிலாயம் அடைந்தார்
வினையகல யாவர்சிலர் நோற்கின்றார் அகந்தை
விட்டுவிப வம்பெறுவார் மெய்ம்மையுரைத் தனனால். (6)

எழுசீர் விருத்தம்

842. மிக்கஇவ் விரத மான்மியம் வலிகூர்
வீரபத் திரனிரு நான்கு
பக்கநின் றிறைஞ்சு கணங்களுக் கரசாம்
பானுகம் பனுக்குரைத் தனனென்(று)
அக்கமா லிகைநீ றணிவியா தனனெற்
கறைந்தனன் இந்தஅத் தியாயந்
தக்கபே ரொடுகேட் போர்படிப் போர்க்குச்
சண்டனால் வருபயம் இல்லை. (7)

---

839. ஒருவி-நீங்கி.
840. பறவாப்பூவை-காயாம்பூ. தகுவன்-அசுரன். சாமதக்கினி-சமதக்னி புதல்வன்.

## அத்தியாயம் 34.

### சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### (8) இடப விரதம்

*வைகாசி மாதம் முதற் பக்ஷம் அஷ்டமி திதியில் காலையில் எழுந்து உமாபதியாம் இடப வாகனரைத் தியானித்து, நீரில் மூழ்கி, நித்தியக் கடன்களை முடித்து, பொன்னாலாவது வெள்ளியினாலாவது இடபவாகனரூடராய்ச, சிவனும் உமையுங் கூடிய திருவுருவத்தைச் சமைத்துப், பஞ்சாமிர்தம் ஆதிய அபி ஷேகங்கள் செய்து, பாயசம் ஆதி நிவேதனஞ் செய்து, இறைஞ்சிப், பின்பு, சிவனடியார்களுக்குப் பொன் உதவிச் சிவாலயம் அடைந்து வலஞ் செய்து வணங்கி, வீட்டுக்கு வந்து மறையோருடன் அப்பமும் பழமும் பாற் சோறும் உண்டு, மாலையிற் கடன்களை முடித்துச், சிவ புராணங் கேட்டுத், தருப்பைப் பாயலில் துயின்று, மறுநாள் காலையில் நீரில் முழுகி, நியமத்துடன் வந்தனைகள் புரிந்து, ஈசன் திருவுருவத்தைச் சிவனடியாருக்கு அளித்து, இவ் விரதத்தை நோற்பவருக்கு அஷ்ட ஐசுவரியமும் கைகூடும்.*

#### நோற்றுப் பேறு பெற்றோர்

*இவ் விரதத்தை நோற்றுத்* **திருமால்** *கருடனையும்,* **இந்திரன்** *ஐராவதத்தையும்,* **அக்கினி** *ஆட்டையும்,* **யமன்** *எருமையையும்,* **நிருதி** *நரனையும்,* **வருணன்** *மகர மீனையும்,* **வாயு** *கலைமானையும்,* **குபேரன்** *புட்பகத்தையும்,* **ஈசானன்** *எருதையும்,* **சூரியன்** *எழு குதிரை பூட்டிய ஒற்றைச் சக்கர ரதத்தையும்,* **சந்திரன்** *விமானத்தையும் ஊர்தியாகப் பெற்றார்கள்.*

**மகாராட்டிய** *தேசத்து அரசன்* **விச்சுவசேனன் வசிட்டமுநிவரை** *அடைந்து அவர் திரிகால ஞானத்தை எப்படி அடைந்தார் எனக் கேட்க அவர் இடப விரதத்தை நோற்ற பலத்தால் அடைந்தேன் என, அரசனும் அவ் விரதத்தை நோற்று, திரிகால ஞானம் பெற்றுப், போகந் துய்த்துக் கயிலையை அடைந்தான்.*

**பிரமனும்** *நோற்றுத் திரிகால ஞானம் பெற்றான்.* **சந்துட்டன்** *என்னும் அரசன் நோற்று அட்ட சித்திகளைப் பெற்றான்.* **விதுரன்** *நோற்று உலகங்கள் எங்கும் திரியும் வல்லமை பெற்றுத் திரிந்து, ஆங்காங்கு அற்புதங்களைக் கண்டு மகிழ்ந்து, காயசித்தி பெற்று, மக்களுடன் வாழ்ந்து, சிவ யோகி யானான். இங்ஙனம் பலர் இவ் விரதத்தை நோற்று வீடு அடைந்தார்கள். இவ் விரத மான்மியத்தைப் படிப்பவர், கேட்பவர், கேட்பிப்பவர் கயிலை சேர்ந்து வீட்டின்பம் பெறுவர்.*

*இங்ஙனம் சிவ விரதம் எட்டும் கூறினேன்.*

## அத்தியாயம் 34.

### சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### (8) இடப விரதம்

#### எழுசீர் விருத்தம்

843. ஐம்புலன் வென்ற முநிவிர்காள்! கேண்மின்
அடுதிறல் **இடபமா விரதம்**
இம்பர்கட் டுரைக்கேன் சீரிள வேனில்
இடபஆ தவன்முதற் பக்கத்(து)
உம்பர்கள் பரவும் அட்டமி திதியில்
உணர்ந்துவை கறையெழுந் துமைசேர்
நம்பனை இடப வாகனன் தனைத்தன்
நளினமார் இதயமேல் நினைந்தே, (1)

843 இடப ஆதவன்-வைகாசி மாதம்.

844. நெளிதிரைப் புனித மாநதி மூழ்கி
நித்திய கன்மமும் இயற்றி
ஒளிதிகழ் பசும்பொன் ஞலிர சதத்தால்
உமையுடன் இடபவா கனன்மெய்
களியுறு மகிழ்ச்சி கூரவே சமைத்துக்
கருதுபஞ் சாமிர்தம் ஆதி
எளிதில்நீ ராட்டிப் பாயசா திகளும்
எடுத்தளித் திறைஞ்சிய பின்னர், (2)

845. அருமறை யுணர்ந்த சிவனடி யாருக்
கம்பொனெவ் வளவெனும் உதவிக்
கருணையங் கடவுள் ஆலயம் அடைந்து
காஞ்சனம் உதவிமூ வலஞ்செய்(து)
ஒருமையின் வணங்கித் தன்மனை புகுந்துள்
உணர்மறை யோருடன் அபூபம்
மருவுநன் பலத்தோ டருந்தஆன் பாலின்
வழங்கும்ஓ தனுநுகர்ந் திடுவான். (3)

846. அந்தியிற் கடன்கள் புரிந்தியா மங்கா
றங்கணன் புராணநூல் கேட்டுப்
புந்தியின் விரும்பி நிசியினில் தருப்பைப்
புனிதநன் பாயலில் துயின்று
பந்தம்விட் டகல மற்றைநாட் காலைப்
பைம்புனல் மூழ்கிநன் னியம
வந்தனை புரிந்தீ சன்திரு வுருவம்
மகிழ்சிவ னடியருக் களித்தே, (4)

### நோற்றுப் பேறு பெற்றோர்
### (தேவர்கள் நோற்றது)

847. விரிநிலந் தேரிவ் விரதநோற் பவர்க்கு
விபவமோர் எட்டுமைந் தருஞ்சீர்
அரியகல் வியும்ஆ ரோக்கிய வடிவும்
ஆயுவும் அளப்பருந் தனமும்
பிரிவற வுடைத்தாம்; அச்சுதன் நோற்றுப்
பிஞ்ஞகன் அருளினிற் செல்வம்
பரிவுடன் அடைந்தார் தியதெனக் கலுழப்
பறவையும் அடைந்தனன் மாதோ. (5)

---

844 இரசதம்-வெள்ளி.
845 அபூபம்-அப்பம்; பலம்-பழம்.
847 விபவம் ஓர் எட்டு-அட்ட ஐசுவரியம்-(இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி நெல், வாகனம், அடிமை).

848. இந்திரன் அயிரா பதம்எரி தகர்தண்
டேந்திபோர் மயிடமா நிருதி
மைந்தரெண் ணரவா கனம்புனற் கரசன்
மகரமா சுகன்கலை குபேரன்
சிந்தையிற் செலும்புட் பகமெயீ சானன்
சினவிடை யேறுகூ ரியனேழ்
கந்துக வொருகால் திகிரிசந் திரன்பாய்
கதிர்மணி மானநோற் றடைந்தார். (6)

வேறு

அறுசீர் விருத்தம்

விச்சுவசேனன் நோற்றது

849. செங்கட் கருந்தாட் பொறிச்சுரும்பர்
சிறகர் உளர்த்திப் பெடையுடன்போய்ப்
பங்கப் பழனத் தயலின்முடப்
பலவிற் கனிவிண் டுமிழ்நறுந்தேன்
பொங்கப் படிந்துண் டுகளுமந்திப்
பொன்னஞ் சுனையைப் பறிக்கவெரீஇத்
தங்கக் கமலத் தடைகிடக்குந்
தடஞ்சூழ் மகராட் டியதேயம். (7)

850. பரிக்கும் இறைவிச் சுவசேனன்
பற்றற் றிடுவோன் இறையெனச்சஞ்
சரிக்கும் வசிட்டன் தனையடைந்து
தாழ்ந்து கலைகள் அனைத்தினையும்
விரிக்குங் கருணை மாதவத்தோய்!
வியப்ப முக்கா லச்செயலுந்
தெரிக்கும் படிநீ யறிந்தவெலாஞ்
செப்பு கெனத்தோற் றியதுரைத்தான். (8)

851. செங்கைத் தலஞ்சேர் நெல்லியெனச்
சேர அறிந்த வசிட்டனடி
துங்கத் தடந்தோள் விறலரசன்
தொழுது மலர்தூய் அருச்சனைசெய்(து)
எங்கட் கிறையே! யெதிர்காலம்
இறந்த காலம் நிகழ்காலம்
அங்கத் தலையில் எந்தவித்தை
யதனால் உணர்ந்தாய் அருள்கென்றான். (9)

848 தகர்-ஆடு, மயிடம்-எருமை, ஆசுகன்-வாயு, கலை-கலைமான், கந்துகம்-குதிரை.
849 பங்கம்-சேறு. அடைகிடத்தல்-தங்கியிருத்தல்.

852. என்ற அரசன் தனக்குமுனி
யிசைப்பான் தரும மாய்நலமாய்
வென்றிப் பெருமை திகழிடப
விரதம் நோற்றேன் அப்பலத்தால்
அன்று முதல்முக் காலமெனக்
கறியத் தெரிகின் றனபின்னும்
ஒன்ற விழைகா மியங்களெலாம்
உண்டா கின்றனவென்றான். (10)

853. மறையின் பொருள்கள் அனைத்தினையும்
வடித்துள் உணர்ந்த வசிட்டமுனி
யறையும் படிகேட் டதிசயப்பட்
டரசன் தானும் நோற்றுவரு
முறையின் தெரியச் செல்கால
முதலாய் முக்கா லமுமுணர்ந்து
நிறையும் பெரும்போ கங்கள்துய்த்து
நிமலன் கயிலா யமுமடைந்தான். (11)

பிரமன், சந்துட்டன் நோற்றது

854. சிறுமுள் ளரைத்தாட் கமலமலர்ச்
செம்பொற் பொகுட்டுப் பண்ணவன்சீர்
பெறுமவ் விரதம் நோற்றறிவிற்
பிரியா முக்கா லமுமுணர்ந்தான்;
மறுவில் புகழ்சேர் சந்துட்ட
மன்னன் விரதம் நோற்றிருநான்(கு)
உறுசித் திகள்பெற் றந்தத்தில்
உம்பர் கதியும் பெற்றனனே. (12)

(விதுரன் நோற்றது)

855. வண்டு பெடையி னொடுமுரன்று
மதுவுண் டுறங்கும் மலர்த்தெரியல்
கண்டு பழிக்குங் கிளிமொழியார்
கலக விழிக ளொடுகவர்ந்து
கொண்டு வளரு மணித்தடந்தோட்
குரிசில் விதுரன் முனந்தேர்ந்து
மண்டு வியப்பு மீதூர
மகிழ்ந்திவ் விரத நோற்றனனால்! (13)

---

852 காமியங்கள்-விருப்பங்கள்.

856. மாரன் உருவம் பழித்தொளிர்தன்
  வடிவி னோடேழ் பிலமுநறை
கூடு மலரோன் எறிதிகிரிக்
  கோமான் உலக முதலியசீர்
சேரும் உலகம் அனைத்தினுமே
  தினமுந் திரிந்தற் புதமெல்லாம்
ஓரும் மகிழ்ச்சி யுடனறிந்தின்
  புறுதன் புதல்வர்க் குரைத்தனனால்; (14)

857. இலகு முருவாங் காயசித்தி
  எய்தி நெடுநாள் மக்களுடன்
உலகி னிருந்தே யந்தத்தின்
  ஓங்கு சிவயோ கியுமானான்;
அலகில் புகழ்சே ரிவ்விரதம்
  அளப்பி லோர்கள் ஆற்றினரால்
திலக ரெனவே விழைந்தவைநித்
  தியமும் அருந்தி வீடடைந்தார். (15)

858. இந்த விரத மான்மியங்க
  ளியாவர் சிலர்கள் படிக்கின்றோர்
வந்து மகிழ்ந்து கேட்கின்றோர்
  மற்றும் வியப்பாற் கேட்பிப்போர்
சிந்தை மகிழ்ந்து கயிலாயஞ்
  சேர்ந்து பின்னர் வீடடைவார்
பந்தம் அகற்றுஞ் சிவவிரதம்
  பணிந்தோ ரெட்டும் பகர்ந்தனனால். (16)

---

## அத்தியாயம் 35.

## சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### கௌரி வெள்ளி விரதம்

**கௌரி வெள்ளி விரதம்** சித்திரை மாதம் சுக்லபக்ஷம் வெள்ளிக்கிழமையில் அநுட்டிக்க வேண்டியது. காலையில் எழுந்து கௌரியைத் தியானித்து, நீராடி, நித்திய கடன்களை முடித்து, கும்பத்தில் நீர் நிறைத்து, அதைத் தேவியாகக் கருதி, அதற்குத் தருப்பை, மாலைகள் செருகி, அதைப் பீடத்தில் இருத்தி, மலர்ப் பூஜை செய்து, பலவித நிவேதனம் வைத்து, எட்டு சுமங்கலிகள் அல்லது எட்டு கன்னிகைகளை உபசரித்துத், திருக்கோயிலுக்குச் சென்று சிவபிரானையும் தேவியையும் வலஞ் செய்து வணங்கி 'உச்சிப் பொழுதிலும் இரவிலும் அடியாரொடு அப்பம் முதலிய உண்டோ, உண்ணுமலோ தூங்கி இந் நோன்பை முடிக்க வேண்டியது. இங்ஙனம் நோற்பவர்க்குத் தேவி வெளிப்பட்டு உடனே பெருஞ் செல்வத்தை அளிப்பாள்.

### நோற்றுப் பேறு பெற்றோர்

முதலாகச் **சுக்கிரன் (வெள்ளி)** இந் நோன்பை நோற்றதால் இந் நோன்புக்கு **வெள்ளி விரதம்** எனப் பேர்வந்தது. சுக்கிரன் நோற்று நல்ல வரங்களைப் பெற்றான். **இலக்குமி** நோற்றுக் கலியை அகற்றும் நிறை செல்வத்தை அடைந்தாள். **கலைமகள்** நோற்றுச் சகலகலா வல்லி யானாள். அரசர்கள் அநேகர் நோற்றுப் பூமி, கலை, சற்புத்திரர் மிக்க வாழ்வு இவை உற்றனர். அந்தணர்கள் நோற்று நன்மக்களை அடைந்தார்கள். வணிகர்கள் பூசித்துப் பொன்னும் மகவும் பெற்றார்கள். உழவர் நோற்று நிறைந்த விளைவைப் பெற்றார்கள். சிவனடி விரும்பினோர் சிவனடி கூடினர்.

### (ii) கவுரிவிரதம்

தேவிக்கு உரிய பிறிதொரு விரதம் '**கவுரிவிரதம்**'. ஐப்பசி மாதத்திற் பௌர்ணமி திதியிற் பரணி நாளில், காலையில் எழுந்து, கடன்களை முடித்து, கவுரிவெள்ளி விரதத்தைப் போன்ற முறையில் நோற்க வேண்டியது. அன்றைய தினத்திற் பயறும் வெல்லமும் கலந்து உண்டு, மறுநாள் மெய்யடியார் களுடன் உண்ணவேண்டியது. இவ் விரதத்தை நோற்றுச் **சசி** இந்திரனை மணக்கப்பெற்றாள். சூரியன் மனைவி **உஷாதேவி** (உஷை) நோற்று, சூரியனது வெப்பநோய் நீங்கப்பெற்றாள். அநேகர் இவ் விரதத்தை நோற்று இறைவனடி கூடினர்.

### (iii) நவமிவிரதம்.

**நவமி விரதம்.** ஐப்பசிமாதம் முதற்பக்ஷம் பிரதமையிற் கும்பத்தில் தேவியை ஆவாகனம்செய்து, கௌரிவெள்ளி விரதம் அநுட்டிக்கும் முறையில் தினமும் தொழுது, நவமி அதிகாலையில் எழுந்து நீராடி, நித்திய கடன்களை முடித்துத் தேவியை அருச்சித்து, ஒன்பது பெண்களுக்கு ஆடைகள் உதவி, நெய்யப்பம், நகைவகைகள், பாயசம் முதலியன அவர்களுக்கு உண்ண அளித்து, பின்பு அடியார்களுடன் தான் உண்டு மறுநாள் தசமியன்று நித்தியக் கடன்களை முடித்துத், தேவியை தரிசித்து அடியார்களுடன் உண்ணவேண்டும். இவ் விரதத்தைத் **திருமால்** நோற்று பகைவர்களை வென்றார். இவ் விரதத்தைச் சிலர் நோற்று விஜயசத்தி, வீரசத்தி, பாக்கியசத்தி, பலசத்தி அடைந்து ஈற்றில் சிவனடி சேர்ந்தார். இவ் விரதத்தை அன்புடன் நோற்பவர் சகல சித்தியும் பெற்று வீடு அடைவர்.

இம் மான்மியத்தைப் படிப்போர், கேட்போர் சகல பேறுகளையும் பெற்றுச் சிவனடி கூடுவர்.

# அத்தியாயம் 35.

## சிவவிரத மான்மியம்-தொடர்ச்சி

### (i) கவுரி வெள்ளி விரதம்

#### எழுசீர் விருத்தம்

859. அருந்த வக்கிழமை பூண்டு யோகிலுணர்
அந்த ணீரினிது கேண்மின்மெய்
வருந்த வெய்துறல்செய் பாத கத்தொகுதி
மாற்றி நன்கருள் வழங்குசீர்
பொருந்தி டுங்கவுரி வெள்ளி நாள்விரத
பொற்பின் மான்மியம் இயம்புகேன்
திருந்து மேடம்வளர் பக்க மீதுவெளி
சேருநாள் விரதம் ஆகுமால். (1)

860. கனைத்து வண்டொடு சுரும்பு மூசிமல
கரியி ராகமுரல் காலையில்
நினைத்தெ ழுந்துகவு ரியையு ளத்தினிடை
நேயமோடு கருதித் திரை
யனைத்தும் வெண்டரளம் வீசு தண்புனலில்
ஆடி நித்தியகன் மஞ்செய்தே
தனைத்து லங்கியருள் நாரி மெய்வடிவு
தானெ னக்கருது வானரோ. (2)

861. கும்ப மீதுதெளி நீர்நி றைத்துவளர்
குசைகள் மாலைகள் செருகியே
யிம்பர் வேதிகை யிருத்தி மற்றதில்
எழுந்திடைக் கிடர்இழைத் துமேல்
வம்பு லாமுகிழ் முலைத்த னங்கொளுமை
மாதை யோங்குகய மலரினல்
நம்பு காதலொடு பூசை செய்துநா
னுவி தோதனம ருத்தியே, (3)

---

859 மேடம்-சித்திரை, வளர்பக்கம்-சுக்லபக்ஷம்; வெளி-வெள்ளி.

860. மலகரி-குறிஞ்சிப் பண்வகை.

861. கயமலர்-நீர்ப்பூ; வம்பு-கச்சு.

862. குமிழ்-குமிழம்பூப் போன்ற மூக்கு. சுமங்கலிகள் எண்மர் அல்லது கன்னியர் எண்மர்.

862. அஞ்ச னக்குவளை தீட்டி வார்குழைகள்
ஆட கக்குழை யடர்த்துநீள்
வெஞ்ச மம்பொரு திழைத்து நன்குமிழின்
மீண்ட வேல்விழி மலர்ச்செவ்வாய்
வஞ்சி நுண்ணிடை நெருங்கு கொங்கைமண
மாதர் நாலிருவ ராகுதல்
அஞ்சொல் கொஞ்சியகன் னியர்கள் நாலிருவ
ராதல் போற்றிவழி படுகுவான். (4)

863. ஓவி யற்குமெழு தரிய சித்திர
வுருக்கு டங்கையில் அடங்கலாக்
காவி மைக்கண்மட மாத ருக்குநிதி
கடித மைத்தமலன் ஆலயம்
மேவி வெற்பரையன் மாதை முக்கணனை
மிருவ லஞ்செய்து வழுத்தியே
பூவி னிற்சிரம் உறப்பணிந்து பொருள்
புனித னுக்குதவி நோற்றபின், (5)

864. ஓங்கு பாரிருள் துரக்கும் அண்ணல்வரும்
உச்சி யம்பொழுது தானிருள்
வீங்கு நல்லிரவு தான்வி ரைந்துபுலன்
வென்ற மெய்யடிய ரொடுபலந்
தேங்கு நெய்யிலடும் அப்ப மாதிகள்
தெரிந்த ருந்தவல துணவொரீஇத்
தூங்க அன்றியுண வுண்டு நோற்றிடுக
சுக்ர வாரவிர தத்தையே. (6)

865. அரிகு ரற்பல சுரிவ ளைக்குலம்
அடங்க லுங்கரையில் எற்றுநீர்
விரிதி ரைப்புணரி யதன்நிலத்திலரு
வெள்ளி நாள்விரத நோற்றவற்(கு)
எரித ழுற்கனக மணியி ழைக்கவுரி
யெதிர்வெ ளிப்படமுன் வந்துசீர்
பிரிவ றப்பெருகு நிதிம ணித்தொகுதி
பினையெ னாதருள்வள் உண்மையே. (7)

---

864. தூங்க-தூங்குக.

865. புணரி அதன் நிலம்-கடல் ஆடை கொண்ட பூமி; பினை-பின்னை.

### சுக்கிரன் நோற்றது

866. வள்ளி கேள்வனை யளித்த பார்ப்பதி
வரத்தி னுனிவ்விர தத்தைமுன்
வெள்ளி பார்மிசையில் ஆற்றி யன்றுமுதல்
வெள்ளி நாள்விரதம் என்றுபேர்
தெள்ளி யேதனது பெயரி ருத்தியொளி
சேர நல்வரம் அளித்துநீர்
துள்ளி யேபிறழ் கயற்கண் மாதிலகு
சோதி யோடுபின் மறைந்தனள். (8)

### இலக்குமி நோற்றது

867. மைய கட்பவள இதழ்ம ணிக்கலச
வனமு லைப்பசிய கொடியிடை
செய்ய பொற்கமல நிறைபொ ருட்டினுறை
திருவு மிக்கவெளி விரதமே
கையில் வைத்தநெலி யெனவி ழைத்துவரு
கலிய கற்றிதிரு மலியவே
துய்ய மெய்க்கவுரி பதம லர்த்துணைகள்
தொழுது போற்றுலகில் உலவினள். (9)

### கலைமகள் நோற்றது

868. வேத னுவுறை சுவேத கோகனக
மேவு வாணிவெளி வாரமே
யாதர் வாழ்கவுமை மாது பேரருள்கொ
டாளு மாவிரத மாமென
ஓத நீருலகில் வேத நான்முறையில்
ஓகை யோடுவழி பாடுசெய்(து)
ஏத மாதிதுகள் தீர நீள்கலைக
ளியாவு மேவியறி வாயினள். (10)

### அரசர் முதலியோர் நோற்றது

869. கான விஞ்சைபெடை சூழ னங்களொடு
காளை வண்டுமுறை பாடியே
தேனு டைந்தொழுகு தார்கு டைந்துவழி
தேற லுண்படலை வேலினோர்
ஆன பைம்பொன்முடி யோர னந்தர்விர
தாதி யன்பொடுசெய் தாழிசூழ்
மாநி லங்கலைகள் ஞான மைந்தர்மிகு
வாழ்வ டைந்தனரெந் நாளுமே. (11)

---

866. வரத்தினன்-வரத்தினல்; வெள்ளி-சுக்கிரன்.
868. வேதன் நாஉரை; சுவேதம்-வெள்ளை; கோகனகம்-தாமரை. ஆதர்-அறிவிலார்
869. படலை-மாலை.

870\. சந்தி வந்தனை புரிந்த அந்தணர்
தவந்தெ ரிந்திவ்விர தஞ்செய்தே
கந்த குங்கும நரந்த சந்தன
கதம்ப முந்திமிர் தனங்கள்பா
ரந்த ரந்திரி திவம்ப யந்துபொ
யரும்பெ னும்படி முதிர்ந்திடா
மந்த ரங்களென நின்ற சுந்தரி
வரங்க ளின்புதல்வர் கொண்டனர். (12)

871\. நயங்கு கின்றகுரு விந்த மாதிபகர்
சாதி நால்வகைய தாகவே
புயங்க நண்பகல் பயந்த காலையெழு
போது நேர்பதும ராகமோ(டு)
இயங்க னந்தவிதம் என்ற மாமணிக
ளீது லாபமெனும் நாய்கர்தாம்
மயங்க டிந்திவ்விர தம்ப ராவிமக
வாட காதிமல்கி னரரோ. (13)

வேறு

872\. கருணை பெருகுமுமை மகிழ விரதவிதி
கருதி யுழவர்சிலர் தொழுதுவாழ்
திருவு நிறையவிளை கழனி நகரும்வளர்
சிறுவர் திரளுமணு கினர்கள்;சீர்
மருமிவ் விரதமுறு சிலர்கள் கருதுசுக
மருவி யமலனிட மமலமே
வருகி லுறையமலன் உருவம் அணுகினபின்
அமலன் அடியிணையெய் தினர்களே. (14)

வேறு

(ii) கவுரி விரதம்

873\. முதுகுடுமி யிமையவரை யுமைவிரதம் உரைசெய்தனன்
முனிவிர்!இனம் ஒருவகை சொல்கேன்
பதுமமலர் கருகஇம வுறைசிதறு குளிர்விரவு
பருவமுறு துலைமதியி னீள்

---

870\. பார்-அந்தரம்; திரிதிவம்-சொர்க்கம்; அரும்பு பொய்யெனும்படி முதிராத முலை.
வரங்களின்-வரங்களால்

871\. குருவிந்தம்-ஒருவகை மாணிக்கம்
நண்பகல் பயந்த காலை யெழுபோது-உச்சிவேளை வரும்போது.
புயங்கம் நேர் பதுமராகம்-பாம்பு தருகின்ற மாணிக்கம்.
மயம்-செருக்கு. மகவு ஆடகம் ஆதி-பிள்ளைகளும் பொன்னும்.

விதுநிறைய வளர்திதியில் வருபரணி யருள்கவுரி
விரதமிதில் இரவி யெழுபோ(து)
அதிககன வொருவிநிய திகள்செய்தொளிர் புகர்விரதம்
அனையவழி யடைவு புரிவோன். (15)

874. பரனடியர் மகிழ்வியல் பொருளுதவி நிலையமிசை
பகவனுமை சரண மலர்தூய்
அரகரென முறைபரவி நிதியுதவி வளனுறையுள்
அணுகிமுளை சிறுப யறுகூர்
இரதகுள மொடுபருகி மறுதினமெய் யடியருடன்
இனியவுண வயிறல் புரிவான்;
விரவியவிவ் விரதமுணர் சசிதொழுது மகபதியை
விழவின்மரு வினள்க ருதியே. (16)

875. கருதியிரு குழையிடறு மதர்விழிவெண் ணகையமுத
கலசமுகிழ் முலையு மைசயுமே
சுருதிநெறி முறைகருணை யுமைவிரதம் ஒருமையொடு
தொழுதுபினர் அழல்க துவவே
பருதியுடல் சரசரென வருபிணிகள் ஒருவல்செய்து
பரவினள்; பின் அளவி லர்கள்தாம்
மிருதிவழி விரதமிது பரவிமுனம் அரியகதி
விமலனடி குறுகி னர்களே. (17)

## (iii) நவமி விரதம்

### எண்சீர் விருத்தம்

876. மரகதப்பா சடைதுளவக் கருங்கேழற் பைங்கூன்
மணிமருப்ப ரேந்துலகின் மல்குவெளி றெறிந்த
பரவுகதி தருகேள்வி யருமுநிவீர்! விழைந்த
பயனுதவு துலைநவமி யருவிரதம் உரைக்கேன்

873. இனம்-இன்னும். இம உரை-பனித்துளி.
துலைமதி-ஐப்பசி மாதம். விது-சந்திரன்
கனவு-துயில்.
புகர் விரதம் அனைய வழி அடைவு புரிவோன்: சுக்கிரவார விரதம் போன்ற முறையில் அநுட்டிப்பவன்.
புகர்-சுக்கிரன்.

874. உறையுள்-வீடு; குளம்-வெல்லம்.

875. உசை-உசாதேவி. உழை-சூரியன் மனைவி; மிருதி-ஸ்மிருதி.

பிரதமையா முதற்பக்க முதலாய்நித் தியநீர்
　　பெய்துநிறை கும்பத்திற் பெறுமாயேச் சரியை
விரவுபுகர் வாரவிதிப் படிபோலத் தினமும்
　　விரைமலர்கள் தூய்த்தொழுது விரும்பியருச் சித்தே. (18)

877. நவமியிருள் புலர்காலைத் துயிலொருவிப் புனித
　　நதிமூழ்கிச் செயுநியதி நன்குமுடித் தொழியாப்
பவமகல அடியர்விழைந் தனஅருளம் பிகைபொற்
　　பாதமலர் அருச்சித்துப் பருமணிப்பூண் அணிந்த
குவவுமுலைத் தெரிவையரோன் பதின்மர்தமக் காடை
　　கொடுத்திழுதிற் சமைந்தஅப்பம் இனியவியஞ் சனங்கள்
உவமையில்பா யதநுகர்வித் தடியருடன் தானும்
　　உவந்தருந்தி மறுதினமும் உறுதுயில்விட் டெழுந்தே,(19)

878. தசமியிற்செய் கடன்முடித்த திறந்தெரிசித் தடியார்
　　தங்களுடன் அருந்திடுக சாற்றிடுமிவ் விரதம்
இசைமுரலும் அளிகுலவு பசுந்துளவக் கடவுள்
　　இழைத்துமரு வலர்ச்சயித்தான் இதுசிலர்நோற் றுலகில்
விசயசத்தி வீரசத்தி வித்தியா சத்தி
　　மேவியபாக் கியசத்தி மிக்கபல சத்தி
திசைகளதி சயிக்கமரீ இ யரும்போகந் துய்த்துச்
　　சிவலோகம் அடைந்துபரன் சேவடிசேர்ந் தனரே. (20)

எழுசீர் விருத்தம்

879. எரிவிழிப் பருமா சுணமணிக் கிடந்த
　　இருநிலத் தியாவரிவ் விரதம்
பரிவினிற் புரிவோர் சகலசத் திகளும்
　　படைத்துவீ டடைவரியா வர்களென்
தெரிதர விரித்திக் கதையினைப் படிப்போர்
　　செவியமு துகுத்திடக் கேட்போர்
வரிசைகள் அனைத்தும் படைத்தவிர் கடுக்கை
　　மலர்ச்சடை வள்ளல்தாள் அடைவார். (21)

---

876. துளவம்-துளசி; மருப்பர்-மருப்பு; (கொம்பு)
வெளிறு-அறியாமை; மாயேச்சரி-மகேசுரி
புகர்வாரம்-சுக்ரவாரம்.

877. இழுது-நெய்; வியஞ்சனங்கள்-கறிவகைகள்.

878. மருவலர்-பகைவர்.